# இந்து மத ஸாரம்




மொழி பெயர்த்தவர்

சுவாமி பரமாத்மாநந்தர்





ஸ்ரீ [illegible] மகிருஷ்ண மடம்

மயிலாப்பூர் :: [illegible]சன்னை-4

# இந்து மத ஸாரம்




மொழி பெயர்த்தவர்
சுவாமி பரமாத்மாநந்தர்



ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் :: சென்னை-4

இஃது சென்னை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்துத் தலைவரால்
வெளியிடப்பட்டது

மூன்றாம் பதிப்பு

XII—1—67

ஆர் . அச்சகம், மயிலாப்பூர், சென்னை-4.

# முகவுரை

'இந்து மத ஸாரம்' என்னும் இந்நூல் 'ஒரே பார்வை யில் இந்து மதம்' எனும் பெயரோடு ஸ்ரீ சுவாமி நிர்வேதா நந்தர் ஆங்கிலத்தில் எழுதிய அரிய முதனூலின் மொழி பெயர்ப்பாகும். அப்பெயர்க்கியை இது, பல பிரிவுக ளோடும் பல பிரமாண சாஸ்திரங்களோடும் கூடித்திகழும் இந்து மதத்தின் மிக முக்கியமான பகுதிகளை யெல்லாம் திரட்டிச் சுருங்கக்கூறி விளங்கவைக்கும் ஒரு நூலா கின்றது. இது பரந்த விரிந்த ஸமரச மனப்பான்மையோடு எந்த மதப் பிரிவின் கொள்கைக்கும் இடர்ப்பாடு சிறிதும் உண்டாகாதவாறு, மிக்க கவனத்தோடு உண்மை வழாது இயற்றப்பட்டுள்ளது. இதன் முதற் பகுதியில் இந்து மத சாதனங்களும், இரண்டாவது பகுதியில் அதன் தத்துவ சம்பந்தமான கருத்துகளும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

மத நூல்களிற் பெரிதும் ஆளப்படுவனவும், மக்க ளுடைய வழக்காற்றில் உள்ளனவுமான வடமொழிகளை உபயோகிக்கும் அவசியம் ஏற்படும்போது, முதன் முறை அம்மொழிகட்குச் சரியான தமிழ்ப் பதங்களும் தரப்பட் டுள்ளன. அம்மொழிகளின் பொருள்கள் விரிவாகப் பன் முறையும் தனித்தனி அத்தியாயங்களில் விளக்கப்பட் டுள்ளன.

இந்து மதத்தின் பற்பல பிரிவுகளையும் பற்றிச் சிறப்பாகக் கூறும் வெவ்வேறு நூல்கள் இருப்பினும், பொதுப்பட இந்து மதத்தைப்பற்றிக் கூறும் நூல் ஒன்று தமிழில் தற்கால மக்கட்கு இல்லாத குறையை நீக்குதற் பொருட்டே இந்நூல், முதனூல் ஆசிரியரின் அனுமதிபெற்று, மொழி பெயர்க்கப்படுவதாயிற்று. தமிழகத்தார் இந்நூலைக் கற்றுத் தமது பழம் பெரு மதத்தின் சீர்மையினை அறிந்து இன்புற்று உய்வாராக.

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர், சென்னை 1-2-'52

ஆக்கியோன்

# உ ள் ளு றை


| | | | பக்கம் |
|---|---|---|---|
| 1. | முன்னுரை | ... | 1 |
| 2. | தருமம் | ... | 5 |
| 3. | இந்து சாஸ்திரங்கள் | ... | 13 |
| 4. | ஸம்ஸாரம் | ... | 22 |
| 5. | முக்தி | ... | 29 |
| 6. | பிரவிருத்தி மார்க்கம் | ... | 36 |
| 7. | பிரவிருத்தி மார்க்கம் (தொடர்ச்சி) | ... | 42 |
| 8. | நிவிருத்தி மார்க்கம் | ... | 50 |
| 9. | இராஜயோகம் | ... | 57 |
| 10. | ஞானயோகம் | ... | 66 |
| 11. | பக்தியோகம் | ... | 78 |
| 12. | பக்தியோகம் (தொடர்ச்சி) | ... | 92 |
| 13. | கருமயோகம் | ... | 104 |
| 14. | சமய குரவரும் சாஸ்திரங்களும் | ... | 124 |
| 15. | ஈசுவரன் | ... | 133 |
| 16. | பிரம்மாண்டம் | ... | 144 |
| 17. | பிரம்மாண்டம் (தொடர்ச்சி) | ... | 152 |
| 18. | பிரம்மாண்டம் (தொடர்ச்சி) | ... | 163 |
| 19. | ஜீவன் | ... | 173 |
| 20. | கிரியைகளும் புராணமும் | ... | 196 |
| 21. | இந்துக்கள் காணும் வாழ்க்கைக் காட்சி | ... | 220 |
| | பொருளகராதி | ... | 241 |

## சுருக்கங்கள்

| | | |
|---|---|---|
| ஈசா. உப(நி) | — | ஈசாவாஸ்ய உபநிடதம் |
| ஐதரே. உப(நி) | — | ஐதரேய உபநிடதம் |
| கட. உப(நி) | — | கட உபநிடதம் |
| சாந்(தோ). உப(நி) | — | சாந்தோக்ய உபநிடதம் |
| சுவேதா. உப(நி) | — | சுவேதாஸ்வதார உபநிடதம் |
| தைத். உப(நி) | — | தைத்திரிய உபநிடதம் |
| பிரம். சூ | — | பிரம்ம சூத்திரம் |
| பிரஹ. உப(நி) | — | பிரஹதாரண்யக உபநிடதம் |
| மாண்டு. உப(நி) | — | மாண்டூக்ய உபநிடதம் |
| முண்ட. உப(நி) | — | முண்டக உபநிடதம் |

# இந்துமத ஸாரம்

## 1
## முன்னுரை

இந்து மதம் உலகத்திலுள்ள பெரிய மதங்களில் ஒன்று, இதைத் தழுவுவோர் சுமார் முப்பது கோடி மக்கள் இந்தியாவில் வாழ்கின்றனர்; இவர் இந்துக்கள் எனப்படுவர்.

மிக நெடுங்காலமாக இந்தியா இந்து மதத்தின் தாயகமாக இருந்து வந்துள்ளது. அது இவ்வளவு காலம் என்று எவரும் வரையறுத்துக் கூற இயலாது. அது இருபதினாயிரம் வருடங்களாதல் வேண்டும் என்று சிலர் கூறுகின்றனர், வேறு சிலரோ அது மூவாயிர வருடங்கட்கு மேற்பட முடியாது என்று கருதுகின்றனர். அது எவ்வாறாயினும் ஆகுக, இந்து மதம் பல்லாயிர வருட வாழ்வுடையது என்பதும், உலகத்திலுள்ள வேறெந்தப் பெரிய மதத்தைக் காட்டிலும் முதிர்ந்த வயதுடையது என்பதும் உண்மைகளே. இவைகளைப்பற்றி ஐயம் யாதும் இல்லை.

மிகப் பழைய காலத்தில் இந்து மதத்தை ஆரிய மதமென்றும், அதைச் சார்ந்தவரை ஆரியரென்றும் அழைத்தனர். இந்தியாவிலேயே முதன் முதலாக அவர் வாழ்ந்த இடம் பஞ்சாப் என்பதே. பஞ்சாப்பில் இருந்த ஆரியர் எங்கிருந்து வந்தனர் என்பதை இதுவரை ஒருவராலும் முடிவாகக்கூற முடியவில்லை. ஆரியரின் ஆதி உறைவிடத்

தைப்பற்றிப் பலப்பல பண்டிதர் வெவ்வேருன கருத்துக்களை வெளியிட்டுள்ளனர்; அந்த இடம் ஆர்ட்டிக் மண்டலம் என்பதாகவும், மத்திய ஆசியாவின் பெரும் பீடபூமி என்பதாகவும், மத்தியதரைத் கடலின் கரையோரம் என்பதாகவும், இன்னும் பலவாருகவும் கூறுகின்றனர். ஆரியர் இந்தியாவிற்கு வெளியே உள்ள ஓரிடத்திலிருந்து வந்தவரல்லர் என்பதே சுவாமி விவேகாநந்தரது உறுதியான நம்பிக்கை.

ஆயினும், பஞ்சாப்பிலிருந்து ஆரியர் நாளடைவில் வட இந்தியா முழுவதும் பரவலாயினர்; அப்போது அப்பிரதேசம் 'ஆர்யாவர்த்தம்' எனப் பெயர் பெறலாயிற்று. காலஞ் செல்லச் செல்ல, அவர் விந்தியமலைத் தொடரைக் கடந்து, தென்னிந்தியாவில் தமது மதத்தைப் பரப்பி வந்தனர். அகஸ்தியர் எனும் பெயருடைய ஓர் ஆரிய முனிவர் ஆரியரைத் தென்திசை நோக்கிச் செலுத்தினர் என்ப.

ஆரியர்க்கு இந்துக்கள் எனும் பெயர் எவ்வாறு உண்டாயிற்று என்பதை ஒருவர் அறிய விரும்பலாம். இந்து எனும் பெயர் வந்தவகை ஒருவாறு வேடிக்கையானதே. பஞ்சாப்பிலே பழைய ஆரியர் குடியேறியிருந்த இடத்திற்குச் சிந்து நதியே மேற்கெல்லையாயிற்று. நதியின் எதிர்க்கரையில் வாழ்ந்தவர் பண்டைக்கால ஐரானியர் (பாரசீகர்). இந்நதியின் பெயரைக் கொண்டே ஐரானியர் ஆரியரை அழைக்கலானுர். ஆனுல் அவர்க்குச் சிந்து என்ற பெயரைச் சரியாக உச்சரிக்க முடியவில்லை; அதை ஹிந்து என்றனர். ஆதலின் ஆரியர்க்கு ஐரானியர் இட்ட பெயர் 'ஹிந்து' என்பதாயிற்று. நாளடைவில் ஆரியர் தாமே இப்பெயரை ஐரானியரிடமிருந்து பொறுக்கிக் கொண்டனர்.

'இந்து' என்ற பெயரும் மிகமிகப் பழமையானது. இந்துக்கள் இந்தியா முழுவதும் பரவின காலத்து, அந்நாடு முழுவதும் இந்துஸ்தானம் எனப் பெயர் பெற்றது.

இந்துஸ்தானம் பல ஞானியர்க்கும் பல முனிவர்க்கும் பல சமயாசாரியர்க்கும் பிறப்பிடமாக இருந்துள்ளது. பலப்பல நூற்றுண்டுகளாக அது மதம் விளையும் நாடாகச் சிறப்படைந்துள்ளது. இந்நாட்டின் குன்றுகளும் மலைகளும் ஆறுகளும் ஏரிகளும் கடல்களும் நகரங்களும் மதத்தின் கை தொடப்பெற்றுப் புனிதமாக்கப்பட்டுள்ளன. புனிதமான இவ்விடங்கள் நாடெங்கும் சிதறிக் கிடத்தலின், இந்துஸ் தானம் உண்மையாகவே புனித நாடாகின்றது. நெடுங்கால மாக இந்துஸ்தானத்தின் பற்பல மூலைகளிலிருந்தும் எண்ணி றந்த யாத்திரிகர் இப்புண்ணிய தலங்களைக் காணவேண்டி அங்குமிங்குமாக விரைந்து வந்துள்ளனர். மேலும் இந்நாட் டினரது வாழ்க்கையை இவ்வளவு காலமும் ஆட்டி வைத்து வந்துள்ள முக்கிய சக்தியும் மதமே.

இந்துக்களின் சீரிய பண்பாட்டு வளத்தை ஈன்றதும் அவர்தம் மதமே. மிகப் பழங்காலத்தும் இந்துக்கள், சித்திரம் சிற்பம் கட்டடமமைப்பு இசை கவிதையாகிய கலைகளில் உயர்தரத் திறமையைக் காட்டியுள்ளனர். இலக்கணம், மொழி நூல், தருக்கம், வான நூல் (சோதிடம்) மருத்து வம், ரணவைத்தியம் போன்ற பல வகையான பொருள் களைப்பற்றிப் புலமை வாய்ந்த நூல்களை எழுதியுள்ளனர்; இராஸயன நூலில் அருமையான ஆராய்ச்சி செய்துள்ளனர்; யந்திர மியற்றல் நீர்வசதி யமைத்தல் கப்பல் செய்தல்— இவைகளிலும் வேறு பல கலைகளிலும் தொழில்களிலும் தாம் ஆச்சரியமான திறமை பெற்றிருந்தமைக்கு அசைக்க முடியாத சான்றுகளையும் விட்டுப்போயுள்ளனர். இவை யாவும் மதத்திலே வேரூன்றியிருந்தன; இவற்றிற்கு அடிப் படையான கருத்துக்களும் இலக்ஷியங்களும் பெரும்பாலும் இந்து முனிவர் ஊட்டிய ஞான ஊக்கத்தின் பயன்களாயின.

காலப் போக்கிலே இந்துக்களின் பெரு மதத்தினின்றும் இரு பலமான கிளைகள் உண்டாயின. அவையாவன: சமண

மதமும் பௌத்த மதமும். இந்து மதமும் அதன் பிரிவாகிய பௌத்தமதமும் இந்துஸ்தானத்தின் எல்லைகளையும் தாண்டி அப்பால் பரவலாயின. இலங்கை, பர்மா, ஸயாம், கம்போடியா, கொச்சின்–சைனு, மலயா, ஜாவா, பாலி, சுமாத்ரா, சைனு, கொரியா, ஜப்பான், ஆப்கானிஸ்தான், துருக்கிஸ்தான் போன்ற தேசங்கள் இம்மதங்களில் ஒன்றின் ஆட்சிக்கோ இரண்டுக்குமோ உட்படலாயின. வெகு தொலையிலே வட அமெரிக்காவிலுள்ள மெக்ஸிகோவிலும் இந்து நாகரிகத்தின் சின்னங்கள் கற்ருேரின் கண்கட்குத் தென்பட்டுள்ளன. இந்த அயல் நாடுகளிலுள்ள மக்கள் இந்துக்களின் மேன்மையான பயிற்சியை மகிழ்ச்சியோடு வரவேற்றனர். இந்துக்கள் பலத்தாலோ தந்திரத்தாலோ பிற மக்களின் மீது தமது மதத்தை ஒரு நாளும் சுமத்தமாட்டார். சாந்தி, அன்பு, பரிவு, தொண்டு--இவையே அவர்தம் கொள்கைகளாயின. அவர் சென்றவிடமெல்லாம் அங்கங்கே வாழ்ந்த மக்களின் வாழ்க்கையைப் பண்படுத்தி உயர்த்தி வரலாயினர்.

இந்துஸ்தானம் கீழை நாடுகளின் நாகரிகத்திற்குத் தாயாயிற்று என்பது உறுதியே. மேலை நாட்டினரின் நாகரிகத்தைத் தாலாட்டி வளர்த்த பண்டைய கிரீசு நாட்டிற்கும் இந்துக்களின் கருத்துக்கள் சென்றன; இவ்வுண்மையை நிலநாட்டச் சான்றுகள் முன்னமே கிட்டியுள்ளன. (‘இந்தியா அளித்த காணி’—பக்கங்கள் 1–34).

இந்து மதத்தின் நூற்ருண்டுக் கணக்கான வாழ்க்கையிலே அதன் பருமனும் அதிலுள்ள பகுதிகளின் தொகையும் பெருகலாயின. அதன் வரம்பிற்குள் இன்று வைணவம், சாக்தம், சைவம், ஸௌரம், காணபத்யம் முதலிய பல கிளைமதங்களும் இடம்பெற்றுள்ளன. மேலும் இக்கிளை மதம் ஒவ்வொன்றினுள்ளும் பலவகையான வெவ்வேறு பிரிவினர்க்கும் இடம் அமைந்துள்ளது. அம்மட்டோ!

சமணர், பௌத்தர், சீக்கியர், ஆரிய சமாஜத்தினர், பிரம்ம சமாஜத்தினர் என்போரின் நெறிகளும் இந்து மதத்தினின்றே கிளம்பலாயின.

சொற்ப காலமாக இந்துக்களின் பழைமையான மதம் மேற்கே வெகு தொலையிலும் தனது உபதேசத்தைப் பரப்பிக்கொண்டு வருகிறது. ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் பலர் வாழ்க்கையின் மீது இந்து செலுத்தும் நோக்கினை மதிக்கக் கற்று வருகின்றனர். அவர்களிற் சிலர் இந்து மதக் கருத்துக்களையும் இலக்ஷியங்களையும் உண்மையாகப் பின்பற்றவும் துணிந்து முன்வருகின்றனர்.

இந்துக்களின் பெருமையுற்ற மதம் மக்களனைவர்க்கும் நன்மை யளித்தற்குரிய ஒரு பெரும் சக்தி என்பது மெய்யே. கழிந்த காலத்திலே இம்மதம் அருஞ் செயல் புரிந்து அவ்வளவு புகழொடு விளங்கும் திறமை பெற்றதற்கும் இதுவே காரணம். இதனாலே, வருங்காலத்தில் இம்மதம் முன்னினும் மேன்மை பெறும் விதியுடையதாகும் என்று இந்துக்கள் நம்புதற்கும் காரணங்கள் உளவாகின்றன.

இம் மதத்தில் அடங்கியுள்ள ஸாரமான பாகங்கள் பின் வரும் பக்கங்களில் சுருக்கியும் தொகுத்தும் கூறப்பட்டுள்ளன.

## 2

# தருமம்

### 'மதத்'திற்கு இந்துக்கள் கொள்ளும் பொருள்

'மதம்' என்னும் மொழி நம்பிக்கையும் வழிபாடும் கலந்தமைந்த ஒரு தொகுதியைக் குறிக்கின்றது. மேலை நாட்டினர் மதத்தை அறிந்த முறைப்படி, மதசிரத்தை உடையவனுக்கு வேண்டுவனவெல்லாம், குருமார் கூறும் கொள்கைகளில் நம்பிக்கையும், அவரால் விதிக்கப்படும் சில கிரியைகளைச் செய்தலுமே.

இந்துக்களது மொழியாகிய 'தருமம்' என்பதற்கு 'மதம்' என்னும் மொழிக்குரிய பொருளைக் காட்டிலும் மிக ஆழ்ந்த பரந்த பொருள் உள்ளதாகத் தோன்றுகிறது. 'தரித்தல்' என்று பொருள்படும் வடமொழித் தாதுவினின்றும் பிறக்கும் 'தருமம்' எனும் மொழி, ஒரு பொருளின் இருப்பைத் தரிப்பது (தாங்குவது) எதுவோ, அதைக் குறிக்கின்றது. உலகத்திலுள்ள ஒவ்வொன்றுக்கும் அததற்குரிய 'தருமம்' உள்ளது; எப்படியெனில், அததன் இருப்பிற்கு ஏதேனும் ஓர் ஆதாரம் கட்டாயம் வேண்டுமன்றோ? ஒரு பொருளின் இருப்பு முக்கியமாக எதைச் சார்ந்து நிற்கிறது? அது அப் பொருளின் இன்றியமையாத இயல்பே; அதுவின்றி அப் பொருள் ஒருகாலும் இருக்க முடியாது. ஆதலின் ஒரு பொருளின் இன்றியமையாத இயல்பே அதன் 'தருமம்' எனப்படும். உதாரணமாக, எரிக்கும் சக்தியே தீயின் 'தருமம்' ஆகும்; தன்வய மின்மையே உயிரற்ற பொருள்கள் யாவற்றிற்கும் உரிய 'தருமம்' ஆம். படைப்பிலுள்ள மற்றப் பொருள்களினின்றும் வேறான ஒன்றாக, மனிதனது இருப்பைத் தரிக்கும் ஓர் இன்றியமையாத இயல்பு அவனிடமும் உள்ளது. அதுவே மனிதனது 'தருமம்'—அதாவது, 'மானவ தருமம்'—ஆகவேண்டும்.

மனிதனது இன்றியமையாத இயல்பு யாது? தெய்வத் தன்மையை அடையும் திறமையே மனிதனை மற்றெல்லா உயிர்களினின்றும் வேறுபடுத்திக் காட்டுகிறது என்பது இந்துக்களின் கொள்கை. இக்காரணத்தால் இத்திறமையே 'மானவ தருமம்' ஆகும்.

ஆனால் மனிதனுக்குத் தெய்வத் தன்மையை அடைதல் எவ்வாறு இயலும்? காரணம், தெய்வத் தன்மை முன்னமே அவனிடம் இருப்பதே. ஈசன் எங்கும் உள்ளான் என்று இந்துமதம் போதிக்கின்றது. (ஈசா. உபநி–1). அவன் நமது நெஞ்சுகளினுள்ளும் உள்ளான். இயல்பினாலே நாம்

தெய்வத்தன்மை உடையோம். ஆனால் தெய்வத்தன்மை நம் இருப்பில் ஆழ்ந்து கிடக்கின்றது. நமது அழுக்கேறிய மனம் இடைவழியில் நிற்கும்வரை நாம் அதைக் காண்ப தில்லை. புகையடைந்த கண்ணாடி வழியாக உள்ளிருக்கும் ஒளியைக் காண இயலாது ; அதுபோல, ஈசன் நம்மிடத்தும், நம்மைச் சுற்றி எங்கும், எப்போதும் இருக்கலாம்; ஆயினும் அழுக்கு மனத்தின் வழியாக ஈசனைக் காணமுடியாது. ஒளி வெளிவரவேண்டுமாயின், அதைச் சூழும் கண்ணாடியைக் கழுவித் தூயதாக்கவேண்டும் ; அதுபோல், நம்மிடத்துள்ள தெய்வத்தன்மையை வெளிவரச் செய்யவேண்டின், நமது மனத்தை அழுக்கற்றதாக்கவேண்டும்.

காமம், பேராசை, சினம், பகை, பொறாமை, தற்பெருமை, சுயநலம் என்னும் அழுக்குகள் பலவும் நம்மிடத்துள்ள தெய்வத்தன்மையை மறைக்கின்றன. இவை நமது மனத்தை ஆளும்வரை, வாழ்க்கையில் ஏறக்குறைய அடியெடுத்து வைக்கும்தோறும் தவறுதல்கட்கு உள்ளாகிறோம்; முழுவதும் விலங்குகளைப் போன்று பன்முறையும் நடத்தையுடையவராகிறோம். நமது குறையால் நமது துயரத்தைப் பூர்த்தியாக்குவதோடு, பிறர்மீதும் கணக்கற்ற துன்பங்களைச் சுமத்துபவராகிறோம்.

ஆரம்பத்திலே நாம் விலங்குகளின் நிலையில் நிற்பதாகத் தோன்றக் காரணம் ஆவன இவ்வழுக்குகளே. ஆனாலும் நாம் விலங்குகளல்லோம். அது எப்படி? நாம் முயன்று தெய்வத்தன்மையை அடையக்கூடும்; அது விலங்குகட்கு இயலாது என்பதனால்தான். மனிதர்களான முறையிலே நம்மிடம், நமது மன அழுக்குகளையெல்லாம் போக்கி எல்லா விதத்தாலும் தெய்வத்தன்மையை அடையும் திறமை கருவிலே அமைந்துள்ளது. இதுவேதான் நமது 'மானவ தருமம்'. இவ்வழுக்குகளிலே மூழ்கிம்பவர் இன்னும் மனிதப் பதவியை மிதித்தவரல்லர் ; மனித வடிவத்தோடு

விலங்குகளாக மட்டும் இருப்பவரே. ஆனால், தமது மனங்களை முற்றிலும் மாசற்றனவாக்கித் தம்மிடத்துள்ள தெய்வத்தன்மையை வெளிப்படுத்துவதில் வெற்றி பெறுப வரோ, உண்மை மனிதர், குறையற்ற மனிதர்.

இவ்வழி நீண்டது, சேரவேண்டிய இடம் வெகு தொலையிலுள்ளது – இது இயல்பானதே. நம்மிடத்துள்ள தெய்வத்தன்மையை முழுதும் வெளிப்படுத்தல் எளிதான காரியமன்று. ஒரே எட்டு எடுத்துவைப்பதனால் முழு வழியையும் கடந்துவிட முடியாது. ஆனாலும் 'தரும' வழியில் ஒரு சிறிது முன்னேறுதலும் அதற்குரிய பலனைத் தரும் என்பதும் உண்மையே. மன அழுக்கு நீங்க நீங்க, நமது ஞானம் வரவர வளர்கின்றது. நமது பலமும் ஆனந் தமும் அதிகமாகின்றன. இதனால், முன் செல்லுவதற் கும், படிப்படியாக நமது ஞானத்தையும் பலத்தையும் ஆனந்தத்தையும் அதிகமாக்குவதற்கும் நமக்கு ஊக்கம் விளைகின்றது.

இவ்வாறு பிறவிதோறும் மன அழுக்கு மென்மேலும் நீங்கிவர, முடிவில் மனம் முற்றிலும் தூயதாகின்றது. அப்போதுதான் மனிதன் ஈசனைக் காணவும், ஈசனைத் தொடவும், ஈசனோடு பேசவும், அம்மட்டோ! ஈசனோடு ஒன்றாகவும் கூடும். அப்போது உண்மையாகவே மனிதன் பூரணமடைகிறான். அதன் காரணம் யாதெனில், அப் போதுதான் அவ்வளவு காலமும் அவனுள் இருந்துவந்த தெய்வத்தன்மை தன்னைத்தானே முழுதும் வெளிப்படுத்து கின்றது என்பதே.

பகவானைக் காண்பவன் உண்மையாகவே தெய்வத்தன் மையை அடைகிறான்; அன்பு, ஆனந்தம், ஞானம், பலம் இவை நிறைந்தவனாகிறான். அவன் இயற்கையைத் தாண்டி விடுகிறான், முற்றிலும் விடுபட்டவனாகிறான். எதுவும் அவனைக் கட்டுப்படுத்தவோ அசைக்கவோ முடியாது. எது

வும் அவனது மனத்தின் சாந்தியைக் குலைக்க முடியாது. அவனிடம் குறையோ, துக்கமோ, பயமோ, சண்டைக் கேனும் மனவருத்தத்திற்கேனும் காரணமோ உண்டாவதில்லை. அவனது முகத்திலே எப்போதும் தெய்விக ஆனந்தம் ஒளிவீசும்; அவனது ஒழுக்கம் அவனைத் தெய்விக மனிதனெனப் பிரித்துக் காட்டும். அவனது தன்னலமற்ற அன்பு அனைவரிடத்தும் சமமாகப் பாயும். அவனுடைய சேர்க்கையால் அவனை அணுகுவார்க்கெல்லாம் பலமும் தூய்மையும் ஆறுதலும் உண்டாகும். அம்மாதிரியான மனிதன் மனித வாழ்க்கையின் குறிப்பை அடைந்துவிட்டான்; அவனொருவனையே மெய்யான ஞானியென்றோ பூரண மனிதனென்றோ சொல்லலாகும்.

பல நாடுகளிலும் பல காலங்களிலும் இம்மாதிரியான அருளடைந்த கடவுட் காட்சிபெற்ற ஞானியர் பலரை உலகம் கண்டுள்ளது. இஞ்ஞானியர் மெய்யாகவே மனித வர்க்கத்தினரைப் புனிதமாக்குபவர். அவருடைய நெஞ்சுகளினின்றும் பொங்கி வழியும் நிறைவினால் அவர் கண்டதையும் உணர்ந்ததையும் போதித்தார். தம்மிடம் கூடுவார்க் கெல்லாம் பகவானை அடையும் வழியிலுள்ள படிகளைப் பற்றிக் கற்பித்தார். இவ்வாறு கற்பித்த போதனைகளே உலகத்துள்ள மதங்களின் பெரும் பகுதியாகின்றன.

ஆயினும், பற்பல ஞானியரும் மனதின் அழுக்கை நீக்குவதற்குப் பற்பல வழிகளைக் கண்டுபிடித்தனர். அவர்களின் போதனைகள், முக்கியமானவை சம்பந்தப்பட்டமட்டில், ஒன்றுபோல்வன. இவற்றுக்குள் காணப்படும் வேறுபாடு அற்பமான விவரங்களைப் பற்றியதேயாம். உலகத்துள்ள உண்மையான மதங்கள் யாவும், அவைகளை முறையாகப் பின்பற்றுவாரைப் பூரணம் என்னும் முடிவான நிலைக்கு ஒன்று போலக் கொண்டுசேர்க்கும். அவை ஒவ்வொன்றும் தெய்வத்தன்மைக்கு ஓர் உண்மையான வழிதான். மதத்தை

இவ்வாறு கருதும்படி இந்துக்கள் போதிக்கப்பட்டுள்ளார்கள்.

சமயாசாரியரும் மெய்ஞ்ஞானியரும் போதித்துள்ளபடி மதங்களில் தவறு யாதொன்றும் இல்லை—இதுவே இந்துக்களது கருத்து. அவ்வவற்றிற்குரிய ஆதி போதனைகள் விலை மதிக்க அரிய. அவை நமக்கு உறுதியான உண்மையான வழியைக் காட்டக்கூடும். இவையே உலகத்திலுள்ள உண்மையான மதங்களாம்.

ஆனால், இவ்வுலகிலே மதம் எனும் பெயரோடு வழங்கப்படுவதில், உமி அதிகமாகவும் அரிசி குறைவாகவும் இருப்பதாகப் பன்முறை தோன்றுகிறது. ஆதி போதனைகளில் உள்ள உயிரனைய ஒன்றைப் பொருளற்ற கொள்கைகளின் குவியற்கீழ்ப் புதைத்து விடுகின்றனர். இவ்வாறு நடப்பதன் காரணமாவது: மதபோதனையை மேற்கொள்வோர் அத்தொழிலுக்கு ஒரு சிறிதும் தகுதி வாய்க்காத மக்களாகவே பெரும்பாலும் அமைவதுவே. மாசுள்ள மனத்தினர் பூசாரிகளாகவும், போதகர்களாகவும் அடிக்கடி நடிக்கின்றனர். ஞான விஷயங்களை ஊடுருவி நோக்கி உண்மையைக் காணும் திறமை யற்றவர்களாகின்றனர். ஆதிபோதனைகளின் உட்கருத்தை அவர்கள் அறியாது போகின்றனர். இக்காரணத்தால், அவர்கள் பிறர்க்கு மதத்தை விளக்கத் தொடங்கும்போது அனைத்தையும் குழப்பிவிடுகின்றனர். அவர்களுடைய கைகளில் மதம் சிக்கும்போது, வெறும் கொள்கையாகவும், பண்படாத கோட்பாடுகளும் பொருளற்ற சடங்குகளும் சேர்ந்த ஒரு தொகுதியாகவும் தாழ்வடைகின்றது. அவர்களைப் பின்பற்றுவோர் கட்டுக் கடங்காதவராய் வெறி பிடித்தவராய்த் திரிகின்றனர்; மதமும் ஸமூகத்தில் பல பிரிவினர்க்குள் ஒருவர்க்கொருவர் சண்டையிட ஏதுவாகின்றது. தம்மைத் தாமே தூய்மைப்படுத்திக் கொள்வதற்காக மதத்தைப் பின்

பற்றுது, பற்பல மதத்தினரும் ஒருவர்க்கொருவர் மண்டைகளை உடைத்துக்கொள்ளும் தொழிலில் அடிக்கடி இறங்கிவிடுகின்றனர். இதுவே மதம் எனப்படுகின்றது!

இத்தகைய பண்படாத சரக்கைக் கண்டதும், முற்கூறியவரினும் புத்திசாலிகளாயிருப்பவரது மனம் பலமாக அடியுண்டது போலாகிறது—அது இயல்பேயாம்; ஆனால் என்ன துர்பாக்கியம்! இவர்கள் அக்காரணம் பற்றி மதத்தையே விட்டுவிட விரைகின்றனர். ஆயினும் ஞான விளக்கம் பெருத பூசாரிகளால் ஏமாற்ற ஒண்ணுத சில அறிவாளர் இவ்வுலகில் எப்போதும் இருந்து வந்திருக்கின்றனர். அவர்கள் ஏமாற்றுக்கு உள்ளாகாது, உள்ளதை உள்ளவாறே காண்கின்றனர்; அறிவிலாத பூசாரிகளும் போதகர்களும் இறக்குமதி செய்யும் மதக் குப்பைகள் மதத்தின் மேற்பாகத்து மட்டும் உள்ளன என்பதையும், குப்பைக்குள்ளே விலைமதிக்க முடியாத அரு நிதியம் உள்ளது என்பதையும் அவர்கள் காண்கின்றனர்.

உண்மையான மதத்திற்கும் இப்பண்படாத சரக்கிற்கும் உள்ள வேறுபாட்டை இந்து மதம் நமக்குப் போதிக்கின்றது. வேடதாரிகளின் சொற்படி நடப்பதினால் விளையும் அபாயம் இன்னதென நமக்கு எச்சரிக்கின்றது. மதத்தை அதற்கு மூலமான இருடியரும் ஞான குரவரும் கூறும் ஆதிபோதனைகளினின்றும் பெறுமாறு நம்மை வேண்டுகிறது. இப்போதனைகட்கு விளக்கவுரை வேண்டியிருப்பின் அதுவும் இறைவனை நேரிற் கண்ட வேறோர் இருடியினிடமிருந்தே வரவேண்டியதாகிறது. இது மட்டுமோ! ஒவ்வொருவரும் மெய்ப் பொருட்காட்சி பெற்ற ஒருவரையே நாடித் தமது குருவாகக் கொள்ளும்படிக்கும் புத்திமதி கூறுகின்றது.

மதம் மிகப் பெரிதும் அனுபூதி மயமான ஒன்று என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. வித்தாரமான பேச்சு

எத்துணையதாயினும், இங்கே பயன்படாது. நாம் உண்மையான மனிதராக விரும்புவோமாயின் நமது உள்ளத்தைத் தூயதாக்கவேண்டும். நமக்குரிய தொழில் இதுவென்பதே நேர்மை. ஒருவன் தன்னை இந்துவென்ருே முஸ்லீமென்ருே கிறிஸ்தவனென்ருே சொல்லிக்கொள்வதில் மட்டும் பயன் யாது? குருமாரின் கருத்துகட்குக் கையொப்பம் போடுவதொன்றே போதாது. ஒருவர்க்குரிய மத நூல்களில் தேர்ச்சி பெறுதலெனினும் அதுவும் போதாது. ஒவ்வொருவனும் தனது சொந்த மதத்திற்குரிய பெருங் குரவரும் ஆசார்யர்களும் அருளிய உபதேசங்களை அனுபவமாக்கவும், தனது முழு வாழ்க்கையை அவற்றிற்கு ஏற்றவாறு ஒழுங்கு படுத்தவும் வேண்டும். இது வொன்றே நமக்கு இலக்ஷியத்தை நோக்கிச் செல்லத் துணையாகும். நமக்குள் அடங்கியுள்ள தெய்வத் தன்மையை வெளிக்கொணர்ந்து, நம்மை உண்மையான மனிதராக்க வேண்டும்; இதற்காக நாம் நம்மால் இயன்றவரை பாடுபட வேண்டும். நம்மிடம் அடங்கியுள்ள தெய்வத் தன்மை முழுதும் வெளிப்படும்போது தான் நாம் மெய்யாகவே நமது தருமத்தை, அதாவது நமது சிறப்பியல்பை அடைந்தவராவோம். இந்நோக்கத்தை நிறைவேற்றும் பொருட்டு எவ்வித வருத்தத்தையும் ஏற்றுக்கொள்ளல் வேண்டும்.

இந்த அத்தியாயத்திலே நாம் கற்றுக்கொண்டதைத் தொகுத்துரைப்போம். படைக்கப்பட்ட ஒவ்வொன்றும் தெய்வ மயம். (சாந்தோக்கிய உபநிடதம், III—14-1). தன்னுள் இருக்கும் தெய்வத் தன்மையை முழுதும் வெளிப்படுத்தி, எல்லாவிதத்தும் தெய்வமாதல் மனிதன் ஒருவற்கே வாய்த்த பேருகும். அப்போது தான் அவன் பூரண நிலை எய்தி, ஏனைய உயிர்களினின்றும் வேறுபட்ட உண்மையான மனிதனுகிருன். அளவிலாத சுதந்திரத்தையும் இன்பத்தையும் ஆற்றலையும் ஞானத்தையும் அவன் நுகருகின்ருன்.

தெய்வ ஆணைபெற்ற ஒருவரைப் போலப் பேசவும், பிறருக்கு ஞான முன்னேற்றமடையும் சீரிய ஊக்கத்தை ஊட்டவும் அப்போதுதான் அவனுக்கு இயலும். இப் பேரானந்தப் பெருநிலையினை அடையும் வழியினை மதம் மனிதற்குப் போதிக்கின்றது. ஒவ்வொரு மதமும், அதனை நிலைநாட்டிய ஞான குரவர் ஒருவரோ பலரோ உபதேசித் துள்ளபடி, அந்த இலக்ஷியத்தை அடையச் செம்மையான நெறியொன்றைக் காட்டுவதாகும். இக்காரணத்தால் மதம் மிகப்பெரிதும் அனுபூதி மயமான தொன்றுகிறது. மதம் நம்மைச் செய்ய விரும்பும் அனைத்தையும் செய்து முடிக்க நாம் அரும்பாடு படவேண்டும். நாம் வாழ்க்கையின்மீது கொள்ளவேண்டிய மனநிலையை ஏற்படுத்திக்கொண்டு, மத போதனைகளின்படியே நமது ஒழுக்கத்தை அமைக்க வேண்டும். இதற்கு மாறுன திசையை நோக்கி நாம் சென்று, நாம் அழுந்தியுள்ள சேற்றிலே களிகூர்வோமாயின், விலங்கினத்தின் படிக்கு இறங்கி விடுபவராவோம். சுருங்கக்கூறின், இவையே இந்து மதத்தின் அடிப்படைப் போதனைகளாம்; இவற்றினின்றே, மதத்திற்கு இந்துக்கள் யாது பொருள் கொள்கின்றனர் என்பதைப் பற்றிய பொதுக் கருத்தைப் பெறுகிறோம்.

## 3

# இந்து சாஸ்திரங்கள்

இந்துமத குரவருடைய உபதேசங்களின் தொகுதியே இந்துமதமென்றும் இந்து தருமமென்றும் வழங்கிவரும் மதமாகும். இந்த உபதேசங்கள் அடங்கியுள்ள தூய மூலபாடங்களே சாஸ்திரங்கள் எனப்படும்.

ஈசன் எவன்? அவன் எங்கே உறைகின்றான்? அவனது தோற்றம் எவ்வாறு உள்ளது? நாம் அவனுக்கு என்ன உறவாகிறோம்? அவனைக் காண நாம் முயல்வதேன்? இவை,

யனைத்தையும் சாஸ்திரங்களிலிருந்து கற்கலாகும். மேலும் சாஸ்திரங்கள் இறைவனைக் காணும் முறைகளை நமக்குப் போதிக்கின்றன. நம்முள் உறையும் தெய்வத் தன்மையை நாம் எவ்வாறு வெளிப்படுத்துவது? வழியிலுள்ள இடையூறுகள் யாவை? அவற்றை நாம் தாண்டிச் செல்வது எங்ஙனம்? நாம் எவ்வாறு ஒழுகவேண்டும்? நாம் இயற்ற வேண்டிய கருமங்கள் யாவை? விலக்க வேண்டிய கருமங்கள் யாவை? இவை யெல்லாவற்றையும் சாஸ்திரங்கள் நமக்குப் போதிக்கும்.

எத்தனையோ நூற்றுண்டுகளாக இந்துக்கள் மதநெறியில் நடந்து வந்திருக்கின்றனர். இக்கால முழுவதிலும் கணக்கற்ற சாதகர்கள் இறைவனை உணர்ந்து மத இலக்ஷியத்தை அடைந்துள்ளனர். இந்த இருடியரிற் பலர் அதே இலக்ஷியத்தை அடைதற்கெனப் புதிய பாதைகளையும் கண்டுபிடித்துள்ளனர். இவ்வாறு பூரண நிலையினை அடையப் பல வழிகளை இப்புண்ணிய பூமியில் இந்துமத ஞானியர் வகுத்துள்ளனர். இந்துமத சாஸ்திரங்கள், ஏனைய சாஸ்திரங்களைப் போலாகாது, தொகையிலும் வகையிலும் பலவாயின. இன்னும், மதத்தை இன்னதெனப் பல வேறு வகைப்பட்ட மக்கட்கும் விளங்க உரைக்கும் அவசியத்தால் பலவகையான சாஸ்திரங்கள் எழலாயின.

### வேதங்கள்

பலவகைப்பட்ட பலவாய இந்துமத சாஸ்திரங்களுள் அனைத்தினும் மிகப் பழைமை வாய்ந்தவை வேதங்களே. மற்றவை வேதங்களை மூலமாகக் கொண்டு எழுந்தவை. வேதங்கள் நேராகப் பெற்ற ஞானக்காட்சியை அடிப்படையாகக் கொண்டன. இதுபற்றி அவை சுருதியெனப்படுவன; அவற்றிற்குரிய பிரமாணத் தன்மை வழக்கிற்கிடமன்று. ஏனைய இந்து சாஸ்திரங்கள் யாவும் வேதங்க

ளையே பிரமாணமாகக் கொள்வன ; இவை மிருதி (ஸ்மிருதி) எனப்படும்.

வேதங்கள் உலகிலுள்ள வேறெந்த சாஸ்திரத்தினும் மிகப் பழைமையானவை. அறிதல் எனப் பொருள்படும் 'வித்' எனும் வடமொழிப் பகுதியினின்றும் பிறந்த 'வேதம்' எனும் மொழி 'இறைவனைப் பற்றிய அறிவு' எனும் பொருளுடையது. படைப்பு எல்லையற்றதாய் என்றைக்கும் உள்ளதாய் இருப்பது போல, இறைவனைப் பற்றிய அறிவும் எல்லையற்றதாயும் என்றைக்கும் உள்ளதாயும் இருப்பதே. இதனால், இறைவனைப் பற்றிய அறிவாகும் நிலையில் வேதம் அளவுபடாததே, உலகில் என்றைக்கும் உள்ளதே. இந்த அறிவின் பகுதிகள் சில நூற்றுக்கணக்கான இந்து முனிவர்களால் கண்டுபிடிக்கப்பட்டன. வேத மூல பாடங்களென நமக்கு நேராக வந்துள்ளவற்றில் இவையே எழுதி வைக்கப்பட்டிருப்பதை யாம் காண்கிறோம். இவற்றைக் கண்ட இந்து முனிவர் வேதரிஷிகள் எனப்படுவர். வேதங்களிலே, கண்டு பிடித்தவரைக் காட்டிலும் கண்டு பிடிக்கப்பட்ட உண்மைகளே மிக்க முதன்மையைப் பெற்றுள்ளன என்பது கவனிக்கத்தக்கது. உண்மையைக் கூறின், இந்த இருடியரிற் பலர் தமது பெயர்களைப் பின்னுளார்க்கு எழுதி வைத்தலையும் பொருட்படுத்தவில்லை.

வேதங்கள் நான்காகும். அவையாவன : இருக்கு, சாமம், யஜுர், அதர்வணம் என்பன. இவை யொவ்வொன்றும் ஸம்ஹிதை பிராம்மணம் எனும் இருபகுதிகளையுடையன. ஸம்ஹிதைப் பகுதியில் மந்திரங்கள் உள்ளன ; பிராம்மணப் பகுதி இம் மந்திரங்களின் பொருளையும், பயன்படுத்தும் வகையையும் விரித்துரைக்கின்றது.

பண்டை இந்துக்கள் இக்காலத்துப் போன்று திருவுருவங்களில் தேவரையும் தேவியரையும் வழிபடவில்லை. மந்திரங்களை ஓதிக்கொண்டே தூய அக்னியில் ஓமஞ்செய்

தலே அவர்களுடைய வழிபாட்டு முறையாயிற்று. இம் மாதிரியான வழிபாடு 'யஞ்ஞம்' (வேள்வி) எனப்படும். வேதங்களிலுள்ள பிராம்மணப் பகுதிகள் பலவகை வேள்வி' களை வருணிக்கின்றன. வேள்விகளை இயற்றும்போதே ஸம்ஹிதைப் பகுதியிலுள்ள மந்திரங்களை ஓதவேண்டிய தாயிற்று. யாதேனும் ஒரு வேள்வியை (யாகத்தை) இயற்றும்போது, இன்னின்ன மந்திரங்களை இன்னின்ன காலத்து இன்னின்னவாறு ஓதவேண்டும் என்பதைப் பிராம்மணப் பகுதிகளினின்றும் கற்றுக்கொள்ளலாகும்.

உபநிடதங்கள்

வேதங்களின் சில பகுதிகள் உபநிடதங்கள் எனப்படுவன. அவற்றை வேதாந்தம் என்றும் அழைப்பர். அதன் காரணம், வேதங்களின் இறுதியில் (அந்தம்-முடிவு) அவை காணப்படுதலாலும், வேதங்களின் ஸாரத்தைப் பெற்றிருத்தலாலும் (அந்தம்-முடிவு, ஸாரம்),

வேதங்களிற் பெரும் பகுதி வேள்விகளை (யக்ஞங்களை) யொட்டிய விவரங்களைக் குறித்துப் பேசுகின்றது. பழைய வழிபாட்டு முறைகளாகிய வேள்விகள் இறைவனைப்பற்றிய அறிவைப் பெறுதற்கு நமது மனம் தகுதியாகும் பொருட்டு, அதைத் தூயதாக்குதற்குச் செய்யவேண்டிய கிரியைகளே யன்றி வேறல்ல. இதனால கருமங்களோடு சிறப்பாகத் தொடர்புற்ற இவ்வேதப் பகுதி கருமகாண்டம் என்னும் பெயர் பெற்றது. இதற்கு எதிராக, உபநிடதம் எனப்படும் வேதப் பகுதிகள் இறைவனைப்பற்றிய அறிவைச் சிறப்பாகக் கூறுகின்றன, இக்காரணத்தினால் அவை வேதங்களின் ஞான காண்டம் ஆகும்.

எங்கே எவ்வாறு ஈசர் உள்ளனர்? மனிதனும் உலகமும் ஈசனோடு எவ்வாறு தொடர்புகொண்டன? ஒருவன் எவ்வாறு எதற்காக இறைவனை உணர முயல வேண்டும்? ஈசனை

உணரும்போது நடப்பது யாது? இவற்றையெல்லாம் உபநிடதங்களிலிருந்து (வேதாந்தத்திலிருந்து) அறியலாகும்.

உபநிடதங்கள் எண்ணிக்கையிற் பலவாம். நான்கு வேதங்களில் ஒவ்வொன்றும் பல உபநிடதங்களைப் பெற்றுள்ளது. இவற்றுள் பின்வருபவை நினைவில் வைக்கத் தகுந்தவை: ஈச, கேன, கட, பிரச்ன, முண்டக, மாண்டூக்ய, ஐதரேய, தைத்திரிய, சாந்தோக்கிய, பிருஹதாரண்யக, சுவேதாஸ்வதர உபநிடதங்கள்.

**மிருதிகள்**

மனு, யாக்ஞவல்கியர் போன்ற சில முனிவர் இந்துவின் வாழ்க்கைக்குரிய விதிமுறைகளைத் தொகுத்துச் சிறு நூல்களை இயற்றினர். இவை மிருதிகள் எனச் சிறப்பாக வழங்கப்படும். வேதங்களொழிந்தவனைய இந்துமத சாஸ்திரங்களையெல்லாம் குறிக்கும் ஒரு பரந்த பொருளும் மிருதியெனும் மொழிக்கு உள்ளது. மனு, யாக்ஞவல்கியர் முதலிய முனிவர்கள் இயற்றியுள்ள இம்மிருதிகளினிடமிருந்து ஓர் இந்து தனது முழு வாழ்வையும் இன்னவாறு நடத்த வேண்டும் என்பதைக் கற்றுக் கொள்கிறான். அவனது வாழ்க்கைக்குரிய பல நிலைகளிலும் (ஆசிரமங்களில்) அவன் இன்னவாறு ஒழுகவேண்டும் என்பதையும், அவன் ஒரு குறித்த ஸமூகப் பிரிவில் (வருணத்தில்) பிறந்ததன் பயனாக ஏற்படும் சிறப்பான கடமைகள் இன்னின்ன என்பதையும் அவை அவனுக்குப் போதிக்கின்றன. ஓர் இந்துவின் இல்வாழ்க்கையோடு தொடர்புற்ற எல்லாச் சடங்குகளையும் இவை கூறுகின்றன. மேலும், இவை இந்துக்களின் இல்வாழ்க்கைக்கும் ஸமூக வாழ்க்கைக்கும் உரிய சட்டங்களை வகுக்கின்றன; இச்சட்டங்களிற் சில ஆங்கில அரசாட்சியின் கீழும் அதிகாரம் செலுத்தி வந்தன.

சுருங்கச் சொல்லின், இம் மிருதிகள் (ஸ்மிருதிகள்) ஓர் இந்துவுக்கு, அவனது பிறவிக்கும் வாழ்க்கையின் நிலைக்கும் தக்கவாறு சில செயல்களை விதித்து, வேறு சிலவற்றை விலக்குகின்றன. படிப்படியாக ஒருவன் பூர

ணத்தன்மையை நோக்கி முன்னேறும் பொருட்டு, மனத்தை மெல்ல மெல்லத் தூய்மையாக்கலொன்றே அவற்றின் கருத்தாகும். அவை வேதங்களிற் கூறிய போதனைகளை ஆதாரமாகக்கொண்டன என்பதில் ஐயமில்லை. எனினும் அவை கூறும் விதிகளும் விலக்குகளும் குறிப்பிட்ட ஸமூகச் சூழ்நிலைகட்கே சம்பந்தப்பட்டவை என்பது குறிக்கத் தக்கது. இந்த ஸமூகத்தின் சூழ்நிலைகள் காலத்திற்கேற்ப மாறியபோது, வெவ்வேறு காலங்களிலும் இந்துஸ்தானத்தின் வெவ்வேறு பகுதிகளிலும் வாழ்ந்த முனிவர்கட்குப் புது மிருதிகளை இயற்றல் அவசியமாயிற்று. இம்முறைப்படி மனுவின் மிருதிக்குப் பிற்பட்ட காலத்து எழுந்தது இரகுநந்தன மிருதி; இது வங்காள இந்து ஸமூகத்திற்குச் சிறப்பாகப் பொருத்தமாகும். இறுதியான மிருதி நூலாசிரியரது காலத்திற்குப்பின் நமது தற்கால ஸமூகம் பெரிதும் மாறுபாடடைந்துள்ளமையின், இங்ஙனைய இந்துக்கட்காக ஒரு புது மிருதியை இயற்றுதற்குக் காலம் ஒருகால் பக்குவமாயுள்ளது போலும்.

**தரிசனங்கள்**

வேதங்களிற் காணப்படும் இறைவனைப் பற்றிய அறிவு ஆறு தரிசனங்களின் உற்பத்திக்கு இடமாயிற்று. ஜைமினி, வியாசர், கபிலர், பதஞ்சலி, கோதமர், கணாதர் என்னும் முனிவர் வேறுபட்ட இந்த சித்தாந்தங்களை அளித்தார். இவர்களில் ஒவ்வொருவரும் எழுதியது ஒரு தரிசனம் எனும் பெயர்பெற்றது; இவ்ஆறும் சேர்ந்து 'ஷட்தரிசனம்' எனப்பட்டன. முற்கூறிய ஆசிரியர்களின் வரிசைப்படியே அவர்களால் இயற்றப்பட்ட தரிசனங்கட்குப் பூர்வ மீமாம்சை, உத்தரமீமாம்சை (வேதாந்தம்), சாங்கியம், யோகம், நியாயம், வைசேஷிகம் எனும் பெயர்கள் அமையலாயின. இவையொவ்வொன்றும் ஒரு விசித்திரமான நடையில் அதாவது சூத்திர நடையில் எழுதப்பட்டுள்ளது. வடமொழி இலக்கணச் சூத்திரங்கள் இத்தரிசனங்களின் நடையை நமக்கு நினைவூட்டுகின்றன. தரிசன நூல்களாகிய இந்தச் சுருங்கிய சூத்திரங்கட்கு விளக்கம் அவசியமாகின்றது.

இதனால் நாளடைவில் தரிசனம் ஒவ்வொன்றுக்கும் மிகப்பல உரைகளும் வியாக்கினங்களும் இயல்பாகவே எழலாயின.

இத்தரிசனங்களுள், பூர்வமீமாம்சை வேதங்களின் கர்மகாண்டத்தைப் பற்றியும், உத்தரமீமாம்சை ஞான காண்டத்தைப் பற்றியும் கூறும். பின்னது உபநிடதங்களி னின்றும் நேரே பெறப்பட்டுள்ளது. மகா முனிவர் வியா சர் இயற்றிய இத்தரிசனத்தை வேதாந்த தரிசனம் என்றும் 'பிரம்ம சூத்திரம்' என்றும் அழைப்பர். இதனை இந்து மதத்தின் ஆதாரக் கற்களில் ஒன்று என்னலாம். ஸ்ரீ சங்க ராசாரியர், ஸ்ரீ ராமாநுஜாசாரியர் போன்ற பெரிய முனி வர் பின்னாட்களில் இதே வேதாந்த தரிசனத்திற்கு ஒளி மிக்க பாடியங்களை இயற்றியருளினர்.

புராணங்கள்

தரிசனங்கள் அறிதற்கு எளியனவல்ல என்பதில் ஐய மில்லை. அவை கல்வியறிவு பெற்ற ஒரு சிலர்க்கென்றே ஏற்பட்டுள்ளன. சாதாரண மக்கட்கென இந்து முனிவர் வேறொரு வகையான சாஸ்திரங்களை வெளியிடலானார். இவை 'புராணங்கள்' எனப்படுவன, இவை வாயிலாக மதம் மிக எளிய இனிய ஒருமுறையில் போதிக்கப்படுகின் றது; ஞான வேட்கையை எழுப்பும் கதைகளும் உபகதை களும் மதபோதனைகளை நன்கு அறிவுறுத்துகின்றன. மேலும், இந்துஸ்தானத்தின் பழமையான வரலாற்றைப்பற் றிய காட்சிகளையும் புராணங்கள் மூலமாகச் சிறிதே பெற லாம். மொத்தம் பதினெட்டுப் புராணங்கள் உள்ளன. அவற்றில் பின்வருவனவற்றின் பெயர்கள் நினைவிலிருத்தற் குரியன: விஷ்ணு புராணம், பாத்ம புராணம், வாயு புராணம், கந்த புராணம், அக்கினி புராணம், மார்க் கண்டேய புராணம், பாகவதம். மார்க்கண்டேய புராணத் தின் ஒரு பகுதியே 'சண்டி'யெனப் படுவது இந்துக்கள் அனைவர்க்கும் தெரியும். தெய்வத்தைத் தேவியம்மையாக வழிபடுதலே அதில் அடங்கிய பொருள். புண்ணிய தினங் களில் சண்டி பாராயணம் செய்வது இந்துக்கள் பலர்க்கு முள்ள ஒரு வழக்கம்.

**இராமாயணமும் மஹாபாரதமும்**

புராணங்களைப் போலே இராமாயணமும் மஹாபாரதமும் இந்து சாஸ்திரங்களுள் பலரும் விரும்பும் பயன் மிக்க இரண்டாகும். இவ்விரு மஹா காவியங்களும், வால்மீகி வியாசர் எனும் இரு முனிவர்களால் முறையே இயற்றப் பட்டவை. அவை 'இதிகாசங்கள்' (வரலாறுகள்) எனும் வகுப்பைச் சார்ந்தவை; இவை நமக்களிக்கும் இனிய கதைகள் வாயிலாக இந்துமதத்தின் முக்கிய போதனைகள் யாவும் நமது மனதிற் பதிக்கப்படுகின்றன. இந்தியாவின் தாய் மொழிகள் பலவற்றிலும் இவை மொழி பெயர்க்கப் பட்டுள்ளன. இம்மொழிபெயர்ப்புகள் மூலமாக இந்துக் களிற் பெரும்பாலார் தமது மதம் இன்னதென அறியப் பெறுகின்றனர்.

**கீதை**

மஹாபாரதத்தின் ஒரு பகுதி கீதை யெனப்படும். மஹாபாரதம் குருக்ஷேத்திரப் போரை வருணிக்கின்றது. கௌரவரும் அவர்களுடைய தாயாதியராய பாண்டவரும் ஒருவரோடொருவர் போர்புரிந்தனர். பஞ்சபாண்டவர் களுள் அருச்சுனன் மூன்ருவது சகோதரன், ஐவர்க்குள்ளும் உயர்ந்த வீரன். பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் இவனது சாரதி யாக விரும்பியமர்ந்தார். பாரதப் பெரும்போர் தொடங்கு முன் பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் இந்துமதத்தின் ஸாரத்தை அருச்சுனனுக்கு விளக்கியருளினுர். பகவான் ஸ்ரீ கிருஷ்ண ருடைய போதனைகள் அடங்கியுள்ள மஹாபாரதப் பகுதி 'ஸ்ரீமத் பகவத்கீதை' யெனப்படும். உபநிடதங்கள் வேத ஸாரத்தைப் பெற்றிருப்பதுபோல, கீதை உபநிடதங்களின் ஸாரத்தை அடக்கிக்கொண்டுள்ளது. எல்லா இந்து சாஸ் திரங்களுள்ளும் கீதையே பலராலும் மிகமிக விரும்பப்படுவ தாயிற்று.

**பிரஸ்தானத்திரயம்**

உபநிடதங்களையும், வேதாந்த தரிசனத்தையும், கீதை யையும் ஒன்ருகத் திரட்டி, அம்மூன்றுக்கும் 'பிரஸ்தானத்தி

ரயம்' எனப் பெயரிடுவர். இவையே இந்துமதத்தின் அடிப்படையான சாஸ்திரங்கள் எனக்கருதப்படும். இவை உயர்ந்த பிரமாணங்களாவன. இந்துமதத்தின் முக்கிய பிரிவுகளை நிலைநாட்டிய பெரியார் தம் போதனைகட்குப் பிரஸ்தானத் திரயத்தையே ஆதாரமாகக் கொள்ளவேண்டியிருந்தது. அவர்கள் வெவ்வேறு வழியாக அதற்குப் பொருள் கூறி, வெவ்வேருன முடிவுகளைக் கொள்ளலானுர்; அவ்வளவே. அத்வைத வாதமும் விசிஷ்டாத்வைத வாதமும் துவைத வாதமும் உண்டானமை இவ்வாறுதான்.

### தந்திரங்கள்

'தந்திரங்கள்' எனப்படும் இன்னுெருவகை சாஸ்திரங்களும் உள்ளன. இவை கடவுளின் சக்திவடிவத்தைப் பற்றி விரித்துரைப்பன; தேவியம்மையின் பூஜையைச் சடங்குகளோடு இயற்றும் பலவான முறைகளைப் பலவகைகளாக விதிக்கின்றன. சிவபெருமானுக்கும் பார்வதிதேவிக்கும் நிகழ்ந்த சம்பாஷணை வடிவமாக அந்த மூலபாடங்கள் இருப்பது வழக்கம். இந்த சாஸ்திரங்கள் சிலவற்றில், பார்வதி தேவி கேட்கும் வினுக்கட்குச் சிவபெருமான் குருநிலையில் மறுமொழி அளிக்கிருர்; மற்றவற்றில் சிவபெருமானின் வினுக்கட்குக் குருநிலையிலிருந்து தேவியார் மறுமொழி கூறுகிருர். முந்தியவை ஆகமங்களெனவும் பிந்தியவை நிகமங்களெனவும் பெயர் பெறும். தந்திரங்கள் எத்தனையோ உள்ளன; எனினும் அவற்றில் முதன்மையானவை அறுபத்து நான்கே. பின்வரும் தந்திரங்களின் பெயர்கள் நினைவில் வைக்கத்தகுந்தவையாம்; மஹாநிர்வாண, குலார்ணவ, குலஸார, பிரபஞ்சசார, தந்திரராஜ, ருத்ரயாமள, பிரம்மயாமள, லிஷ்ணுயாமள, தோராள தந்திரங்கள்.

### பாஞ்சாராத்திர சம்ஹிதைகளும் சைவ ஆகமங்களும்

தந்திரங்களின் இனத்தைச்சேர்ந்தவையாவன, வைணவர்களின் பாஞ்சராத்திர சம்ஹிதைகளும் சைவ ஆகமங்களும். தந்திரங்களைப் போன்றே இவையும் வேதங்களினும் இக்காலத்திற்கு (கலியுகத்திற்கு) மிகப் பொருத்த

மான மிக எளிய சித்தாந்தங்களையும் கொள்கைகளையும் எடுத்தளிப்பதாகக் கூறிக்கொள்கின்றன. முற்கூறிய ஏனைய சாஸ்திரங்களைப் போலன்றி, இவை வேதங்களினின்றும் தமது பிரமாணத்தன்மையைப் பெறுவனவல்ல, வேதங்களோடு வெளிப்படையாக மாறுபட்டனவுமல்ல. இவ்வகையான சாஸ்திரங்களைப் பற்றிய இன்னொரு சிறப்பு யாதெனில், தீக்ஷைபெற்ற பின் எல்லா ஜாதியாருக்கும் இருபாலார்க்கும் இவை உரியனவாதலே.

பாஞ்சராத்திர சம்ஹிதைகளில் வெவ்வேறான இருநூற்றுப் பதினைந்து நூல்கள் இருப்பினும், பின்வருவனவற்றின் பெயர்கள் நினைவில் வைத்துக்கொள்ளற்குரியன: ஈச்வர, பௌஷ்கர, பரம, ஸாத்வத, பிருஹத்பிரம்ம, ஞானாமிருதஸார சம்ஹிதைகள். (இவற்றுள் முதலாவது யாமுனாசாரியராலும், அடுத்த மூன்றும் இராமநுஜாசாரியாராலும் எடுத்தாளப்பட்டுள்ளன; கடைசியானது 'நாரத பாஞ்சராத்ரம்' எனும் தலைப்பின்கீழ் வெளியிடப்பட்டுள்ளது).

பரம்பரையின்படி இருபத்தெட்டு சைவ ஆகமங்களும், ஒவ்வொன்றுக்கும் பற்பல உப ஆகமங்களும் உள்ளன. இவற்றுள் இருபதுக்குச் சிற்சில பகுதிகளே அகப்படுகின்றன.

## 4

# ஸம்ஸாரம்

### மறுபிறப்பும் கருமவாதமும்

இந்துமத நிகண்டினில் 'ஸம்ஸாரம்' எனும் சொல் மிக்கபொருள் பொதிந்ததாகும். நம் அனைவர்க்கும் இது பழக்கமுள்ள சொல்; எனினும் அதன் பொருளை இன்னதென வரையறுத்துக்கூற நாம் அறியோம். அதனைத் தளர்த்தி, உலகம் என்றோ உலக வாழ்க்கை யென்றோ பொருள்பட அச்சொல்லை வழங்குகிறோம்; 'செல்லுதல்' எனும் பொருள்படும் 'ஸ்ரி' என்னும் வடமொழித் தாது

வினின்றும், மிருதிப் பொருளையுணர்த்தும் 'ஸம்' எனும் உபசர்க்கத்தினின்றும் அச்சொல் பெறப்படுகின்றது. இவ் வுலகத்தின் வழியாகவும் ஏனைய சூக்கும உயர்தர உலகங்கள் வழியாகவும் திரும்பத்திரும்ப நாம் செல்லவேண்டியவராகி ரேம் என்று நமது சாஸ்திரங்கள் நமக்குப் போதிக்கின்றன (கீதை 8-16). 'ஸம்ஸாரம்' என்னும் சொல்லின் உண்மைப் பொருளாவது, மீண்டும் மீண்டும் ஆன்மாக்கள் இவ்வாறு செல்லுதலே (ஸம்ஸ்ருதி).

இந்துமதம் முழுமையும் இந்த 'ஸம்ஸாரம்' எனும் கருத்தினை நிலையாகக் கொண்டுள்ளது. வாழ்க்கையைப் பற்றிய இந்துமதக் கருத்து முழுமையும் அறிய அது ஒரு துப்பைத் துலக்குகிறது. மரணமடைந்த நம் உறவினர்க் குப் பிண்டம் அளிப்பதேன்? சூக்கும உலகங்களில் ஏதா வது ஒன்றிலோ இவ்வுலகிலோ வேற்றுடல்களில் சிலவற்றில் அவர்கள் இன்னும் வாழ்ந்துவருகின்றனர் என்ற நமது நம்பிக்கையே அதன் காரணம். ஓர் இந்து மாது தனது கணவனது மரணத்திற்குப்பின் விதவை நோன்பு நோற்பா னேன்? தான் தன் கணவர்க்கு நன்றி செலுத்தினலன்றி, தான் இறந்தபின் அவரைக் காணும் நம்பிக்கைக்கு இடமில்லை என்பதே காரணம். இந்துக்கள் அறச் செயல் களை (புண்ணியச் செயல்களை)ச் செய்கின்றனர்; ஏனெனில் இவற்றால் மரணத்துக்குப்பின் அவர்க்குப் பெரும் போகம் விளையும். அவர்கள் பாவச் செயல்களை விலக்க முயலுவ தன் காரணம், மரணத்துக்குப் பின் நரக வேதனையை ஒழித் தற்பொருட்டே. இவையும் இன்னும் பல ஏனைய நம்பிக் கைகளும் கிரியைகளும் மறுபிறவி யென்னும் இந்துமதக் கருத்தினின்றும் பெறப்படும். இக்கருத்து பொய்யாகப் புனைந்த தொன்றன்று. இந்துமத இருடியர் தமது மெய்யு ணர்வாற் கண்ட உண்மைகளே இதற்கு ஆதாரமாகின்றன.

ஆதலாலே மறுபிறவியென்னும் இக்கருத்து, வாழ்வைப் பற்றிய இந்துமதக் கொள்கையின்படி மிக முக்கியமான தாகும்; இதுபற்றி, இந்துமத ஆராய்ச்சியில் இனி மேற்

செல்லுமுன் இக்கருத்தைத் தெளிவாக மனத்திற் பற்ற முயலவேண்டும்.

இறந்தபின் யாம் இராதொழியோம். இப்பிறவிக்கு முன் நாம் அனைவரும் எண்ணரிய பிறவிகளைப் பெற்றுள்ளோம். கீதையில் பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் அருச்சுனனை நோக்கி, "அருச்சுனா, நீயும் நானும் இதற்குமுன் பல பிறவிகளை எடுத்துள்ளோம்; (ஆனால் ஒன்று) அவற்றையெல்லாம் யான் அறிவேன், நீ அறிகிலாய்" என்று போதித்துள்ளார் (கீதை: 4–5). அவர் மீண்டும் கூறுவதாவது: "பிறந்தவன் சாவது உறுதி; இறந்தவன் பிறப்பதும் உறுதி". உண்மையாதெனில், உள்ளடங்கிய தெய்வத்தன்மை முழுதும் வெளிப்படும்வரை ஒருவன் மீண்டும் மீண்டும் இவ்வுலகிற் பிறக்கிறான்; ஒவ்வொரு முறையும் ஒரு புது உடலோடு பிறக்கிறான்; அது சிறிது காலம் தங்கப் பின்னர்த் தேய்ந்து, உயிரற்று வீழ்கின்றது. ஆனால் உடலினுள் உறையும் பொருளோ யாண்டும் புதுமையொடு திகழ்கின்றது. சீரழிந்த பயனற்ற உடலினின்றும் அது வெளியேறி, சூக்கும உலகங்களிற் சிறிது காலம் தங்குகின்றது. அதன் பின் அது இவ்வுலகிற்கு மீண்டு, ஒரு புதிய உடலைப் பெறுகின்றது. சூக்கும உலகங்கள் பெரும் போகத்தையோ துயரத்தையோ அளித்தற்காக அமைந்துள்ளன. இக்காரணம் பற்றியே அவை 'போகபூமி' எனப்படும். ஒவ்வொருவனும் தனது பூரணத்தன்மையை வெளிப் படுத்துதற்காக வரவேண்டியது இவ்வுலகிற்கேயாகும். இக்காரணத்தால் இவ்வுலகம் கருமபூமி எனப்படும். ஒருவன் பூரண நிலையை அடையாதவரை, மாறி மாறிப் பல பிறப்பும் பிறக்கும் கட்டுக்கு உட்பட்டவனாவான். அதுவரை அவன் பந்தநிலையில் உள்ளவன். மீண்டும் மீண்டும் உலகங்கள் வழியாகச் செல்லும் அவசியமே பந்தமாகும்.

பிறக்குந்தோறும் நாம் புதிய உடலொன்றைப் பெறுகிறோம். இவ்வுடல் சடப் பொருளால் ஆயது; 'தூல சரீரம்' என அது பெயர் பெறுகின்றது. உணவு வடிவமாக உட்

கொள்ளப்படும் பொருள்களினின்றும் அது உண்டாக்கப் படுகின்றது ; இக்காரணத்தால் 'அன்னமய கோசம்' எனவும் பெயர் பெறும். இத்தூலவுடல், அனைத்திற்கும் வெளியேயுள்ள நமது உறை. வீடு இடிந்து விழும்போது, ஒருவன் அதனின்றும் வெளியேறி, வசித்தற்கென வேறொரு வீட்டைக் கட்டுகிறான். அதுபோல், இத்தூலவுடல் பயனற்றதாம் போது, ஒருவன் அதைக் கழித்துப் புதியதோர் உடலை அமைத்துக் கொள்கிறான். கீதையில் இவ்வுடல் ஓர் ஆடைக்கு ஒப்பிடப்பட்டுள்ளது. ஆடை நைந்ததும், ஒருவன் அதைத் தள்ளிவிட்டு, அணிதற்குப் புதியதொன்றைப் பெறுகிறான் ; அதே போல, உடல் பயன்படாதொழிந்ததும், ஒருவன் அதைவிட்டு நீங்கிப் புதிய உடலில் மறுபடியும் தோன்றுகின்றான். (கீதை : 2–22). சீர்கெட்ட பயனற்ற உடலை இங்ஙனம் விடுதலே இறப்பெனப்படுவது ; புதிய உடலில் மீண்டும் தோன்றுதல் பிறப்பெனப்படுவது. ஆக இறப்பாலும் மறு பிறப்பாலும் யாம் செய்வது, நைந்த உடல்களை மாற்றிப் புதிய உடல்களை அணிந்து கொள்ளுதலே. நாம் ஒவ்வொருவரும் இதனை எண்ணிலாத தடவைகள் இயற்றியுள்ளோம். இவ்வுண்மையை அறிவார்க்கு அஞ்சுதற்கோ துயருறுதற்கோ ஏதுவொன்றும் இல்லை.

இத்தூல உடலுக்குள்ளே, நாம் வாசம் பண்ணும் வேறோர் உடல் அதனினும் சூக்குமமும் வலிமையும் மிக்கதாய் உள்ளது. இது சூக்கும சரீரம் எனப்படும். நோயும் மூப்பும் இறப்பும் இச்சூக்கும உடலைத் தொட இயலாது. இயற்கையிலுள்ள எதுவும் அதனை அழிக்கவொண்ணாது. கழிந்த காலத்து நாம் எடுத்த எண்ணற்ற பிறவிகளிலும் நம் சூக்கும உடல்கள் நம்மிடம் மாறாத் தோழமை பூண்டு வந்துள்ளன.

சூக்கும உடலிலே பதினேழு பகுதிகள் உள்ளன : அவையாவன : புத்தி, மனம், ஐந்து பிராணன்கள் (உயிர்ச் சக்திகள்), பத்து இந்திரியங்களின் சூக்குமப் பிரதிகளும். (பத்து இந்திரியங்களாவன : மெய், வாய், கண்,



மூக்கு, செவி என்னும் ஞானேந்திரியங்கள் ஐந்தும், நாவு, கை, கால், மலவாயில், சனன உறுப்பு என்னும் கருமேந்திரியங்கள் ஐந்தும்). இச்சூக்கும உடலே தூல உடலை அமைத்து அதனை இயங்கச் செய்துகொண்டிருக்கிறது. அதன் வாயிலாகவே நாம் உணர்கிறோம், நினைக்கிறோம், இச்சிக்கிறோம். உண்மையாகவே இச்சூக்கும உடலே நம்மிடத்துள்ள சுறுசுறுப்பான பகுதியாகும்.

ஆயினும் சூக்கும உடல் தானே சுறுசுறுப்புள்ளதன்று. தூல உடலிற்கு உயிரூட்டி அதனை இயக்குவிப்பது சூக்கும உடலேயாயினும், இதுவும் அதைப் போன்று சடப்பொருளே. அதற்கும் உயிரூட்டி அதனை இயக்குவிப்பது வேறொன்றே. இதுவே மனிதனிடத்துள்ள மெய்ப்பொருளாகும். இதுவே அவனது ஆன்மா.

ஆத்மனே எல்லா உயிர்க்கும் இயக்கத்திற்கும் சைதன்யத்திற்கும் மூலமாகும். (திருக் திரிச்ய விவேகம்–16.) அது தொட்டுக்கொண்டிருப்பதால் உயிரூட்டப்பெறும் சூக்கும உடல் தூல உடலுக்கு உயிரளிக்கின்றது; சூரியனால் ஒளியூட்டப் பெறும் சந்திரன் இப்பூமிக்கு ஒளியை வழங்குதல் போல அது.

இங்ஙனம் ஆன்மாவினால் உயிரூட்டப்பெறும் சூக்கும உடல் தூல உடலை இயன்ற காலம்வரை இயக்குவித்து, பின்னர் அதனைக் கழித்து ஒரு புதிய உடலை அமைத்துக்கொள்கிறது. இவ்வாறு ஒரு பிறவியினின்றும் மறுபிறவிக்கு அது செல்கின்றது.

### கரும வாதம்

ஆனாலும், ஒருவன் மீண்டும் மீண்டும் பிறக்கவேண்டியதேன்? இந்து சாஸ்திரங்கள் இதுபற்றி மிகத் தெளிவான கருத்துடையன. மனம் மாசற்றுத் தூய்மையாகும் போதுதான் மனிதனிடத்திலுள்ள தெய்வத்தன்மை தானே தன்னை வெளிக்காட்டுகிறது. ஆனால் இதற்கு மிக மிக நீண்ட காலம் பிடிக்கும். ஒரு தூல உடல் வெகுகாலம் நிலைக்க இயலாது. நமது வாழ்நாளோ இப்பணியை நிறை-

வேற்றப் போதிய அளவினதாகாது. இக்காரணம் பற்றியே இப்பணியை ஆற்றுமுன் எண்ணற்ற பிறவிகளை நாம் எடுத்தாகவேண்டியுள்ளது.

நம் புலன்கட்குக் களிப்பை யூட்டுவனவாய் எத்தனையோ பல பொருள்களும், அவைகட்கு வெறுப்பை யூட்டுவனவாய் எத்தனையோ பலவும் இவ்வுலகில் உள்ளன. இதனுலே சில பொருள்களைப் பெறும் விருப்பமும் வேறு சிலவற்றை விலக்கும் விருப்பமும் நாம் உடையராகிறோம். நமது மனங்கள் இத்தகைய ஆசைகளால் யாண்டும் நிறைந்துள்ளன. இவ்வாசைகளை நிறைவேற்றும் பொருட்டு நாம் முயற்சி செய்கிறோம். அத்தகைய முயற்சிகளின் மயமே நமது வாழ்வு. ஆயினும் நம் ஆசைகளை ஒய்த்தல் நமக்கு ஒருகாலும் இயலாது. அவை பெருகிக் கொண்டே போவன. நாம் ஓர் ஆசையை நிரப்பும்போது, நம் புலன்கட்குப் போகமெனும் பசி முன்னினும் கூரியதாகின்றது; இதனின்றும் புதிய ஆசைகள் பலப்பல விளைகின்றன. இவ்வாறு நம் ஒய்விலா ஆசைகளை நிரப்புதற்காக நாம் முயற்சிகளைச் செய்துகொண்டேயிருக்கிறோம்.

இவ்வாறு யாம் செய்வது யாதெனினும், இன்பத்தையோ துன்பத்தையோ அது பயனுக விளைவிப்பது உறுதி. ஒவ்வொரு கருமமும் விரைவாகவோ தாமதித்தோ அதற்குரிய பலனை (கருமபலனை) அளிக்கும் நியதியுடையது. ஒரு நற்கருமம் (சுபகருமம்) இன்பத்தைப் பயனுகத் தருவது; ஒரு தீய கருமம் (அசுப கருமம்) துன்பத்தைப் பயக்கின்றது. மனிதரிடத்து எழும் ஆசைகள் நல்லனவாயும் தீயனவாயும் இருத்தல் வழக்கமே. இவை காரணமாக அவர்கள் நற்கருமங்களையும் தீய கருமங்களையும் இயற்றி, அவற்றின் பயனுக இன்பம் துன்பம் இரண்டையும் இவ்வாறு குவித்துக் கொண்டே போகின்றனர்.

ஒவ்வொரு பிறவியிலும் நமது பழைய கருமப் பயனின் ஒரு பகுதியை மட்டும் ஒய்த்துவிடுகிறோம். இப்பகுதி 'பிராரப்தம்' எனப் பெயர்கூறும். பின்வரும் பிறவிகளில் நுகர்

தற்குரிய மிச்சப்பகுதி 'சஞ்சிதம்' எனப்படும். நமது நிகழ் காலச் செயல்களின் பயன்களும் குவிந்து கொண்டேவரும்; அவை 'கிரியமாணம்' எனப்படும். இதனுலே நமது சொந்தச் செயல்களின் பயன்களைப் பெறுதற்பொருட்டு யாம் மாறி மாறிப் பிறவியை எய்துகிருேம்.

ஒரு குழந்தை குருடாய்ப் பிறக்கிறது. அக்குருட்டுத் தன்மைக்குச் சடசம்பந்தமான காரணம் உண்டென்பது உறுதி. ஆனுல் கண்ணிலாமையால் அவன் படும் மன வேதனைக்கு அவனுடைய முற்பிறவிகளில் ஒன்றில் இயற்றிய யாதானும் ஒரு குறிப்பிட்ட தவருன செயலே ஏதுவாதல் வேண்டும் என இந்துமத சாஸ்திரங்கள் கூறு கின்றன. கூடிய அளவு மிக முயன்றும், நமது முயற்சி களில் ஏதேனும் ஒன்றில் நாம் தோல்வி யெய்துவோமாயின், நமது விதியை (அதிருஷ்டத்தை)ப் பழிப்பது நம் பொது வழக்கம். சற்றும் முயலாதபோதும் எதிர்பாராத வெற்றியை யாம் அடைவோமாயின், நாம் மகிழ்ச்சியோடு நமது நல்ல ஊழையே புகழ்கிருேம். எனினும் காணப்படாத இது (அதிருஷ்டம்) நம் பண்டைய வினைகளின் பயனேயன்றி—நமக்குரிமையான கருமங்களின் பலனேயன்றி—வேறில்லை. அதனை யாம் வையவோ வாழ்த்தவோ வேண்டாம். நம் பழைய செயல்களின் தடுக்கவொண்ணுப் பயனுக அது தானுக முறைப்படி வருவது. முற்பிறவிகளில் நாமே செய்த கருமங்களின் பயனுக விளையும் இன்ப துன்பங்களை நம்மால் விலக்க இயலாது. அவற்றைப் படைத்தவர் நாமே. நாமே படுக்கையைத் தயாரித்துவிட்டோம்; இனி அதன்மீது படுத் தாக வேண்டும். நாமே விளைத்துக்கொள்ளும் துயரங்கட் காகவும் நோய்கட்காகவும் பிறிதொன்றையோ பிறரையோ பழித்தற்கு நமக்கு உரிமையில்லை.

ஆனுல் நமக்கு ஒன்றுசெய்தல் இயலும். இனி வரும் பிறவிகளை இன்பமுடையனவாக நாம் ஆக்கிக் கொள்ள முடி யும். அது நமது தற்கால முயற்சிகளையே பொறுத்துள்ளது. நாமே நமது சொந்த வருங்கால வாழ்வை அமைப்பவராகி

றோம். சாஸ்திரங்கள் விலக்கும் தீய செயல்களை நீக்கிவிட்டு அவை விதிக்கும் நற்செயல்களை இயற்றிக் கொண்டே வருவோமாயின், இன்பமான எதிர்கால வாழ்வை அடைவது உறுதியே.

சுருங்கக் கூறின், கருமத்தைப்பற்றி (கருமவாதத்தைப் பற்றி) இந்துமதம் நமக்குப் போதிப்பது இதுவே. நம் ஆசைகள் (காமம்) கருமத்தை உண்டாக்குகின்றன; கருமம் அதன் பயனை இன்பமாகவோ துன்பமாகவோ உண்டாக்குகிறது; நமது கருமத்தின் பயன்களை நுகரும் பொருட்டு, ஒன்றன்பின் ஒன்றாகப் பிறவிகளை எடுக்க வேண்டியதாகிறது. கிட்டத்தட்ட ஓயாததாகிய இப்பிறப்பு—இறப்பு வட்டத்தின் வழியாக ஆசைகள் நம்மைச் சுழலவைக்கின்றன; இவ்வட்டமே ஸம்ஸாரம் எனப் பெயர் பெறுகின்றது.

## 5

# முக்தி

### விடுதலை

நம் ஆசைகள் நம்மை மாறிமாறிப் பிறப்புகள் வழியாகவும் இறப்புகள் வழியாகவும் இழுத்து வருவதை யாம் அறிந்துள்ளோம். இவ்விஷயத்தில் நமக்குச் சுதந்திரமே இல்லை. இம்மையிலோ மறுமையிலோ யாதேனும் ஒன்றை நாம் தேடிக்கொண்டிருக்கும்வரை, இப்பிறப்புச் சுழலின் வழியே செல்லல் நமக்குக் கட்டாயம்தான். 'ஸம்ஸாரம்' எனப்படும் இப்பிரயாணம் ஓய்வற்றதாகவே தோன்றுகிறது. இது மிக்க துன்பந்தருவதும் ஆம்.

இவ்வுலகம் நமக்கு இனிய பொருள்கள் பலவற்றை அளிக்கின்றது என்பதில் ஐயமில்லை, ஆனாலும் அவை நமக்கு ஒருகாலும் திருப்தியை அளிப்பதில்லை, எதைப் பெற்றாலும் அது நமக்குப் போதாததாகிறது. நமது நிலையா

தாயினும், நம்மிடம் இருப்பதினும் மிக்க சக்தியையும் அறிவையும் ஆனந்தத்தையும் நாம் விரும்புகிறோம். இந்த ஆசை மேலும் மேலும் பெருகிவந்து நமது அமைதியைக் குலைத்து விடுகின்றது. யாதேனும் ஒன்றைப் பெறும் நினைவு எப்போதும் நம்மிடம் குடியாயிருந்து, நம்மிடம் துன்ப உணர்ச்சியை விளைத்துவிடுகிறது. மேலும் ஐம்புல இன்பம் பெறும்போதெல்லாம், அதனோடு துயரமெனும் மாபெரும் பாரத்தையும் நாம் சுமந்தாக வேண்டியிருக்கின்றது. தோல்வி ஏமாற்றங்களும், இழப்பு பிரிவுகளும், பிணி மரணங்களும் அனைவராலும் பொறுத்துக்கொள்ள வேண்டியவை ஆகின்றன. அடுக்கிவரும் பிறவிகளிலே இவையாவும் நமது வாழ்வை மிகத் துன்பமானதாகச் செய்து விடுகின்றன.

இதினின்றும் உய்ய வழியில்லையா? துயரமும் ஏமாற்றமும் தொடர்ந்து நிகழும் இவ்வாழ்க்கையினின்றும் வெளியேற ஒருவகையும் கண்டதில்லையோ? இந்து சாஸ்திரங்கள் 'உண்டு' என்றே மறுமொழி பகர்கின்றன.

ஆம், வெளியேற வழி உள்ளது. ஈசனை உணர்வதினால் நமது துயரங்கள் அனைத்தையும் ஒழித்துவிடலாகும். ஏனெனில், நாம் பொழுதெல்லாம் தேடிக் கொண்டிருந்தவையாகிய நித்திய இன்பமும் எல்லையற்ற அறிவும் எனும் இரண்டையும் அப்போதுதான் நாம் காண்போம். அதன் பின் பிறப்பிறப்புக்கள் வழியாகச் செல்லும் அவசியம் இராது. இறுதியாக நாம் ஸம்ஸாரத்தினின்றும் விடுதலை அடைவோம்.

ஸம்ஸாரத்தினின்றும் (உலக வாழ்க்கையினின்றும்) விடுதலை பெறும் நிலையே முத்தியெனப்படும். முத்தியடைந்தவன் (முக்த புருஷன்), தன் இருப்பின் ஸாரம் இறைவனன்றி வேறில்லை என்பதை உணர்கிறான்; அக்காரணத்தால் எல்லாவிதத்தாலும் தெய்வத் தன்மையை எய்துகிறான். அவனது நெஞ்சிலே நித்தியமாகச் சாந்தி நிலவுகிறது. அவனிடம் குறையோ துயரோ அச்சமோ இல்லை. அனைவர்

மீதும் பாயும் அவனது அன்பும் கருணையும் அவர்களை ஸம்ஸாரத்தினின்றும் உய்யச் செய்யுமாறு தூண்டுகின்றன.

முத்தியே ஒவ்வொருவராலும் அடைதற்குரிய இலக்ஷியம் என்று இந்து சாஸ்திரங்கள் கருதுகின்றன. உண்மையாகவே, இந்த இலக்ஷியத்தைச் சேருவதிலே ஒவ்வொருவனும் கடுமையான சிரத்தை கொண்டுள்ளான். அவன் இவ்வுண்மையை உணராதிருப்பதொன்றே குறை.

நமது சக்தியையும் அறிவையும் இன்பத்தையும் பெருக்க நாம் முயலும்போதெல்லாம், மரணத்தினின்றும் தப்ப முயலும்போதெல்லாம், நம்முள்ளிருக்கும் தெய்வத் தன்மையை வெளிக்கொணர நாம் உண்மையாகவே விரும்புகிறோம். நாம் இதை எப்போதும் செய்துகொண்டிருக்கிறோம். இயற்கையின் வரையறைக்குக் கட்டுப்பட்டிருக்க நாம் மறுக்கிறோம். ஆனந்தம் அறிவு சக்தி வாழ்வு என்பவற்றை இடையிடையே சிறிதளவு காணமட்டும் இயற்கை இடந்தருகின்றது. ஆனால் நமது ஆன்மாவிலோ இவையனைத்தும் அளவுபடாத வண்ணம் குவிக்கப் பெற்றுள்ளோம். எவ்வாறெனில், நமது ஆன்மா அதன் இன்றியமையா இயல்பாலே இறைவனோடு ஒன்றுகிறது. இக்காரணம் பற்றியே, அரும்பாடுபட்டு நாம் இயற்கையினின்றும் (பிரகிருதியினின்றும்) வலிந்து பற்ற வேண்டியவையாயுள்ள இன்பம் அறிவு சக்தி வாழ்வு என்பவற்றின் சிறு கவளங்கள் நமது பசியை ஒருபோதும் தணியாது போகின்றன. (சாந்தோக்கிய உபநிடதம், 7–23). நமது ஆன்மாவின் தெய்வத் தன்மையை முழுதும் உணர்ந்து வெளிப்படுத்தும்போதுதான், அப்பொருள்களை நாம் தேடியலையும் முயற்சி முடிவுபெறுகின்றது. உண்மை—அறிவு—இன்பம் எனும் அளப்பருங்கடலை (ஸச்சிதாநந்த சாகரத்தை) நண்ணியதும், இயற்கை நமக்கு அளந்தளிக்கும் சிறுதுளிகளை அவாவுதல் நம்மிடம் நின்று விடுகின்றது.

ஆக, அறிந்தோ அறியாமலோ புவியிலுள்ள ஒவ்வோர் உயிரும் தன்னிடத்து உறையும் நித்திய அகண்ட பரம் பொருளை உணர்வதிலுள்ள இயல்பான தூண்டுதலால் முன் உந்தப்படுகின்றது. வேறுவகையாக உரைக்கின், இந்த ஸம்ஸாரத்தினின்றும் விடுதலை (முக்தி) அடையவே ஒவ்வொருவனும் விரைந்துகொண்டிருக்கிறான் என்னலாம்.

ஆனால், வாழ்க்கை (ஸம்ஸாரம்) வழியே குறிப்பின்றி அலைதலாற் பயன் இல்லை. அதனால் நமது பந்தநிலை நீடிக்கும். நம் ஆசைகள் யாவும் முக்தி யெய்துதல் ஒன்றால் மட்டுமே நிறைவெய்துமாயின், அதனை ஆரம்ப முதலே நாம் அறிந்துகொளல் வேண்டும், அதனால் மிக்க துயரத்தினின்றும் நாம் தப்பலாகும். இதனாலேயே, எய்துதற்குரிய இலக்ஷியம் முத்தியாவதை இந்துக்கட்கு ஆரம்பத்திலேயே உணர்த்தி விடுகின்றனர்; தொடங்கும்போதே, தமது காலடிகளை அதனை நோக்கி எடுத்து வைக்கவேண்டும் என்று அவர்கட்குப் புத்திமதி உரைக்கின்றனர்

ஆயினும் இந்நிலையினை அடைதல் எளிதான வேலையன்று. பாதை நீண்டது, கடுமையானது. நாம் இறைவனை உணர்ந்தாதல் வேண்டும்; ஏனெனில் அப்போதே நாம் முற்றும் விடுபட்டவராவோம். இறைவன் எப்போதும் நமக்கு உள்ளும் புறமும் இருப்பது உண்மையே. ஆனால் நம் மனங்கள் தூய்மையற்றிருக்கும் வரை நாம் அவரை உணர்தல் இயலாது. ஆதலால், நமது உள்ளங்களை நாம் தூய்மையாக்கல் வேண்டும்; நாம் குறிசாரும்வரை செய்ய வேண்டிய யாவும் ஏறக்குறைய அவ்வளவேயாம். இதுவே பழகுமுறையில் மதமாகும் (தருமமாகும்), நமது சாதனம் ஆகும் (ஞான முயற்சியாகும்).

நமது உள்ளத்தை மாசறக் கழுவுதல் நீண்டகாலம் பற்றற்குரிய முறையாகும். இதற்குச் செல்லும் காலத்தை மாதங்களாலும் ஆண்டுகளாலும் அளந்து கூறல் இயலாது. இலக்ஷியத்தை அடையுமுன் ஒருவர்க்கு எத்தனையோ பல

பிறவிகள் எடுக்க நேரலாம். (கீதை, 6—45).

எனினும், இந்து சாஸ்திரங்கள் நமக்கு ஒன்று மட்டும் உறுதி கூறுகின்றன. ஒரு பிறவியில் அடைந்த முன்னேற்றத்தை ஒருவன் இழந்து விடுவதில்லை. மறுபிறவி தொடங்கும்போது அது கைம் முதலாகின்றது. மேலும், இந்த சாஸ்திரங்கள் மனதைத் தூய்மையாக்கப் படிப்படியாக அமைந்த ஒரு முறையை விதிக்கின்றன. எல்லா உள்ளங்களும் ஒரே யளவிற்குத் தூயதான நிலையில் இருப்பதில்லை; ஏனெனில் அவற்றின் தற்போதைய நிலையினை முற்பிறவிகளிற் செய்த முயற்சிகள் தீர்மானிக்கின்றன. நமது திறமையிலும் விருப்பத்திலும் நமது குணத்திலும் நாம் ஒருவர்க்கொருவர் அவ்வளவு வேறுபடும் காரணமும் இதுவே. சில உள்ளங்கள் பண்படாதுள்ளன, சில பண்பட்டுள்ளன. இந்து மதத்திலே ஒவ்வோர் உள்ளத்துக்கும் அதது தூய்மையடைந்த அளவிற்கேற்பத் தொடங்குமிடம் ஒன்று காட்டப்படுகிறது.

இனி, உள்ளத்தைத் தூய்தாக்கல் என்பதன் பொருள் இன்னதென்பதை வரையறுத்துக் காண்போம். நமது உள்ளங்கள் உலகத்தோடு வச்சிரப் பசையால் ஒட்டப்பட்டிருப்பனபோலத் தோன்றுகிறது. நாம் அவற்றை முற்றிலும் இறைவன்மீது மட்டும் குவியவும், பிறிதொன்றிற் பற்றுருதிருக்கவும் செய்தல் வேண்டும். மனதைப் புறப் பொருள்களினின்றும் விலக்கி இழுத்து, இறைவன்மீது நிலைநிறுத்தல் வேண்டும். அப்போதுதான் ஒருவன் இறைவனை உணர்ந்து, என்றென்றும் விடுதலையடைதல் உறுதியாம்.

ஆனல் இவ்வுலகிலும் இதனிலும் மேலுலகிலும் உள்ள இனிய பொருள்கள் நம் புலன்களைக் கவர்கின்றன. நம் உள்ளங்கள் புலன்களைத் தொடர்ந்து ஓடுகின்றன; இறைவனைப் பற்றியும், நமது வாழ்க்கையின் நோக்கத்தைப் பற்றியும் முழுதும் மறந்துவிடுகிறோம். (கீதை, 2—67). நம்

உள்ளங்கள் பொருள்களின் கவர்ச்சிக்கு வசப்பட்டு வெறி கொண்டு அவற்றை நாடும்போது, அவற்றினின்றும் உள்ளங்களை மடக்கி இழுத்தல் எளிதான முயற்சியன்று.

ஆயினும் அதைச் செய்து முடித்தல் வேண்டும்; எவ்வளவு நெடுங்காலம் முயல நேரினும் சரியே. இந்திரிய விஷயங்கள் எல்லாவற்றின் மீதுள்ள பற்றையும் விட்டு விடல் வேண்டும். (கீதை. 6–35). மனப்பூர்வமாகவும் பிடிவாதமாகவும் செய்யும் முயற்சிகளால் இப்பேற்றையும் பெறலாகும். இப்பற்று குறையக் குறைய, நமது உள்ளங்கள் இறைவனை அதிகமாக அணுகுகின்றன. அவை பற்று என்னும் மண்ணினால் மூடப்பெற்ற பல இரும்புத் தூள்களைப் போன்றன என்னலாம். அவை கழுவப்பெற்றபின், இறைவன் அவற்றை ஒரு வலிமிகுந்த காந்தம்போல இழுத்துக் கொள்கிறான்.

ஆனால் ஒன்று, எல்லா இந்திரிய விஷயங்கள் மீதும் உள்ள பற்றை ஒரு நாளில் விட்டுவிட இயலாது. இத்தகைய கருத்தே பலர்க்கு நடுக்கம் விளைக்கும். பண்படாத உள்ளங்கள் சிறு குழந்தைகளைப் போன்று உலக போகத்தை விரும்புகின்றன. முழுதும் பற்றற்றிருத்தலை அவை பெறும் அவசியம் இல்லை. இந்து மதம் அவற்றிற்கென ஓர் ஆரம்ப முறையை விதிக்கின்றது. இதற்குப் பிரவிருத்திமார்க்கம் (ஆசை நெறி) என்று பெயர். தனிமக்கள் இவ்வுலகத்தும் இதனினும் மேலான உலகங்களிலும் உள்ள நல்ல பொருள்களை விரும்புதற்கு அம்மதம் அனுமதியளிக்கின்றது; அத்தகைய விருப்பங்களை நிறைவேற்றும் வகையையும் எடுத்துக் கூறுகிறது. இந்நெறியை முழு மனதோடு பின்பற்றுவார்க்குத் தமது துயரத்தைக் குறைத்துக் கொள்ளவும், இம்மை மறுமைகளில் மிகுதியான போகத்தை நுகரவும் இயலும். அம்மட்டோ? முழு மனதோடு இந்நெறியைப் பின்பற்றுவார் இம்முறையினால் ஓரளவிற்குத்

தம் உள்ளங்களைப் படிப்படியாகத் தூய்மைப்படுத்தி வருகின்றனர். எவ்வாறெனில், பிரவிருத்தி மார்க்கம், முக்கியமான பகுதிகளை ஆராயுங்கால், மன அடக்க முறையின் ஆரம்பப் பயிற்சியே யாகின்றது. வேதங்களிலுள்ள கரும காண்டம் (கிரியைகளைப் பற்றிக் கூறும் பகுதி) இந்நெறியைக் காட்டுகிறது; பூர்வ மீமாம்சம் விவரங்களை விளக்குகின்றது.

இது இவ்வாறாக, வேறு சிலரோ இவ்வுலக இன்பங்களால் அலுத்துப் போனவராகக் காணப்படுகின்றனர். இதனினும் மேலான உலகங்களிலுள்ள இந்திரிய விஷயங்களினுற் பெறக்கூடிய தீவிரமான இன்பத்திலும், அன்னார் தேட்டமற்றவராகின்றனர். இப்பிறவியிலும் முற்பிறவிகளிலும் பெற்ற அனுபவத்தின் துணையாலே ஐம்புல இன்பத்தின் புரையோடிய தன்மையினை அவர்கள் கண்டிருத்தல் வேண்டும். இத்தகைய மக்கள் முடிவான பயிற்சியைக் கைக்கொள்ளத் தகுதியுற்றவர்; அதுதான் நிவிருத்தி மார்க்கம் (ஒடுங்கும் முறை, துறவு நெறி) எனப்படும். அவர்கள் எல்லா ஆசைகளையும் துறந்து, தம் உள்ளங்களை முற்றிலும் இறைவன் மீது குவியச்செய்ய வேண்டியவராகின்றனர். இதை இயற்றப் பலப்பல முறைகள் விதிக்கப்பட்டுள்ளன. இவற்றில் யாதேனும் ஒன்றை ஒருவன் பற்றி, குறியை நோக்கி நேராகச் சாரலாகும். வேதங்களிலுள்ள ஞான காண்டம் (ஞானத்தைக்கூறும் பகுதி) இந்நெறியை மிக மிக முற்பட்ட காலத்து வெளியிடலாயிற்று.

இவ்வாறு இந்து மதம் இரு படிகள் வழியாகப் பூரண நிலைக்கு மேலேறும் வகையை நமக்குப் போதிக்கின்றது. ஆசைநெறி (பிரவிருத்தி மார்க்கம்), அதன்பின் உரியகாலத்துத் தொடர்ந்து வரும் துறவு நெறி (நிவிருத்தி மார்க்கம்). இவ்விரண்டும் பயிற்சி முழுதையும் முற்றுவிக்கின்றன. உலகப் பொருள்களின் மீதுள்ள தினையளவு பற்றும் உதிர்ந்து, நம்மிடத்துள்ள தெய்வத் தன்மை முழுதும் வெளிப்படும் போதுதான் அப்பயிற்சி முடிவடைகின்றது. ஏனெனில், அப்போதுதான் நாம் ஸம்ஸாரத்தினின்றும் வெளியேறி, முக்தியை அடைகிறோம்.

## 6

# பிரவிருத்தி மார்க்கம்

### ஆசை நெறி

இவ்வுலகம் எவ்வளவு இனிமை மிக்கது! நமது போக நுகர்ச்சிக்குத் துணையாகும் பொருள்கள் அதில் நிறைந்துள்ளன. மனமகிழ்ச்சியை ஊட்டும் காட்சிகளும் ஒலிகளும் மணங்களும் சுவைகளும் பரிசங்களும் நம்மைக் கவர்கின்றன. நாம் அவற்றைப் பற்றவும் நுகரவும் விரும்புகிறோம். அத்தகைய நுகர்ச்சியிலுள்ள நமது ஆசை வளர்ந்துகொண்டே போகிறது.

இன்னும், சூக்கும உலகங்களிலே இவற்றைக்காட்டிலும் அளவு படாது மிக்க இனிமை வாய்ந்த பொருள்களும் உள. கல்வியறிவும் நேர்மையும் நல்லவற்றை எதிர்பார்க்கும் இயல்பும் வாய்ந்த ஓர் இளைஞனாகி, பலமும் நலமும் உற்ற உடலுடையனாய், உலகமுழுதும் அரசாட்சி செய்பவனாயும், அதன் செல்வங்களும் போகப் பொருள்களும் தன்வசம் உள்ளவனாயும் இருக்கும் ஒருவனைச் சற்றே நினைப்போம்; அவன் எவ்வளவு ஆனந்தமாக வாழ்வான் என்பதைக் கற்பனையாற் கருதக் கூடுமா? ஆயினும் அதனினும் சூக்குமமான உலகங்களில் ஒருவர்க்குக் கிடைக்கக் கூடியவற்றோடு ஒப்பிடும்போது, அவனது ஆனந்தம் ஒன்றுமற்றதாகிவிடும். பிதிர் உலகத்தே ஓர் உயிர்க்கு விளையும் ஆனந்தத்தை அளவிடுவதற்கு அவனது ஆனந்தத்தை இலக்ஷம் மடங்கு பெருக்கவேண்டும். இதை இலக்ஷம் மடங்கு பெருக்குவோமாயின், தேவ உலகத்து ஆனந்தத்திற்கு ஓர் அளவு கிடைக்கும். அம்மாதிரியே இன்னும் ஒரு முறை பெருக்குவோமாயின், பிரம்ம உலகத்து ஒருவர் பெறும் ஆனந்தத்தின் அளவைக் காட்டும். நம் சாஸ்திரங்கள் அதைக்கூறியுள்ள வகை இவ்வாறு. (தைத். உப.-II. 8, 1-4).

இவ்வாறு சாஸ்திரங்களின் துணையாலே அறிந்து கொள்ளும் நாம் சூக்கும உலகங்களிலுள்ள தீவிர இன்பம் விளைவிக்கும் பொருள்களை நுகர்வதிலும் ஆவல் கொள் கிறோம். ஆக, இவ்வுலகத்தும் சூக்கும உலகங்களிலும் உள்ள மிகச் சிறந்த பொருள்களைப் பெற நாம் அவாவுகிறோம்.

அத்தகைய ஆசைகளை நிறைவேற்றும் மார்க்கத்தையும் நம் சாஸ்திரங்கள் நமக்குக் காட்டுகின்றன. இது (பிர விருத்தி மார்க்கம்) ஆசை நெறி எனப்படும். நமது ஆசை களை நாம் ஆராயவேண்டும் என்றும் அவை நமக்குப் போதிக்கின்றன. ஆசையொவ்வொன்றும் நன்மை தருவ தன்று. சில நம்மைத் தீச்செயல்களைச் செய்யுமாறு நடத் திச் செல்கின்றன; அச்செயல்களின் உறுதிப் பயனாகத் துய ரமே விளைகின்றது. நமக்கு ஆனந்த வாழ்வு வேண்டின், அந்த ஆசைகளை நாம் விட்டுவிட வேண்டியதாகும். உதா ரணமாக, பொய்யும் களவும் வஞ்சனையும் பிறர்க்குத் தீங் கிழைத்தலும் இவை யாவும் தீயனவேயாம். இவற்றின் எதிர் வினையாக நமக்குத் துயரங்கள் சேர்கின்றன. இவற்றை நாம் நீக்கவேண்டும். அம்மாதிரியான தீச்செயல்களைச் செய்யுமாறு நம்மைத் தூண்டும் எந்த ஆசையும் விடத் தகுந்ததேயாம். துயரத்தை நமக்குத் தரும் எல்லாச் செயல் களையும் நம் சாஸ்திரங்கள் விலக்குகின்றன. இம்மை மறுமைகளில் ஆனந்தத்தை வேண்டுவார் (சாஸ்திர நிஷே தங்களை) சாஸ்திரங்களால் விலக்கப்பட்டனவற்றை மீறி ஒருகாலும் செல்லக்கூடாது.

மேலும், நம் சாஸ்திரங்கள் சில புண்ணியச் செயல் களைச் செய்யுமாறு நமக்குக் கட்டளையிடுகின்றன. காரணம், இவை ஆனந்தத்தை விளைப்பது உறுதி. நாம் (பிரவிருத்தி மார்க்கத்தில்) ஆசை நெறியில் செல்லும்வரை சாஸ்திரங் கள் கூறும் இவ்விதிகளைப் பின்பற்றுவதற்காக இயன்ற வரை பாடுபடல் வேண்டும்.

இனி, புண்ணியச் செயலின் இயல்பு யாது? சுருங்கச் சொல்லில், தன்னயத்தை அறுக்க நமக்குத் துணை புரியும் எச்செயலும் ஒரு புண்ணியச் செயலாகும் (அறச் செயலாகும்). இத்தகைய செயல்கள் மட்டுமே நமக்கு இன்பத்தை ஊட்டவல்லனவாம். ஒவ்வொருவரும் தம் தற்காலத் தன்னயப் பற்றுகளைக் கொடுத்தே பிற்கால ஆனந்த வாழ்வைப் பெற வேண்டியிருக்கின்றது. இச்செயல்கள் ஒவ்வொன்றும் (யக்ஞம்) ஒரு யாகம் அல்லது வேள்வி யெனப்படும்.

பஞ்ச யக்ஞம்

நம் சாஸ்திரங்கள் அனைவர்க்கும் பஞ்ச யக்ஞங்களை (ஐவகை வேள்விகளை) விதிக்கின்றன. இவையாவன: தேவ யக்ஞம், பிதிர்யக்ஞம், ரிஷியக்ஞம், நிருயக்ஞம், பூதயக்ஞம் என்பவை. தேவலோகம் பிதிர்லோகம் இரண்டில் வாழ்வாரையும், சாஸ்திரங்களைக் கண்டவரும் இயற்றியவருமாகிய ரிஷிகளையும், மக்களையும், உலகிலுள்ள ஏனைய உயிர்களையும் நம் யக்ஞங்களாகிற செயல்களாலே மகிழ்விக்க வேண்டும். நம்மிடத்து உள்ளதினின்றும் எதையேனும் மற்றெல்லோர்க்கும் நாம் கொடுத்தாக வேண்டியுள்ளது. இதுவே ஆனந்தம் பெற நாம் கொடுக்கும் விலையாகும்.

பிரார்த்தனையும் வழிபாடும் தேவர்களை மகிழ்விக்கின்றன. இத்தேவர்களும் நம்மைப்போன்ற உயிர்களேயாவர். அவர்கள் நம்மினும் நன்னிலையிலுள்ளனர் என்பதே. ஒரு காலத்து அவர்கள் மனிதராயிருந்தவர், பூவுலகிலே அவர்கள் இயற்றிய நற்செயல்களின் பயனாகத் தேவலோகத்திலே அவர்கள் தேவர்களாகப் பிறந்துள்ளனர். அவர்கள் நம்மினும் ஏராளமான மிக்க சக்தி வாய்ந்தவர். ஒளி வெம்மை மின்சாரம் மழை காற்று முதலிய இயற்கைப் பௌதிக சக்திகளை அவர்கள் அடக்கியாண்டு வருகின்றனர். நாம் கொடுப்பனவற்றால் மகிழும்போது அவர்கள் இச்சக்திகளை நமக்கு

அனுகூலமான வகையிலாக்கி, நாம் மெத்தவும் விரும்புவன வற்றை நமக்கு அருளுகின்றனர்.

பிதிர் உலகத்தில் வாழ்பவர்களுக்குள்ளே நமது முன்னோர்களிற் பலர் இருக்கலாம். அவர்கள் நம்மிடம் அன்புடையவர். நாம் அவர்களை நினைத்து அவர்கட்குத் தருப்பணம் (எள்ளும் நீரும் கொடுக்கும் செயல்) புரிந்தால், அவர்கள் திருப்தியடைகின்றனர். அவர்களும் நம்மிலும் பார்க்க மிகப்பெருஞ் சக்தியை ஆண்டு வருகின்றனர். இக்காரணத்தால் அவர்கள் திருப்தி யடையும்போது நாம் விரும்பும் பொருள்களை அருள அவர்கட்கு இயலுகின்றது.

இருடியர் (ரிஷிகள்) நம்மிடமிருந்து எந்த சடப்பொருளையும் பெற விரும்புவதில்லை. நாம் சாஸ்திரங்களை ஒழுங்காகக் கற்போமாயின், அவர்கள் மகிழ்கின்றனர். சந்தியா வந்தனம் (காலை உச்சி மாலைகளில் வேத மந்திரங்களாற் செய்யும் வழிபாடு) போன்ற நித்திய கருமம் இவ்வகையுள் அடங்கும். இவற்றுக்காக நமது பொழுதில் ஒரு பகுதியை நாம் ஒதுக்கி வைக்க வேண்டியிருக்கிறது. இக்காரணத்தால் இக்கல்வியும் (ஸ்வாத்யாயம்) ஒரு யக்ஞம் (வேள்வி) ஆகின்றது. இருடியர் மகிழும்போது நமது நலத்தைக் கவனித்துக் கொள்கின்றனர்.

நிரு யக்ஞம் முறைப்படி நான்காவதாகும். துன்புறுகின்ற நம் சகோதரர்கட்கு நாம் பணிசெய்ய வேண்டியவராகிறோம். நம் சகோதர மக்களின் துயரத்தை ஒழிக்க முயலுதல் நமது கடமையாகும். இவ்வாறு செய்வோன் இறைவனுக்குப் பணிசெய்வோன் ஆவான். எவ்வாறெனில், இறைவனே அத்தனை வடிவங்களோடு ஈண்டு எழுந்தருளியிருக்கிறான், இத்தகைய பணியினால் மகிழும் இறைவன் பணிபுரிவோனின் விருப்பங்களை அளிக்கின்றான்.

அடுத்ததான பூத யக்ஞத்தைப் பற்றியும் இவ்வாறே கூறலாகும், நமது உணவில் ஒரு பகுதியை விலங்குகள்

பறவைகள் பூச்சிகள் முதலியவற்றிற்காக நாம் மீத்து வைத்தல் வேண்டும். இந்த யக்ஞமும் நமக்கு ஆனந்த வாழ்வை அளிக்கின்றது.

முதலிரு யக்ஞங்களும் யாகக் கிரியைகளால் ஆனவை, பின்னிரண்டும் தருமச் செயல்களாலானவை; இந்நான்கும் சேர்ந்து 'இஷ்டா பூர்த்தம்' எனப்படும். (இஷ்டா—யாகக் கிரியைகள்; பூர்த்தம்—பொது மக்கட்காகக் கிணறுகள் தோண்டுதல் போன்ற தருமச் செயல்கள்.)

வருண ஆசிரம தருமம்

பஞ்ச யக்ஞங்கள் போக, ஒவ்வொருவனுக்கும் அவனவனது வாழ்க்கை நிலைக்கும் ஸமூகத்தில் எய்தியுள்ள பதவிக்கும் தக்கவாறு செய்யவேண்டிய சில கடமைகளும் உள்ளன. ஓர் இந்துவின் வாழ்க்கையை நான்கு நிலைகளாகப் பிரித்துள்ளனர்; அவையாவன: பிரம்மசரியம், கார்ஹஸ்தியம், வானப்பிரஸ்தம், சன்னியாசம் என்பவை. மாணவனது வாழ்க்கை, இல்லறத்தானது வாழ்க்கை, ஒழிவுபெற்றவனது வாழ்க்கை, துறவியின் வாழ்க்கை—இவை நான்கும் ஒன்றன் பின் ஒன்ருக முறையே தொடர்ந்து வரும் நிலைகளாவன. இந்நிலைகள் (ஆசிரமங்கள்) ஒவ்வொன்றுக்கும் சில குறிப்பிட்ட கடமைகள் விதிக்கப்பட்டுள்ளன. இன்னும் நான்கு ஸமூக வகுப்பினரும் உளர்; அவர் ஒவ்வொருவர்க்கும் தனித்தனியாக வகுக்கப்பட்டுள்ள கடமைகளும் உள. பிராம்மணர் (ஞான குரவரும் சட்டங்களை இயற்றுவோரும்), க்ஷத்திரியர் (போர்வீரர்), வைசியர் (வணிகர்), சூத்திரர் (தொழிலாளர்) —இவர் நான்கு ஸமூக வகுப்பினர் (வருணத்தார்) ஆவர். சாஸ்திரங்களைக் கற்று விரிவாக எடுத்துரைக்க வேண்டியவர் பிராம்மணராவர். தூய்மையும் எளிமையும் வாய்ந்த வாழ்வினைக் கடுமையாகப் பின்பற்ற வேண்டும் என்று அவர்கட்கு விதிக்கப்பட்டுள்ளது. அவர்கள் தமது

அதிகாரத்தை முறை தவறிச் செலுத்தாதிருக்க வேண்டிய வர். மெலியாரைக் காத்தற்கும் தீயாரை ஒறுத்தற்கும் (தண்டித்தற்கும்) அவர்களுடைய ஆயுதங்கள் ஏற்பட்டுள் ளன. வைசியராகிய வணிகர் பேராசைக்கோ வஞ்சனைக்கோ ஆளாதல் இழிவெனப்படும். தருமங்கட்காகத் தம்மால் இயன்றவரை செலவு செய்தல் வேண்டும். சூத்திரராகிய தொழிலாளர் நேர்மையாகவும் சுறுசுறுப்பாயும் இருக்கக் கற்பிக்கப் படுவர்.

ஆக, இம்மைக்கும் மறுமைக்கும் உரிய இனிய பொருள் களைப் பெறும் பொருட்டு ஒவ்வொருவனும் தனது வருணத் திற்கும் ஆசிரமத்திற்கும் சம்பந்தப்பட்ட எல்லாக் கடமை களையும் இயற்றியாக வேண்டும். அவனவனுக்கு ஸமூகத்தில் உள்ள பதவிக்கும் வாழ்க்கை நிலைக்கும் தக்கவாறு அமையும் கடமைகளே அவனது ஸ்வதருமம் (அவனுக்குரிய மதம்) ஆகும்.

பஞ்ச யக்ஞங்கட்கும் வருண ஆசிரம தருமங்கட்கும் மேலே, நாம் இறைவனை வழிபடவும், நாம் விரும்பும் பொருள்கட்காக அவரைப்பிரார்த்திக்கவும் வேண்டியவராகி றோம். நம் செயல்கட்குரிய பயன்களை இறைவரே நமக்கு உண்மையாக நல்குபவராகின்றனர். நம் கடமைகள் அனைத்தையும் நன்றியோடு இயற்றி முடித்தபின் முழுமன தோடு அவரிடம் பிரார்த்தனை செய்வோமாயின், அவர் நம் ஆசைகளை நிறைவேற்றுவார். விரும்பிய பொருளைப் பெறு தற்காக நம்மால் இயன்ற அளவு முயற்சி செய்யவேண்டி யிருக்கின்றது. ஏனெனில் அப்போதுதான் நாம் இறைவ னிடம் மனமாரச் செய்யும் பிரார்த்தனைகள் நிறைவேறுகின் றன.

இவ்வாறாக, வாய்மை களவுசெய்யாமை இன்னாசெய் யாமை முதலியவற்றின் வாயிலாகப் பெறும் அடக்கம் ஒழுக் கம் இரண்டையும் தவிர, பஞ்ச யக்ஞங்களும் வருணாசிரம தருமங்களும் இறைவன் வழிபாடும் (பிரவிருத்தி மார்க்கத் தில்) ஆசை நெறியிற் செல்ல விரும்புவோர்க்கெல்லாம் விதிக்கப்பட்டுள்ளன. யக்ஞங்கள் தன்னல மறுப்பையும்

பணியையும் போதிக்கின்றன. நமது சகோதர மககளின் மீதும், நமக்கு மேலும் கீழும் உன்ள எல்லா உயிர்களின் மீதும் அன்பு பாராட்டவும், அவர்கட்குப் பணியாற்றவும் அவை நமக்குப் போதிக்கின்றன. இறைவர் அன்புமயமான வர், அவர் எல்லா உயிர்களிலும் உள்ளனர். ஆதலின், இந்த யக்ஞங்களை இயற்றுவதனால், நாம் மெல்ல மெல்லத் தன்னயம் என்னும் இருட்குகையினின்றும் வெளியேறி, எல்லா அன்பிற்கும் ஞான ஒளிக்கும் உற்பத்தியான இறைவரை மேலும் மேலும் அணுகுகிறோம். இக்காரணத்தால் யக்ஞங்கள் நமக்கு ஆனந்தத்தை ஊட்டுவதுமின்றி, நம் உள்ளங்களைத் தூய்மையாக்குதலாலே இருளினின்றும் நம்மை ஒளியை நோக்கி நடத்துகின்றன. வருணாசிரம தருமங்களும் நம் மாசுகளிற் பலவற்றைப் போக்க உதவுகின்றன. படிப்படியாக நமது சோம்பலை (தமோ குணத்தை) ஒழிக்கவும், நம் காமக்குரோதங்களை (இரஜோ குணத்தை) அடக்கவும் அவை துணை செய்கின்றன, இறுதியாக, இறைவரைப் பற்றிய நினைவுகளைக் காட்டிலும் அதிகமாக நம் உள்ளங்களைத் தூய்மையாக்குவது வேறெதுவும் இல்லை. நாம் இறைவரைப்பற்றி நினைக்குந்தோறும் நம் உள்ளங்கள் முன்னினும் தூய்மையடைந்து வருகின்றன.

## 7

## பிரவிருத்தி மார்க்கம் (தொடர்ச்சி)

### இருக்கிறபடியே

பண்டைய இந்துக்கள் இம்மையிலும் மறுமையிலும் இன்பம் பெறுதற்பொருட்டு இன்னவாறு முயன்றனர் என்பதை யாம் அறிந்தோம். அதில் அடங்கிய முக்கிய கருத்து யாதெனில், படிப்படியாக அடையும் தன்னடக்கத்தாலும் தியாகத்தாலும் தொண்டாலும் இறைவன் மீதுள்ள பக்தி

யாலும் ஒருவன் தனது உள்ளத்தைப் பண்படுத்தலேயாம். பழங்கால இந்துக்கள் இத்தகைய பயிற்சியை ஏற்றுக் கொண்டது இம்மையிலும் மறுமையிலும் இன்பத்தைப் பெறுதற்காகவே.

ஒரு சிறிது அறவாழ்க்கையும் ஞானப் பயிற்சியும் இம்மை மறுமை இன்பங்களை நமக்கு அளிக்கக்கூடியன என்பது, பண்டைய இருடியர் கண்ட அழிவற்ற உண்மை யாகும். இதையே ஆதாரமாகக்கொண்டது பிரவிருத்தி மார்க்கம் என்னும் ஆசைநெறி. இவ்வுண்மை முன்னுளிற் போன்று இந்நாளில் பயன் தரவல்லதே. இதைப்பற்றி நமக்கு ஐயம் வேண்டாம்.

ஆயினும் நாம் கவனிக்கத்தக்கது ஒன்றுண்டு: மிக நீண்டகாலமாக இந்துமதம் விவரங்களிலே பெரும் மாறுதல் களை அடைந்து வந்துள்ளது. ஆசைநெறியின் அடிப்படை உண்மை மாருதிருப்பினும், பயிற்சி வகைகள் முற்றிலும் மாறுபட்டுள்ளன.

உதாரணமாக, தேவயக்ஞத்தை எடுத்துக்கொள்வோம். முற்காலத்தில் மக்கள் பலப்பல தேவதைகட்காக வைக்கப் பட்டிருந்த வெண்ணெய் தயிர் முதலியவற்றை ஆகுதியாக அக்கினிக் கடவுளுக்கே அளிப்பது வழக்கமாயிருந்தது. இவ் வாறு செய்யும்போதே அந்தந்த தேவதைகட்குரிய தோத்தி ரங்களை இசைத்தும், ஏற்ற மந்திரங்களை உரைத்தும் வரு வர். தோத்திரங்களும் மந்திரங்களும்—யக்ஞம் செய்யும் முறை முழுவதும் வேதங்களினின்றும் எடுத்தாளப்படும்.

தற்காலத்திலோ தேவதைகளை வணங்கும்போது, வழக்கமாகத் தீபம் தூபம் மலர்கள் கனிகள் இன்சுவைப் பண்டங்கள் முதலியவற்றைக் கொண்டு வணங்கிவரு கிருேம்; அதேசமயம் வேறுவகையான தோத்திரங்களையும் மந்திரங்களையும் பயன்படுத்தி வருகிருேம். மேலும், நமக்கு முன்பே தெய்வங்களின் உருவங்களையோ குறிகளையோ

வைத்து, அவற்றிற்குமுன் நம் காணிக்கைகளையும் இடு கிறோம். சொல்லவேண்டிய மந்திரங்களும் வழிபடுமுறை முழுவதும் பிற்காலத்திய சாஸ்திரங்களால் (பெரும்பாலும் தந்திர சாஸ்திரங்களால்) அளிக்கப்பட்டுள்ளன. அக்கினி யில் செய்யப்படும் ஆகுதிவடிவமான யக்ஞம் சடங்குகளோடு செய்யப்படும் பூஜையின் ஒரு பகுதியாக மட்டும் பன்முறை யும் இருந்துவருகிறது. ஆயினும் சில அரிய சந்தர்ப்பங் களில் புத்திரேஷ்டி யாகம்போன்ற தூய வைதிக யக்ஞங் களைச் சிலர் தாம் கோரிய சில பயன்களை அடையும் வண் ணம் இன்றும் இயற்றிவருகின்றனர்.

(தெய்வங்களின் குறிகளாவன: விஷ்ணுவைக் குறிக் கும் சாளக்கிராம சிலையையும், சிவபெருமானைக் குறிக்கும் சிவலிங்கத்தையும் போன்றவை; இந்நூலின் அத்தியாயம் 11ஐப் பார்க்கவும். தந்திர சாஸ்திரங்களைப்பற்றி அறிய இந் நூல் அத்தியாயம் 12ஐப் பார்க்கவும். தூய வைதிக [வேதத் திற் கூறப்பட்ட] பூஜைமுறையைப் பஞ்சாப்பைச் சேர்ந்த சுவாமி தயாநந்தரால் நிறுவப்பட்ட ஆரிய சமாஜத்தார் மீண்டும் உயிர்ப்பித்துள்ளனர்.)

இன்னும், இந்திரன் வாயு வருணன் மித்திரன் அசுவினி குமாரர் போன்ற வேதகாலத் தேவதைகள் பின்புறம் சென்றுவிட்டனர். அவர்களிற் சிலர் சடங்குகளோடு இயற் றப்படும் பூஜை சம்பந்தமாக மட்டும் இன்னும் இருந்து வரு கின்றனர். நெடுங்காலத்திற்கு முன்பே வேத காலத் தேவ தைகளை சூரியன் கணபதி விஷ்ணு சிவன் சக்தியென்ற தெய்வங்கள் மறையும்படிச் செய்துவிட்டன. இறைவனை மக்கள் இவ்வடிவங்களோடு வழிபட்டு வரலாயினர். இதனால் ஸௌரம் காணபத்யம் வைஷ்ணவம் சைவம் சாக்தம் என் னும் ஐந்து மதப்பிரிவுகள் உண்டாகலாயின. ஒவ்வொரு பிரிவும் இறைவனை இவ்வடிவங்களுள் யாதேனும் ஒன்றின் வாயிலாக வழிபட்டுவந்தது. நமது காலத்தில் பின் மூன்று மதங்களுமே தலைமை பெற்றுள்ளன.

மிகப் பழமையான காலமுதலே இந்துக்கள் ஏக பரம் பொருட் காட்சியைப் பெற்றுவந்துள்ளனர். ஈசன் ஒருவனே என்பதையும், அவனது வடிவங்கள் பலவற்றுள் யாதேனும் ஒன்றினிலோ, யாதொரு வடிவமும் பற்ருமலோ, அவனை வழிபடலாம் என்பதையும் யாம் அறிவோம். நம் கருமங் கட்குப் பயன்களை அருளுபவன் இறைவனே. நாம் அந்நெறி யினை வழுவாது பின்பற்றி இறைவனிடம் பிரார்த்திப்போ மாஞல், அவனிடமிருந்து நாம் நாடுவதைப் பெறுவது உறுதியே. பற்பல தேவதைகளைத் திருப்தி செய்யும் தொழி லில் இழியலாம், இழியாதொழியலாம். நம் பிரார்த்தனை களை நேராக இறைவனைக் குறித்தே அனுப்பலாம். தேவ யக்ஞம் என்ற வடிவிலே செய்தற்குரியது வேருென்றும் எஞ்சியிருக்கவில்லை. (காயத்திரி ஜெபம் உள்ளிட்ட சந்தியா வந்தனம் போன்ற நித்திய கருமம் இன்னும் வழக்கத்தில் உள்ளது என்பது உண்மையே.) ஆக யாதேனும ஒரு வடி விலோ, யாதொரு வடிவமும் இன்றியோ இறைவனை வழி படுதல் பழமையான தேவயக்ஞத்திற்குப் பதிலாக அமைந்து விட்டது.

இனி வருண ஆசிரம தருமங்களை நோக்குவோம். நமது ஸமூக அமைப்போ ஏறக்குறைய உருத்தெரியாத நிலைமை வரை மாறிவிட்டது என்னலாம். முற்காலத்தில் பிராம் மண க்ஷத்திரிய வைசிய ஸூத்திர வருணங்கள் என நான்கு வருணங்கள் இருந்தன. (கீதை 4—13ஐ நோக்கவும்.) பழைய இந்து ஜன ஸமூகம் அவரவரது பல திறப்பட்ட தகுதிகட்கும் தொழில்கட்கும் தக்கவாறு இந்நான்கு பிரிவு களாக வகுக்கப்பட்டது. ஒவ்வொரு பிரிவினர்க்கும் அவர வர்க்கென விதிக்கப்பட்ட கடமைகள் இருந்தன. இப் போதோ நான்கு வருணங்கட்குப் பதிலாக நூற்றுக்கணக் காக ஜாதிகளையும் உட்பிரிவுகளையும் நாம் வளர்த்துவிட் டோம்; எனினும், உண்மையான பிராம்மணரையும் உண் மையான க்ஷத்திரியரையும் காண்பது அரிதாகி விட்டது. பிறவிமட்டுமே நமது ஜாதியைத் தீர்மானிப்பதாகிறது. தகுதியும் தொழிலும் என்னும் இரண்டிற்கும் நம் ஜாதி

கட்கும் யாதொரு தொடர்பும் இல்லை. பல ஜாதிகளும் ஒன்றோடொன்று மணம்புரிந்து கொள்ளுதற்கும் உடன் உண்பதற்கும் தடையிருத்தலின், வேறு வேருகப் பிரிந்தே நிற்கின்றன. இவ்விஷயத்தில் கீழானதென்ன முடியாத ஓர் இடந் தீண்டாமைக்கும் உண்டு என்பதும் மெய்யே. இச்சம யம் நமது இந்து ஜன ஸமூகத்தின் இதுபற்றிய நிலை மிக வருந்தத் தக்கதேயாம். அது பகைமையை விளைவித் துள்ளது. எவ்வுயிரையும் தன்னுயிர்போல் அன்பு செய்தல் எனும் முன்னுளைய இந்துமத இலக்ஷியத்தினின்றும் அது நம் மைக் கீழே இழுத்துக் கொண்டு வருகின்றது. வருண ஆசிரம தருமங்கள் தனிப்பட்ட மனிதனைத் தூய்மைப் படுத்துதற்கெனவே ஏற்படுத்தப்பட்டன. நமது ஜாதிக் கருத்துகள் அதற்கு மாருனதையே இயற்றி வருகின்றன. நாம் நம் ஜாதிகளை நிலைக்கச் செய்ய வேண்டுமாயின், நம் மைப்போன்ற பிற மக்களிடத்துக் காட்டும் வெறுப்பு முழு தும் ஒழியும் அளவிற்காயினும் ஏற்பாடு செய்தல் வேண்டும். ஜாதிமுறையைச் சுற்றி வளர்ந்துள்ள காரணமற்ற கருத்து களால் தனி மனிதர்களோ ஸமூகமோ பயனடையப் போவ தில்லை.

நான்கு ஆசிரமங்களாகிய பிரம்மசரியமும் கார்ஹஸ்திய மும் (இல்லற நிலையும்) வானப்பிரஸ்தமும் ஸன்யாஸமும் ஒரு மனிதனது வாழ்க்கையில் முறையாகத் தொடர்ந்துவரும் நான்கு படிகளாயிருந்தன. இந்த நான்கு நிலைகளும், ஒவ் வொன்றிற்கும் தனித்தனியாக உரியகடமைகள் இருத்தலின், ஞான வளர்ச்சிக்கு வேண்டிய படிகளின் வரிசையாயின. பழையகாலத்து இந்துவின் வாழ்க்கை ஞான முன்னேற்றத் திற்காகச் செய்யும் தொடர்ந்த முயற்சியாயிற்று என்பதை அத்தகைய முறை காண்பிக்கின்றதன்றோ? வாழ்க்கையைச் சார்ந்த ஏனைய ஒவ்வொன்றும் இந்த மேலான குறிக்கோளை நோக்கியதாகவே அமைந்திருந்தது.

இது இலக்ஷியமாகக் கருதத் தகும் நிலையே யாயிற்று. இது மனித வாழ்க்கையை மிக நன்ருகப் பயன்படுத்துவதா யிற்று. இத்தகைய பயிற்சியால் ஸமூக வாழ்க்கைக்கு மாருனவை யனைத்தும் ஒழிய ஏது உண்டாயிற்று. இவ் வாறு தனி மனிதனும் ஸமூகமும் இம்முறையினுல் பெரும் பயனை எய்த வழிபிறந்தது.

தற்கால இந்து ஸமூகத்திலோ ஒரு மனிதன் வழக்கமாக (கார்ஹஸ்தியம்) இல்லற நிலையொன்றின் வழியாக மட்டும் செல்கிருன். அதிலும் அந்நிலைக்குச் சிறப்பான கடமைகள் உள எனும் கருத்து மறைந்துவிட்டது. மாணவரது வாழ்க் கை இந்நாளில் பிரம்மசரிய நிலைக்கு உட்பட்டதாகவில்லை. ஒரு (ஸன்யாஸியின்) துறவியின் வாழ்க்கை இன்றளவும் நிலைத்துள்ளதெனினும், அது பொது வழக்கத்திற்கு விலக் காக மட்டும் இருந்து வருகின்றது.

இன்று யாம் வருண ஆசிரம முறையினின்றும் இவ் வண்ணம் வழுவியது, பழங்கால இந்துமத இலக்ஷியங் களினின்றும் எவ்வளவு தொலை இழிந்துவிட்டோம் என் பதை அளந்து காட்டுகின்றது. நமது போக்கு ஞானவாழ்க் கையைவிட்டு உலக வாழ்க்கையின்மேற் சென்றுவிட்டது. கடமை உணர்ச்சிக்குப் பதிலாக வெகு விரைவில் உரிமை யுணர்ச்சி குடிகொள்ளத் தொடங்கிவிட்டது. நாம் ஆசைப் படும் பொருள்களைப் பெறுதற்காக நம்மை ஞானநெறியி லும் தகுதியுள்ளவராக்கிக் கொள்ளும் அவசியத்தை நாம் உணர்வதில்லை. நாம் அப்பொருள்களை அதிகாரத்தோடு கேட்கிருேம், அவற்றிற்காகப் போராடுகிருேம். தகுதி யுடையாரே உயிர்வாழ்தல் வேண்டும் என்னும் பல்லவியைப் பாடுகிருேம். ஆனுல் இது வனத்திலுள்ள விலங்குகட் குரிய நியதியொன்றேயாகும். எங்கே ஞான முன்னேற்றம் விரும்பப்படுகிறதோ அங்கே அந்நியதிக்கு ஆட்சியில்லை.

ஆக, இந்துவின் பண்டைய வாழ்க்கைமுறையில் ஞான வாழ்க்கைக்கு ஒவ்வாத நோக்கங்கள் உட்புகுந்து, அதனை

ஏறத்தாழத் தலைகீழாக்க நேர்ந்து விட்டது. இந்துவின் வாழ்க்கைக்கு இன்றியமையாது வேண்டப்படுவதாய ஞானப் பயிற்சி இல்லாதுபோனமையே நன்கு விளங்கத் தலைப்பட்டு விட்டது.

**இருக்க வேண்டிய முறைப்படி**

இது மிக்க வருத்தந்தரும் ஞானத்தாழ்வுநிலையே. நமக்கு நம் சாஸ்திரங்களிலே சிரத்தை பெருகவேண்டும்; பண்டைய கருத்துகளையும் இலக்ஷியங்களையும் ஆதாரமாகக் கொண்டு, நமது ஸமூக வாழ்க்கையை அமைக்கவேண்டும். நாம் செய்யவேண்டியதெல்லாம் நமது சூழ்நிலை மாறியிருப் பதற்கேற்பச் சில்லரை விஷயங்களைப் புதிதாக அமைத்தலே.

நமது ஜன ஸமூகத்தை நான்கு வருணங்கட்குக் கீழே மீண்டும் வகுத்து அமைப்பது இக்காலத்து இயலாததாக லாம். ஆயினும், அந்நான்கு வகுப்புகளில் யாதேனும் ஒன்றிற்கு ஏற்றதாய தொழில்களைக் கைக்கொள்வார் அதற் கென விதிக்கப்பட்டுள்ள கடமைகளைச் சிரத்தையொடு இயற்றல் வேண்டும் என்பதை வற்புறுத்துதல் இயலுவதே யாம். உதாரணமாக, ஞான போதகரது தொழிலைத் தெரிந்தெடுப்பார் சாஸ்திரங்களிற் கூறியுள்ளபடி ஒரு பிராம் மணனுக்குரிய தகுதியைப் பெறும் பொருட்டு முழுமன தோடு முயலுதல் கட்டாயமாக வேண்டும். போர்புரிதலைத் தொழிலாகக் கொள்வோர் நமது சாஸ்திரங்கள் விதித்துள்ள படி க்ஷத்திரியர்க்குரிய தருமத்தைப் பின்பற்றல் வேண்டும். வைசியர்கட்கும் சூத்திரர்கட்கும் உரிய தொழில்கட்குச் சரி யானவற்றைக் கைக் கொள்வோரும் இவ்வாறு செய்தல் வேண்டும். ஆயினும், நிலைமைகள் மாறியிருப்பதற்கு ஏற்ற வாறு வேண்டிய விடத்து விவரங்களை மாற்றிக்கொள்ளுதல் சரியேயாகும்.

நான்கு ஆசிரமங்கள் (நிலைகள்) சம்பந்தப்பட்டவரை, அவற்றைக் கூடிய விரைவில் மீண்டும் உயிர்ப்பித்தல் கடமை யாகும். இது நாமிழந்த ஓர் அருநிதியம் ஆகும். முதல் மூன்று ஆசிரமங்களையேனும் முன்னிருந்த நிலைக்குக் கொணர நாம் இனித் தாமதம் செய்வோமெனின், நமது

இந்து ஜனஸமூகம் புரையோடியதாகி நொறுங்கி வீழ்வது திண்ணம். இறுதியான ஆசிரமத்தை அவரவரது இச்சைப் படி பற்றவோ விடவோ இடங்கொடுக்கலாம்.

பிரம்மசரிய ஆசிரமத்திற்குரிய பயிற்சியை இந்து குழந் தைகள் பெறுமாறு ஏற்பாடு செய்யவேண்டும். இந்நாளையக் கலாசாலைகளை அம்முறைக்கு இயையும்படி புதுவடிவம் பெறச் செயல்வேண்டும். பழைய கருத்துக்களையும் இலக்ஷி யங்களையும் அவற்றிற்குள்ளே புகுந்து பதியும்படிச் செயல் வேண்டும். உலகியற் கல்வியோடு ஞானக்கல்வியையும் அளித்தல் வேண்டும். (மாண்டுக்ய உபநிடதம் 1—1-4). ஞானவாழ்க்கையை ஆதாரமாகக் கொண்டு அதன்மீது ஒழுக்கத்தை அமைத்தலே, கற்கும் கல்வி முழுதிற்குமுள்ள மிகச் சிறந்த அறிகுறியாதல் வேண்டும்.

இத்தகைய பயிற்சி யொன்றுல்மட்டுமே ஒருவன் ஒழுங் காக இல்லறவாழ்க்கையை நடாத்தவும், அதன்பின் கூரிய மனத்துயரம் யாதுமின்றி வானப்பிரஸ்த நிலையிற் புகவும் திறமை பெறுவான்.

இவ்வாறிருப்பினும் முக்கியமான அறநெறியிற் (பிர விருத்தி மார்க்கத்திற்) செல்ல விரும்பும் ஒருவன் தனது நினைவுகளிலும் செயல்களிலும் அழுக்கற்றவனுயிருக்க முயல வேண்டும். அற ஒழுக்கமே அவனுக்கு வழிகாட்டியாக வேண்டும். அவன் மனம் மொழிமெய்களாலும் உண்மை யைக் கடைப்பிடிக்கப் பழகவேண்டும். உடல் உள்ளம் இரண்டின் தூய்மையையும் அவன் பாதுகாக்க வேண்டும். அவன் பிறர்க்குத் தீங்கிழைத்தலாகாது. மோசமே வஞ் சனையோ ஒரு சிறிதும் அவனிடத்து இடம் பெறக்கூடாது. ஐம்புலப் பொருள்களிடம் அவன் மிதமிஞ்சி ஈடுபடல் தகாது. புலன்களை அடக்குதற்கு அவன் இயன்றவரை முயல வேண்டும்.

இவ்வகையான அற ஒழுக்கப் பயிற்சியைப் பெறுவ தன்றியும், தற்காலம் வழங்கிவரும் முறைகட்கேற்ப, தேவ யக்ஞத்தையும் பிதிர்யக்ஞத்தையும் அவன் இயற்றவேண்டும்

மற்ற மூன்று யக்ஞங்களையும் (வேள்விகளையும்) பண்டு போலவும், வருண ஆசிரம தருமங்களைத் தற்கால நிலைமைக்கு ஏற்றபடியும் இயன்றவரையினும் இயற்றல் வேண்டும். சுருங்கச் சொல்லின், இதுவே பிரவிருத்தி மார்க்கத்தைக் கைக் கொள்ள விரும்பும் இக்கால இந்துக்கட்குரிய தருமமாகும்.

## 8

# நிவிருத்தி மார்க்கம்

### துறவு நெறி

மெய்யாக மனிதற்கு வேண்டியது நித்தியானந்தமே (சிரேயஸ்ஸே), ஆனால் அதை எங்கே எவ்வாறு பெறுவது என்பதை அவன் அறிவதில்லை. ஐம்புல இன்பத்தைத் தூய பேரின்பமென அவன் தவருகக் கருதுகிருன். இம்மை மறுமைகளுக்குரிய, மனத்தைக் கவரும் பொருள்களை அவன் விரும்பும் காரணம் இதுவே.

செல்வம் மக்கட்பேறு புகழ் முதலிய நூற்றுக்கணக்கான உலகப் பொருள்கள் அவனது மனத்தை இழுக்கின்றன. அவன் அவற்றை நோக்கி ஓடுகிருன். சிலவற்றை அவன் கைப்பற்றி, சிறிது நேரம் அனுபவிக்கிருன்; சில அவனது கைக்குத் தப்புகின்றன. அப்போது அவன் துயரமடைகிருன். வேறு சில சிறிது நேரம் அவன் கைக்குள் இருந்து, பின் திடீரென மறைந்துவிடுகின்றன. அத்தகைய நஷ்டங்கள் அவனைப் புண்ணுக்குகின்றன; பின்னும் மீண்டும், ஆசைப்பட்ட பொருள்கள் சிலவற்றை அடைந்ததும், புதிய ஆசைகள் கிளம்பி அவனை அமைதியற்றவனுக்குகின்றன. புலன்களின் அவாவினை அனுபவித்து ஒய்த்துவிட

இயலாது என்பதை அறிந்து அவன் அதைரியம் அடைகிருன், அம்முறையினல் ஆசை வளருவதையே அவன் காண்கிருன். ஆக, நிலேயற்ற சுகங்களே நாடும்பொருட்டு நில்லாதோடும் ஓர் ஓட்டமாகவே அவனது வாழ்க்கை ஆகிறது. இந்நெறி யிலே அவன் ஒருகாலும் திருப்தியடைவதில்லே. நிறை வெய்தாத ஆசையினின்றும், ஆசைப்படும் பொருள்களே விட்டுப் பிரிவதினின்றும் பிறக்கும் துயரம் அவனே அடி யெடுத்து வைக்குந்தோறும் தொடர்கின்றது. அவனுக்குப் பிரியம் இல்லாவிடினும், மீண்டும் மீண்டும் மரணத்தின் எதிரே நிற்கும் அவசியம் இருத்தலின், பிறவிதோறும் இவ் வாறே நிகழ்ந்து வருகின்றது.

துன்பக் கலப்பற்ற இன்பங்களேப் பெறும் உயர்வான சூக்குமமான உலகங்களும் அவனுக்கு நிலேயான இன்பத் தைத் தாராதொழிகின்றன. ஆங்கே அறச் செயல்களே இயற்றியுள்ளவன் இறந்தபின் சென்று, மிக்க இன்பங்களேத் துய்க்கலாம். ஆனல் அது சிறிது காலத்திற்கே தான். அதன் பின் அவன் கீழிறங்கி, இவ்வுலகிலே மீண்டும் பிறக்க வேண்டியவனுகிருன். (மாண்டு, உப. 1—2-10)

உண்மை யுரைக்கின், ஆசை மனிதனேத் துரத்தி வரும் அளவும், இவ்வுலகமோ அவ்வுலகமோ நிலேயான இன்பத்தை அவனுக்கு அளிக்கவொண்ணுது. ஆசையே அவனேப் பிறவி யோடு (ஸம்ஸாரத்தோடு) பிணேக்கும் சங்கிலியாகும்.

ஆயினும் மனிதன் ஆசையைவிட்டுப் பிரிய மனமில்லா தவனுகிருன். ஐம்புலன்கட்குரிய பொருள்களின் மீதுள்ள ஆசை அவனே அடக்கியாள்கிறது. ஒட்டகத்திற்கு முட் செடிகளேத் தின்னுவதில் பிரியம்; அதனுல் வாயினின்றும் இரத்தம் பெருகினும் அதைக் கவனியாது. அதுபோல் மனி தனும் ஐம்புல இன்பங்களிற் களிப்படைகிருன்; ஆனல் அவை அவனேப் பிறப்பிறப்பு வட்டத்தில் மாறிமாறிச் சுழ லச் செய்து, அளவற்ற அல்லல்கட்கு ஆளாக்குகின்றன.

இம்மாதிரியான மக்களின் தொகை உண்மையாகவே மிகமிகப் பெரிது. இவர்கட்கு முதற்படியாவது, பிரவிருத்தி மார்க்கம் எனும் ஆசைநெறியைக் கடைப்பிடித்தலே; இவர்கள் எல்லா ஆசைகளையும்விட வேண்டியதில்லை. சாஸ்திரங்களிற் கூறப்பட்டுள்ள விதிவிலக்குகளை (விதி நிஷேதங்களை) வழுவாது பின்பற்றும் வாயிலாக இவர்கள் அவற்றை அடக்கியாளுவதொன்றே போதும். இவ்வாறு செய்வோர் இம்மை மறுமைகட்குரிய நல்லனவற்றையெல்லாம் அனுபவிக்கின்றனர். இவர்களுடைய உள்ளங்கள் ஓர் அளவிற்குத் தூய்மையை அடைகின்றன. மேலுலகங்களின் இன்ப வளங்களைத் துய்த்தபின்பு அவர்கள் இவ்வுலகிற்கு மீண்டும், முன்னினும் மிக்க சிரத்தையொடு ஆசைநெறியிற் செல்கின்றனர். மறுபடியும் அவருடைய புண்ணியச் செயல்கள் அவர்களை இறந்தபின் மேலுலக இன்ப வளங்களைத் துய்க்கும்படிச் செலுத்துகின்றன. இந்நிகழ்ச்சிமுறையே திரும்பத் திரும்ப நேர்ந்துவர, முடிவில் அவர்களுடைய உள்ளங்கள் மிக்க தூய்மையை அடைகின்றன.

இந்நிலையில் அவர்கள் ஆசைகளின் பயனற்ற தன்மையினை உணர்கின்றனர். நெய்யைச் சொரிந்து தீயினை ஒருகாலும் அணைக்க முடியாதன்றோ? அதுபோல, ஆசைகளை அனுபவித்து ஒய்த்து விடுதல் ஒருகாலும் ஒண்ணாது என்னும் உண்மையை அவர்களது உள்ளம் அடுத்தடுத்துப் பெறும் அனுபவத்தின் பயனாகப் பற்றுகிறது. நிறைவேறாத ஆசைகள் உள்ளத்தைத் துன்புறுத்துகின்றன. மேலும், மேலுலகங்களிலும் இன்பந் துய்க்கும் காலத்திற்கு வரையறை உண்டு. ஆசைநெறி நிலையான இன்பத்தைப் பெறுதற்குரிய நெறியன்று என்பதை அவர்கள் தமது சொந்த கவனத்தாலே நோக்கியறிந்து, அவ்வுண்மையில் உறுதிகொள்கின்றனர். ஆயினும் இந்த நிலையான இன்பத்தையே அவர், கள் வாழ் நாளெல்லாம் தேடியலைந்து வந்தனர். ஆசைகளின் பயனற்ற தன்மையினை உணர்ந்து, நிலையான இன்பத்திற்கும் அழிவற்ற வாழ்விற்கும் அளவற்ற அறிவுக்கும்

செலுத்தும் நெறியை நாடி அவர்கள் செல்கின்றனர். (முண்டக உபநி. 1—2–12.)

இத்தேட்டம் உண்மையான மத(ஞான) வாழ்க்கையின் ஆரம்பமாகும். பிரவிருத்தி மார்க்கம் (ஆசைநெறி) அதற்கு முன்னரே பெறுதற்குரிய ஒரு பயிற்சியேயாம். ஐம்புலப் பொருள்களை நாடி ஓடுவதின் பயனின்மையை உணருமாறு நம் உள்ளங்களைத் தூய்மைப்படுத்துவதிலே அதன் நோக்கம் நிறைவேறி விடுகின்றது. இதுவேதான் அதற்குரிய எல்லையாம். பூரணத் தன்மையை எய்தும் நெறியில் அதற்குமப்பால் அது நம்மை உய்ப்பதில்லை.

நாம் போகம் பெறுதற்காக ஐம்புலப் பொருள்களிடை அழுந்திக்கிடக்கும் காலம்வரை, உள்ளுறையும் இறைவன் நமது காட்சிக்கு மறைவாகவே இருக்கின்றனன். அவனைக் காணுதற்கு நமது பார்வையைப் புறப்பொருள்களினின்றும் இழுத்து உண்முகமாக்குதல் அவசியம்; அப்போதுதான் நாம் பூரணத் தன்மையை எய்துதலும், நித்தியானந்தத்தையும் அழியாப் பெருவாழ்வையும் எல்லையற்ற அறிவையும் பெறுதலும் நமக்கு இயலும்.

ஐம்புலப் பொருள்களின்மீது நமக்குள்ள ஆசையே இக்காரணத்தால் பூரணத்தன்மையை அடையும் நெறியிலுள்ள ஒரே முட்டுக்கட்டையாகின்றது. அது நம்மை உலகபந்தத்திற்கு உள்ளாக்குகின்றது. நாம் இந்தப் பெருந் தடையைத் தாண்டியாகவேண்டும். உண்மையான ஞான வாழ்வு இதைத் தாண்டுவதில் தொடங்கி, அதிலே முடிவு மடைகின்றது. நாம் ஆசையறும் அக்கணமே தெய்வத் தன்மை யெய்துகிறோம்.

நிவிருத்தி மார்க்கம் எனும் துறவுநெறி நம்மை இந்த முடிவிடத்திற்கே கொண்டு சேர்க்கின்றது. ஆசைகளை வேரோடு களையும் வழியையும், அவ்வழியே நமது ஞான இயல்பை வெளிப்படுத்தும் முறையையும் நமக்கு அது

போதிக்கின்றது. இதனுல் இந்நெறியே மிகச் சிறந்த வகையிலே மதநெறி (ஞானநெறி)யாகின்றது.

இக்காரணம் பற்றியே பிரவிருத்தி மார்க்கத்தை அளவு கடந்து புகழ்பவரையும், அதனையே மிக உயர்ந்த ஞான வாழ்வெனக் கருதுவோரையும் பகவான் கண்ணபிரான் கீதையிலே கண்டிக்கின்றனர். (கீதை II–42.)

துறவு நெறயில் இறங்கும்போது தான் சமய (ஞான) வாழ்க்கை உண்மையாகவே தொடங்குகிறது. கட உபநிடதத்திலே ஓர் அழகிய சுலோகத்திலே இது முழுவதும் பின் வருமாறு சுருங்கக் கூறப்பட்டுள்ளது. ''படைப்புக் கடவுள் நம் இந்திரியங்களை வெளி நோக்கிச் செல்லும் படியே படைத்து விட்டனர். இக்காரணம் பற்றியே நாம் (சாதாரணமாக) புற உலகத்தையே காண்கிருேம். ஆன்மாவைக் காண்பதில்லை. ஆயினும் அமைதியுடையார் சிலர் அழியாப் பெருவாழ்வை அடையும் விருப்பால், இந்திரியங்களை விஷயங்களினின்றும் இழுத்துத் திருப்பிய பின்னர் ஆத்மனை உணர்கிருர்கள்.''

நம் உபநிடதங்களில் இம்மாதிரியான வாக்கியத் தொடர்கள் நிறைந்துள்ளன. இன்னென்றைக் கூறுவோம். ''கருமத்தாலோ மக்களாலோ செல்வத்தாலோ அழிவற்ற நிலையை அடைய ஒண்ணுது; தியாகம் ஒன்ருலேயே சிலர் அதனை அடைந்தனர்.''

அதோடு பின்வரும் சாதாரணப் பழமொழியையும் ஒப்பிட்டுப் பார்ப்போம்: ''இராமர் (கடவுள்) உள்ளவிடத்துக் காமம் (ஆசை) இல்லை; காமம் உள்ளவிடத்து இராமர் இல்லை.'' ஸ்ரீ ராமகிருஷ்ணர் இந்நாளிலே இதை இவ்வாறு கூறியுள்ளார். ''உனக்குக் கடவுளை அடைய விருப்பமாயின் நீ காம காஞ்சனங்களைத் துறக்க வேண்டியிருக்கும்.''

[சுவாமி விவேகானந்தர் இப்பொருளைப் பின்வருமாறு தெளிவாக்கியுள்ளார்: ''இருளும் ஒளியும், உலக அனுபவ

மும் கடவுளனுபவமும் ஒருகாலும் இணங்கியிரா. 'கடவுளுக்கும் பணத்திற்கும் (ஒரே சமயம்) அடிமையாயிருக்க முடியாது.' பகவானுக்காக எல்லாவற்றையும் துறந்து விடு. மற்ற மதங்களிலும் இம்மாதிரியே துறவு வற்புறுத்தப் பட்டுள்ளது. கிறிஸ்து நாதர் ஒரு பணக்கார இளைஞரிடம் 'உன்னிடமுள்ள அனைத்தையும் துறந்து விட்டு, என்னைப் பின்பற்றுக' என்றனர். வேறொரு முறை இயேசு நாதர் கூறியதாவது: 'தனது வாழ்வைப் போற்றுபவன் அதனை இழப்பது உறுதி; தனது வாழ்வை எனக்காக இழப்பவன் அதைப் பெறுவான்.' "]

இது நிவிருத்தி மார்க்கம். இந்நெறி வருத்தந் தருவதும் நீண்டதும் என்பதில் ஐயமில்லை. ஆயினும் நாம் பூரணத் தன்மையை நோக்கி முன்னேற வேண்டுமாயின், இதுவொன்றே கடைப் பிடித்தற்குரிய வழியாகும்.

என்றாலும், பூரணத்தன்மையை அடைய நிவிருத்தி மார்க்கம் பல வழிகளையும் அறிவிக்கிறது. ஒரே இடத்திற்குச் செல்லத் தரைமீதோ நீர்மீதோ ஆகாயமீதோ பற்பல பாதைகள் வழியாகப் புகைவண்டியிலோ இரதத்திலோ தோணியிலோ ஆகாய விமானத்திலோ பிரயாணஞ் செய்யலாம். நமக்குள்ள வசதிக்குத் தக்கபடி வாகனத்தையும் வழியையும் தெரிந்தெடுப்பது நம்மைச் சேர்ந்ததாகும். அது போல, நமக்குள் இருக்கும் தெய்வத்தன்மையை வெளிப் படுத்துவதற்கு உதவும் நிவிருத்தி மார்க்கத்திற்குள்ளே பல வகைப்பட்ட வழிகள் உள்ளன. நமக்கு மிக நன்றாகப் பொருந்தும் வழியைத் தெரிந்தெடுப்பது நம்மைச் சார்ந்ததாகும்.

இந்து மதத்தில் விதிக்கப்பட்டுள்ள பற்பல பாதைகளும் பற்பல இயல்புகளுடைய மக்கட்குத் தகுதியானவை. சில மக்கட்குக் கருமத்திற் பிரியம், சிலர்க்குத் தியானத்திற் பிரியம், சிலர் இயல்பாகவே உணர்ச்சி வயப்பட்டவர், வேறு சிலர் உணர்ச்சியிலுள்ள நம்பிக்கையைவிட அதிகமாக அறிவில் நம்பிக்கை யுடையராகின்றனர். நமது மதம் இவ்வகை

யினர் ஒவ்வொருவர்க்கும் தனித்தனியாக ஒரு பாதையைக் காட்டுகிறது.

இப்பாதைகள் யோகங்கள் எனப்படும். 'யோகம்' என்பதன் பதப்பொருள் 'சேர்க்கை'. இப்பாதைகள் வழியாக நாம் கடவுளின் இருப்பை உணரும் நிலையினை அடைகிறோம். இக்காரணத்தால் அவை நம்மைக் கடவுளோடு சேர்ப்பனவாகக் கூறலாம். அச்சேர்க்கை எக்காலமும் அங்கு உள்ளதென்பதில் ஐயமில்லை. யோகம் இந்த உண்மையை உணரும்படி நம்மைச் செய்கிறது என்பதே. ஆயினும், இக்காரணங்கொண்டே இப்பாதைகள் 'யோகங்கள்' எனப்படுகின்றன.

பொதுப்படக் கூறின், மக்கட்குள் காணப்படும் அடிப்படை வகுப்புகள் நான்கிற்கும் தகுந்தவாறு முற்கூறிய யோகங்கள் நான்கு உள்ளன. கருமபரர்க்குக் கருமயோகம், புத்திபர மானவர்க்கு ஞானயோகம், உணர்ச்சிபரர்க்குப் பக்தியோகம், அனுபவபரர்க்கோ ராஜ யோகம்.

கீதையிலே ஸ்ரீ கிருஷ்ண பகவான் கூறுகிறார்; "ஆயிரக் கணக்கான மக்களுள் ஒருவனே முக்தியடைதற்காக முழு மனதோடு முயல்கிறான்" (கீதை 7—3) என்று. உண்மையாகவே, வெகு சிலர்க்குத்தான் இயற்கையைத் தாண்டிச் சென்று விடுபடவேண்டும் என்னும் மெய்யான அவா உண்டு. அடுத்தடுத்துப் பல பிறப்புகளிலே பொறியின்பங்களின் புரையோடிய தன்மையை உணர்பவர் மட்டுமே துறவைக் கோருகின்றனர். அவர்கட்கே ஐம்புலப் பொருள்களின் மீதுள்ள அவா ஒரு பந்தமாகத் தோன்றுகின்றது; அப்பந்தத்தை அறுக்க அவர்களே உண்மையான விருப்பமுடையர்.

இதைச் செய்து முடித்தற்காக, அவர்கட்கு அந்நான்கு யோகங்களில் ஏதேனும் ஒன்றைக் கைக்கொள்ளுதலும் அதற்குரிய ஞான சாதனம் பழகுதலும் அவசியமாகின்றன. அவர்கட்கு ஞான உபதேசம் செய்யும் குருக்கள் அவரவர்

கட்கு மிகச்சிறந்த பொருத்தமான பாதையைக் காட்டி, அவ் வழியிலே விளையும் வருத்தங்களைத் தீர்க்கும் வகையையும் போதிக்கின்றனர். ஞானம் பெற முயல்வோனுக்கு (சாத கனுக்கு) ஞானவழி காட்டும் ஒருவர் (குரு) அவசியம் என் பதை இந்து மதம் மிகத் தெளிவாகக் கூறுகிறது.

9

# இராஜ யோகம்

பிறர் சொல்வதை நம்பி ஒன்றையும் ஒப்புக்கொள்ள முடியாதவர் சிலர் உளர். எதைப்பற்றியேனும் உறுதியான அறிவு பெறுவதற்கு நேராகக் கண்ணுற் காணக்கூடிய பலன் களே வேண்டுமென விரும்புவார் அவர். சுருங்கக் கூறின், விஞ்ஞானக் கண் கொண்டு நோக்கும் இயல்புடையார் இத் தொகுதிக்குள் அடங்குவர். இந்நாளிலே அத்தகைய மனப் போக்குடையவரின் தொகை பெருகி வருகின்றது.

இம்மாதிரியான மக்கட்கு இராஜயோகம் நன்கு பொருத்தமுடையதாகும். எவராயினும் எக்கொள்கையையும் கேட்டபடியே நம்பவேண்டுமென்றோ, அறிதற்கரிய ஒரு கிரி யையை இயற்ற வேண்டுமென்றோ அது வேண்டுவதில்லை. மனம் ஒருநிலைப் படுதற்குப் படிப்படியாக அமைந்த ஒரு முறையை மட்டும் அது விதிக்கிறது. இந்த உறுப்புகள் எல்லா வழியாலும் யுக்திக்குப் பொருத்தமானவை யாகும். மனம் முற்றிலும் அமைதியாயுள்ள போது, முக்தியெனும் பெரும் பதம் அடையப்படுகின்றது.

இது 'அஷ்டாங்கயோகம்' என்றும் வழங்கப்படுகின் றது. காரணம்: ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்துவரும் எட்டு அங்கங்களின் வழியாக ஒருவன் செல்லவேண்டி யிருத் தலே. தொடங்கும்போதே ஒருவனுக்கு எதிலும் நம்பிக்கை வேண்டுவதில்லை. ஒவ்வொன்றின் பயனையும் சோதித்தறி யும் நோக்கத்தோடு படிகள் பலவற்றையும் வரிசையாக ஒரு

வர் பழகவும் செய்யலாம். மனப்பூர்வமாகச் சோதனை செய்யின், ஆரம்பப் படிகளிலும் புதிதாகப் பழகுபவனுக்கு நூதன அனுபவம் உண்டாக்கி ஆச்சரியத்தை விளைக்கும்.

எட்டு அங்கங்கள்

யமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்யாஹாரம், தாரணம், தியானம், சமாதி என்பவை வரிசையாயுள்ள எட்டு அங்கங்களாம்.

முதல் இரண்டும் ஒழுக்கத்தைப் பண்படுத்தற்காக ஏற்பட்டன. யமம் என்பதில் அடங்கியவை யாவன : அஹிம்சை (இன்னா செய்யாமை), வாய்மை, கள்ளாமை, பிரம்மசரியம், தானம் பெறாமை என்னும் ஐந்தும். நியமம் என்பது துப்புரவையும் திருப்தியையும் தவத்தையும் கல்வியையும் இறைவனிடம் சரணாகதியையும் குறிக்கும். இத்தகைய ஒழுக்கச் செல்வமின்றி ஞானமுன்னேற்றம் இயலாத காரியமாகும். ஆதலால், யமம் நியமம் இரண்டிலும் ஒருவன் நிலைபெறாது முன்செல்ல ஒண்ணாது.

அடுத்த அங்கம் ஆசனம் எனப்படும். இது ஒருவித உடற்பயிற்சி யளவேயாம். இதன் நோக்கமாவது, நீண்ட நேரம் நிமிர்ந்து உட்கார உடலைப் பழக்குதலேயாம். பலப்பல ஆசனங்கள் விதிக்கப்பட்டுள்ளன, ஆயினும் அவை யாவற்றிலும் முதுகென்பு நேராக வைக்கப்படல் வேண்டும், தலையும் கழுத்தும் மார்பும் ஒரே நேர்கோட்டில் வைக்கப்பட வேண்டும். இவ்வாசனங்களில் யாதேனும் ஒன்றை ஒருவன் தேர்ந்தெடுத்து, குறைந்தது ஒருமணி நேரமேனும் அசைவற்று அமர்ந்திருக்க இயலும் வரை அதைப் பழகி வரல் வேண்டும்.

பிராணாயாமம் என்பது ஒரு சுவாசப் பயிற்சியே. ஒழுங்காக மூச்சுவிடுதல் மனத்தை ஒருநிலைப் படுத்தற்கு உதவிபுரியும். ஆசனமும் பிராணாயாமமும் சேர்ந்து மனத்தை உண்முகப்படும் தகுதியுடையதாக்குகின்றன. பிராணாயாமம் பழக, அதில் தேர்ச்சி பெற்றவன் ஒருவனது

துணையைப் பெறவேண்டும். இல்லையேல், அது உடலின் உயிர்நிலையான பகுதிகட்கே திங்கு விளைக்கலாகும்.

அடுத்தபடி பிரத்தியாஹாரம் எனப்படும்: அதன் பொருளாவது, இந்திரியங்களை உள்ளிழுத்தல் என்பதே. இவ்விந்திரியங்கள் மனத்தைப் பலமாகவும் ஓயாமலும் குழப்பமுறச் செய்கின்றன. தூல உடலிலுள்ள கண்கள் காதுகள் முதலியன புறக் கருவிகளே யாகும். இவை போன்ற சூக்குமமான உறுப்புகள் உள; அவையே நமது சாஸ்திரங்களில் 'இந்திரியங்கள்' என வழங்கப்படும். சாதாரணமாக, இந்த அக உறுப்புகள் அவற்றிற்குத் தனித்தனியே அமைந்த புறக் கருவிகளோடு இணைக்கப் பட்டுள்ளன; இப் புறக் கருவிகள் விஷயங்களைப் (பொருள்களைப்) பற்றும் போது, அகக் கருவிகள் வெவ்வேறு வடிவங்கள் கொண்ட அலைகளாக மாறி, உள்ளத்தில் அவற்றிற்கு இயைந்த அலைகளை எழுப்புகின்றன. உதாரணமாக, புறக்கண்கள் ஒரு பூவைப் பற்றும்போது, காட்சிக்குரிய அக உறுப்பு (இந்திரியம்) உள்ளத்திலே பூவின் வடிவத்தைத் தோற்றுவிக்கிறது. இம்மன வடிவத்தையே நாம் புறத்தே காண்கிறோம். இவ்வாறே நிறம் ஒலி நாற்றம் சுவை தொடுதல் எனும் எல்லா உணர்ச்சிகளையும் பெறுகிறோம். ஒவ்வோர் உணர்ச்சிக்கும் ஏற்றவாறு ஓர் இந்திரியத்தின் வாயிலாக எழும் ஒரு குறிப்பிட்ட மன விருத்தி அமைகின்றது. இவ்வாறு ஒருவன் விழிப்பு நிலையில் இருக்கும்வரை, புறக் கருவிகள் அவற்றிற்குரிய பொருள்களோடு பொருந்தி, அக உறுப்புகளான ஞானேந்திரியங்களையும் மனத்தையும் இடைவிடாது தொடர்ந்து எழுந்து கொண்டே யிருக்கும் விருத்திகட்கு உள்ளாக்கிக் கொண்டே போகின்றன.

ஆயினும், இதுவே எல்லாம் என்பதன்று. இவ்வாறு உண்டாக்கப்படும் உணர்ச்சிகள் இணைப்பு முறை விதிப்படி மனத்தின் ஆழமான பகுதிகளிலிருந்து அவற்றோடு சம்பந்த

முற்ற நினைவுகளையும் உந்துதல்களையும் எழுப்பி, கருமேந்திரியங்களைச் சுறுசுறுப்பாக்குகின்றன. இதன் பின்னர் சித்தத்திலே சங்கற்பம் என்னும் அலைகள் உடனே உண்டாகின்றன. நான் ஒரு பூவைக் காண்கின்றேன்; மனத்தின் உள்ளிருந்து நினைவுகளும் உந்துதல்களும் வெளியே பாய்ந்து, அப் பூவைப் பறிக்கும் ஒரு சங்கற்பத்தை ஏற்படுத்துகின்றன. இவை யனைத்தும் சித்தத்திலே தொடர்பாக நிகழும் விகாரங்கள் (விருத்திகள்) ஆகும். இக்காரணத்தால் அகக்கரணங்கள் புறக் கருவிகளோடு இணைக்கப்பட்டுள்ள வரை, மனம் இடைவிடாது குழம்பிக் கொண்டிருக்கும் நிலையில் தான் இருந்தாக வேண்டும்.

பிரத்தியாஹாரமாவது, இந்திரியங்களை (அக உறுப்புகளை)ப் புறக் கருவிகளினின்றும் பிரித்து அவற்றை அலைவுறாது வைத்திருத்தலேயாம். மனதைச் சாந்தப் படுத்துதற் பொருட்டு முன்னோக்கி எடுத்து வைக்கும் ஒரு பெரிய எட்டு இதுவாம். முதலிலே நமது மனதிலே உணர்ச்சிக்கு வாராத அடிப் பகுதியிலுள்ள நினைவுகள் குமிழிகள் போல மேற்கிளம்புவதைத் தடுக்கும்படி புத்தி கூறுகின்றனர். இதைச் செய்யும் வழியாவது: மனதை ஓடும்படி விட்டு உள்ளத்தின் ஆழத்திலிருந்து மேலெழும் நினைவுகளைக் கவனிப்பதே. இம் மனப் பயிற்சியால் உள்ளம் ஒருவகையிலே தன்னுள் இருப்பதை யெல்லாம் வெளியிற் கக்கிவிடுகின்றது. உள்ளத்தின் அடியிலிருந்து மேற்பரப்புக்குப் பாயும் நினைவுகளின் வேகம் இப்பயிற்சியால் மெல்ல மெல்லக் குறைகிறது. இது நடக்க நடக்க, மனம் முன்னினும் நிலையுற்றதாகிறது; அதோடு நரம்புகளும் முன்னினும் அமைதி பெற்று வலிமை யுறுகின்றன. அப்போது, அக இந்திரியங்களைப் பற்றிப் புறக் கருவிகளினின்றும் பிரிக்க முயலவேண்டும்.

பிரத்தியாஹாரத்தின் மூலமாக வரவர மனம் நிலையுற்ற தன்மையைப் பெற்றதும், அதன் ஆற்றல்கள் யாவும் கூர்மை மிகுகின்றன. மனத்தின் சஞ்சலம் குறையக்

குறைய, உற்று நோக்கல் தருக்கித்தல் நினைவுறுத்தல் சங் கற்பித்தல் எனும் திறல்கள் மேலே ஓங்குகின்றன. உண் மையை உரைக்கின், நிலையுற்ற ஒரு மனம் கூர்மையும் உறுதியும் சுறுசுறுப்பும் வாய்ந்த மனமாகும். ஒழுக்கத்திற்கு அடிப்படையாக அத்தகைய மனம் வேண்டும். உள்ளேயும் வெளியிலும் ஏற்படும் தொந்தரவுகளினின்றும் மனதை விடுவிப்பதன் மூலமாக அதற்கு நிலையுற்ற தன்மை வருவதை உறுதிப்படுத்தும் பொருட்டுப் பிரத்தியாஹாரம் பெருந்துணை புரிகின்றது. ஆயினும் சிறிது காலம் பிரத்தியாஹாரம் பழகியதும், மனம் ஒருவாறு அடங்கியொழுகும் தன்மை பெற்றிருப்பதையும், ஒரு பொருளிலோ கருத்திலோ மனம் நிலை நாட்டப்படுதற்குத் தயாரான நிலையில் இருப்பதையும் ஒருவன் உணர்கிறான்.

இந்நிலையில் அவன் மனதை ஒரே ஒரு பொருளில் நிலை நாட்ட முயலவேண்டும். தன் இச்சைப்படி தியானத்திற்கென ஒரு பொருளைத் தெரிந்தெடுத்துக் கொள்ளலாம். ஆயினும் தன்னால் ஆனமட்டும் முயன்றும் மனம் தெரிந்தெடுத்த பொருளின்மீது நிலைத்திருக்க முடியாமையை அவன் காண்பான். தியானிக்கப்பட்ட பொருள் மங்கலாகத் தோன்றும். மனம் பொருளைவிட்டு நழுவவும் செய்யும். ஆனாலும் அவன் மீண்டும் முயற்சி செய்ய வேண்டும். இம் முறையே தாரணை எனப்படும்.

தாரணை இயல்பாகவே தியானத்தில் முடியும். ஒரு பொருளின்மீது மனதை நிலைநிறுத்த அடுத்தடுத்து முயலுவதனால், சிறிது நேரமேனும் செவ்வையாகத் தியானிக்கும் திறமை உண்டாகும். அப்போது மனம் தான் கருதிய குறியை நோக்கி இடைவிடாது ஓடிக் கொண்டிருப்பதாகத் தோன்றும். இத்தகைய மனநிலை தியானம் எனப்படும்.

தீவிர முயற்சியின் பயனாகத் தியானத்திற்குப் பின் சமாதியெனும் நிலை வந்தடைகிறது. இதுவே மிக உயர்ந்த மன ஒருமை நிலை. சமாதி நிலையில் மனம் ஏனைய பொருள்

களின்மீதுள்ள பற்றை நழுவவிடுகிறது. ஆழ்ந்த உறக்கத்திற்போல், சமாதி நிலையிலுள்ள ஒரு மனிதன் தன்னைச் சூழும் எல்லாப் பொருள்களையும் உணராதவனாகிறான். தியானிக்கப்படும் பொருளும் கரைந்து விடுகிறது. ஆயினும் சமாதி முன்னென்றும் அறிந்திராத ஒரு கூர்மையை மனதிற்கு அளிக்கின்றது. இந்நிலையில்தான், குறித்த ஒரு பொருளின் உண்மையான உட்கருத்து திடீரென மின்னல்போல் தோன்றி, மனமுழுதிலும் குடிகொள்கிறது. அப்போதுதான் அப்பொருளைப்பற்றிய அறிவு நிறைவடைகின்றது.

இம்மன நிலை 'ஸம்பிரஞ்ஞாத சமாதி' எனப்படுகிறது. மனம் அத்தகைய சமாதியில் இரண்டறக் கலக்கும்வரை (இலயிக்கும்வரை) இயற்கையிலுள்ள எந்தப்பொருளைப் பற்றித் தியானிப்பதனாலும் அதைப்பற்றிய முழுஅறிவும் ஒருவனுக்கு உண்டாதல் இயலும். அவ்வளவு ஆழ்ந்த நேர் காட்சியறிவினால் அப்பொருளை முழுதும் அடக்கியாளும் நிலையாகிய வெற்றி எய்தப்படுகின்றது. நிலம் நீர் தீ வாயு ஆகாயம் என்னும் தூல பூதங்களின் மீது அவ்வாறு மனதை நிலைக்கச் செய்வதன் மூலம், இந்து யோகிகள் புற இயற்கையை அடக்கும் திறலைப் பெறுகின்றனர்,

முதலைந்து படிகளும் யோகமென்னும் மன ஒருமை நிலைக்குத் தயாராக்கிக்கொள்ள உதவுவனவே. கடைசி மூன்று படிகளாகிய தாரணை, தியானம், சமாதியென்பவையே 'ஸம்யமம்' எனப்படும் உண்மையான மன ஒருமை நெறியாகும். ஸம்யமம் தாரணையிலிருந்து தொடங்கி, நாளடைவில் தியானமாகவும் சமாதியாகவும் முறையாக முதிர்கின்றது.

முதலிலே ஸம்யமம் தூலப்பொருள்கள் சம்பந்தமாகப் பழகப்படல் வேண்டும்; பின்னர் படிப்படியாக மிக நுண்ணிய (சூக்கும) பொருள்களின்மீது ஸம்யமம் பழகல் வேண்

டும். நுண்ணிய நிலையில் மனமே மன ஒருமைக்குரிய பொருளாகின்றது. இதனால் இந்து யோகியர் தம் மனங் களையும் பிறரின் மனங்களையும் அடக்கியாளும் திறமையைப் பெற்று, இயற்கையில் அகத்தும் புறத்தும் உள்ள ஒவ் வொன்றையும் பற்றி நன்கறியப்பெறுவார்.

ஆயினும் இது முடிவான நிலையாகாது. ஸம்பிரஞ்ஞாத சமாதி அடங்கியிருக்கும் ஆற்றல்களை வெளிக்கொணரும்; புற இயற்கையிலும் அக இயற்கையிலும் உள்ள எல்லாப் பொருள்களின் இரகசியங்களையும் வெளிப்படுத்தும்; அவற் றை முற்றும் அடக்கியாளும் திறமையை யோகி பெறும்படிச் செய்யும். ஆனால் அவனது ஆன்மாவின் தெய்வத்தன்மை யினை வெளிப்படுத்தி, அவனை ஸம்ஸாரத்தினின்றும் (பிறவி யினின்றும்) விடுவிக்கும் தன்மை அதற்கு இல்லை. அத் தகைய படியினின்றும் தவறி வீழ்பவனும் துயரம் மலிந்த பிறவிகள் பலவற்றின் வழியாக உழலவேண்டியிருக்கும்.

ஆனால் அவன் கிட்டத்தட்ட பரம அனுபூதியின் வாயிலிலே நிற்பவனாகிறான். யோகி மனத்தினையே சமாதிக் குரிய பொருளாக்கிப் பொறுமையோடு அச்சமாதியை விடாது பயின்றுவருவானாயின், ஒரு நிலையில் ஆச்சரியமான ஒரு செயல் நிகழ்கின்றது. திடீரென மனம் முற்றிலும் அமைதியாகின்றது. இது அஸம்பிரஞ்ஞாத சமாதி எனப் படும். இது நிகழ்ந்ததும், கடைசி மறைப்பும் நீங்கிவிட்டது போலத் தோன்றும். ஆன்மா தனது தெய்விகச் சீர்மை விளங்க முன் நிற்கின்றது. அப்போது யோகி தனது வாழ் வின் அந்தரங்க உள்ளியல்பினை அறியப்பெற்று, அவ் வியல்பு தெய்வத்தன்மையன்றி வேறில்லையென்பதை உணர் கிறான். அவனது உணர்வு பின்னர் சாதாரண நிலைக்கு மீளும்போது யோகி முற்றிலும் மாறுபட்டவனாகக் காணப் படுகிறான். ஆசைப்படுவதற்கோ அஞ்சுவதற்கோ துயருறு தற்கோ யாதொன்றும் அவனுக்கு இல்லாதொழிகின்றது. அவன் குறிக்கோளை (இலக்ஷியத்தை) அடைந்தவனாகிறான்.

அவனது நெஞ்சு சாந்தி நிறைந்துள்ளதாகிறது. அனைவர் மீதும் அன்பும் அருளும் பொங்க, அவன் பிறரை முத்தி நெறியின் வழியாகச் செலுத்திக்கொண்டே வாழ்க்கையை நடத்துகிறான்.

எச்சரிக்கை மொழிகள்

முற்கூறிய யாவும் உண்மையாயினும் இராஜ யோகம் படுகுழிகள் நிறைந்த ஒன்றாகும். ஆரம்ப முதலே ஒருவன் இவற்றில் வீழாது தன்னைக் காத்துக் கொள்ளல் வேண்டும். எவ்விதமான தகாத அவசரமும் ஆபத்தை விளைவிக்கும். யமம் நியமம் இரண்டையும் பழகுதல் மூலம் இன்றியமை யாத ஒழுக்கப் பண்பாட்டை முழுவதும் பெறுமுன், அவை கட்குப் பின்னுள்ள படிகளில் எதையும் கைக்கொள்ளக் கூடாது. அதைக் கவனியாதபோது யோகியின் உழைப்பி னால் அவனது உடல் நொறுங்குவதே பயனாக முடியும். அத் தகைய யோசனையற்ற அவசர முயற்சியினால் நரம்புக் கோளாறு வரையுள்ள எல்லாவிதப் பிணிகளும் பைத்திய மும் விளையலாகும். மேலும், வழிகாட்டுவார் ஒருவரின்றிப் பிராணாயாமம் பழகுதலும் அதேயளவு ஆபத்தை உண்டு பண்ண நேரும். இப்படியை மிதியாமலே தாண்டிப் பிரத்யா ஹாரம் பழகுதலும் பயனுடையதாகும்.

பிரத்தியாஹாரம் பழகவும், மனம் தன்னைத் தானே அறியத் தொடங்கும். யோகி ஒரு புதிய உலகிற் புகுந்து, புதிய அனுபவம் பெறத்தொடங்குகிறான். தாரணை, தியா னம், சமாதி மூலம் அவனது மன ஒருமை நிலை ஆழ்ந்ததாகும் போது, அவன் தனது மனத்தின் மிகப்பெரு வல்லமையை அறிகிறான். மனோ வல்லமையிற் பெரும் பகுதி பயனின் றியே கழிகின்றது. அதிற் பேரளவு சாதாரண மனிதனாலே பாழாக்கப்படுகின்றது. யோகத்தால் ஒருவன் தனக்குள் அடங்கியிருக்கும் சக்திகளை வெளிப்படுத்தி, அவற்றின் துணையால் வியக்கத்தகும் காரியங்களைச் செய்யும் ஆற்றலைப் பெறுகிறான். இத்தகைய அந்த சக்திகள் 'சித்திகள்' எனப்

படும். இந்த சித்திகளின் துணையால் மனவசியம், தொலை யிலுள்ள மனத்தையடக்கல், மறைபொருட் காட்சி மறை வுப் பேச்சு முதலிய இன்னும் பல ஆச்சரியச் செயல்களையும் ஒரு யோகி எளிதே இயற்றுவான்.

ஆனால் இந்த சித்திகள் எனும் வலையில் ஒரு யோகி பிடி படுதலும் உண்டு. செல்வத்தைப்போன்று, இம்மாய வல்ல மைகளும் அவனது மனதை முத்திநெறியை விட்டு விலகச் செய்யலாம். பொன்னையும் போற்றுதலையும் பெறுதற் பொருட்டு அவன் இவற்றைப் பலர் முன் வெளிக்காட்டும் ஆசைக்கு உள்ளாகலாம். அவ்வாறு செய்வானாயின், சம் சாரம் என்னும் சுழலில் மீண்டும் விழுந்து உழல்வான்.

உலவா இன்பத்தை உண்மையாக நாடும் ஒருவன் இத் தகைய ஆசைகட்கு ஒருகாலும் இடங்கொடுக்கக்கூடாது. இந்த சித்திகளை ஒருபோதும் அவன் நாடலாகாது. யோகம் பழகுதலின் பயனாக இவை தாமே வந்தடையினும் அவற் றைப் பிறர்முன் பெருமையாகக் காட்டலாகாது.

இதுவே முறையெனினும் சில மக்கள் உலகப் பொருள் களையும் அற்புத வல்லமைகளையும் பெறுதற்காகவே இராஜ யோகத்தைப் பின்பற்றுகின்றனர். அவர்கள் தமது உடல் நலத்தையோ அழகையோ இளமையையோ ஓங்கச் செய்ய வும், அற்புதங்களை இயற்றிப் பிறரை ஏமாற்றவும் விரும்பு கின்றனர். இம்மாதிரியான மக்கள் தன்னயமுடையவர் என்பதும், உலக பந்தங்கட்கு உட்பட்டவர் என்பதும், வெளிப்படை. அவர்களிடமுள்ள சித்திகள் ஜனஸமூகத் திற்கு ஆபத்தை விளைவிக்கும் தன்மை வாய்ந்தன. அவர் கள் தம் சகோதர மக்கட்கு மிக்க தீங்கு இயற்றவும் நேரும். ஆக, தமது தெய்வத்தன்மையை வெளிப்படுத்தற்கு உதவும் இராஜயோகம் சித்திகளை நாடும் இம்மக்களால் தவ றான நெறிகளிலே பயன்படுத்தப்படவும் உரியதாகிறது. உலக சம்பந்தமான சித்திகளைப் பெறுதற்கே யோகம் என்

னும் கருத்துடையாரொடுசேராது விழிப்பாயிருத்தல் வேண்டும். இந்த சித்திகட்கும் ஞானத்திற்கும் யாதொரு தொடர்பும் இல்லை. உலகப் பொருள்கட்காக எழும் மற்றெல்லா ஆசைகளையும் போன்றே, சித்திகளைப் பெறும் ஆசையும் ஞானவாழ்வினை மாய்ப்பதாகும். அக்காரணத்தால் அதை நஞ்சென ஒதுக்கி விடுதலே முறையாம்.

## 10

# ஞான யோகம்

முத்துக் குளிப்போர் கடலின் அடிவரை மூழ்கிச் சென்று, முத்துக்களைத் தேடியெடுப்பர். நமது இந்து ரிஷிகளோ முத்துக் குளிப்பதில் அதிவல்லவர். மூழ்குவதற்காகக் கடலிற்குச் செல்வதற்குப் பதிலாக, அவர்கள் தமக்குள்ளே மூழ்கி, ஆச்சரியமான ஒரு நிதியினைக் கண்டெடுத்தனர்; அது உலகிலுள்ள செல்வமனைத்தினும் மிக்க விலை மதிப்புள்ளதாயிற்று. அம்மாதிரியாக வெற்றிபெற மூழ்கிய பின், இருடியரில் ஒருவர் வெளிவந்து கூறியதாவது: "உற்றுக் கேண்மின், அழிவிலாப் பரம்பொருளின் குழந்தைகளே, இவ்வுலகத்திலோ இதனினும் ஒளிபெற்று விளங்கும் உலகங்களிலோ வாழ்வீர்காள் (வாழ்பவரே), எவரை அறிந்தபின் ஒருவர் மரணத்தை (அறியாமையைத்)த் தாண்டியவராவரோ, அப்பரம்பொருளை யான் அறிந்துவிட்டேன்." (சுவேதாஸ்வதர உபநிஷத்—2-5ம், 3-8ம்). தமக்குள்ளே மூழ்கிய அந்த இருடி மெய்யாகவே உலகத்தை ஆராய்ந்து, அதன் அடிவரை சென்று, மரணத்துக்கும் அப்பால் நம்மைச் செலுத்தவல்ல ஒரு மாநிதியிணைக் கண்டெடுத்தார்.

அந்த இருடியர் தம்மையறிய விரும்பினர். புலன்கட்கு இலக்காகும் உலகத்தினின்றும் தம் மனத்தை உள்ளேயிழுத்து, தமது உண்மையான சொரூபத்தை (ஆன்மாவை)ச்

சுறுசுறுப்பாகத் தேடும்பொருட்டு, அம்மனத்தை அதிற் செலுத்தினர். இம்முயற்சியால் மனம் அடங்கி மோனத்தை எய்தும் ஒரு நிலைக்குச் செல்லலாயிற்று; அப்போது ஆன்மா தன் முழுப்பெருமை தோன்ற வெளிப்பட்டு விளங்கலா யிற்று. அவ்விருடியர் தாம் உண்மையில் இன்னர் என்பதை உணர்ந்தார். தமது ஆன்மா உலகமெங்கும் உள்ளே பரவி யிருக்கும் பிரம்மன் என்னும் பரம்பொருளினும் வேறன்று என்பதைக் கண்டுபிடித்தனர். இவ்வாறு தாமும் பரம் பொருளும் ஒன்று என்பதை உணர்ந்து, அவர் முக்தியெனும் குறியைச் சார்ந்து, ஆனந்தம் பொங்கிக் 'கண்டேன்' என்று கூக்குரலிட்டார்.

என்ன அற்புதம்! ஒரு மனிதன் தனது உண்மை யியல்பை அறிந்ததும், அவன் பரம்பொருளாகி விடுகிருன். சரி, மனிதன் பரம்பொருளினும் வேருனவ னல்லன். இயல் பாலே அவன் எப்பொழுதும் பரம்பொருளாகிருன். அவன் இவ்வுண்மையைத் தானே கண்டுபிடிக்க வேண்டிய தொன்றேதான். முக்தியடைய அவன் செய்ய வேண்டிய தெல்லாம் இவ்வளவே.

இதனைக் கண்டுபிடித்தற்கு நேரே ஒருவனை வழி நடத் திச் செல்லும் ஞான சாதனமே 'ஞான யோகம் எனப்படும். 'ஞானம்' என்பது 'அறிவை'யும், 'ஞான யோகம்' என்பது 'ஆத்ம ஞானத்தின்மீது மனதை ஒருமைப்படுத்தலை'யும் குறிக்கும். அத்தகைய மன ஒருமை அவித்தையின் ஆழத்தை அடிவரை துளைத்து உட்புகவும், ஆத்மன் பிரம் மனினும் வேருனதன்று என்பதை உணரவும் துணை செய்யும்.

இந்த யோகம் வேதங்களின் ஞான காண்டத்தை ஆதாரமாகக் கொண்டுள்ளது. உபநிடதங்கள் இவ்வொரு பொருளைப் பற்றியே அடிக்கடி எடுத்துரைக்கும். 'நின்னையே அறிக' (மாண்டூ. உபநி—2, 2, 5) என்றே அவை விதிக்கின் றன. ஏன்? 'மனிதனின் ஆன்மாவும் பிரம்மனும் உண்மை யில் ஒன்றே' என்று அவை கூறுவதனாலே (பிரஹ.உபநி—2,

5, 19). ஆதலின் ஒருவன் தன்னை அறிவதனாலே பிரம்மனை உணர்ந்து, அதனோடு ஒன்றாகிறான் (மாண்டூ.உபநி–3, 2, 9). அவன் முத்த புருஷன் (முத்திபெற்ற மனிதன்) ஆகிறான்.

இவை வெற்றுரையுமன்று. வெறுங் கொள்கையுமன்று, உபநிடதங்களை வெளிப்படுத்திய இருடியரால் கண்டுபிடிக்கப்பட்ட பாரமார்த்திக (ஞான வாழ்க்கைக்குரிய) உண்மைகளே இவை. இப்புண்ணிய பூமியில் வாழ்ந்த ஆயிரக்கணக்கான அருளடைந்த ஞானியராலும் மெய்க்காட்சியராலும் அவை பிற்காலத்து மெய்ப்பிக்கப்பட்டுள்ளன.

அத்தகைய பாரமார்த்திக உண்மைகளை ஆதாரமாகக் கொண்டு நிற்கிறது ஞான யோகம்; அது ஆத்ம ஞானத்தை அணுக ஒரு நேர்வழியைத் திறந்து விடுகிறது; அக்காரணத்தால் முத்திக்கும் அது வழி காட்டுவதாகிறது.

அது எவ்விதக் கிரியைகளையும் விதிப்பதில்லை. இராஜ யோகத்தைப்போல, அறிவுக்குச் சம்பந்தமில்லாமலே உடலுக்கும் உள்ளத்திற்கும் அளிப்பதாகத் தோன்றும் பயிற்சி எதையும் செய்ய அது வேண்டுவதில்லை. சாஸ்திரங்கள் வெளியிட்டுள்ளபடி நமது இயல்பின் தத்துவத்தைப்பற்றிக் கருதுதலும், அதன் பின்னர் அதைப்பற்றிய தியானமும், ஞானயோக முறையில் அடங்கியவெல்லாம் ஏறக்குறைய இவையே. இயல்பாகவே தருக்கமுறை ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ள அறிவாளிகட்கு இந்த யோகம் உவப்பாயிருப்பதற்குச் சரியான காரணமும் இதுவே.

ஞானயோகி நேர்வழியைவிட்டு விலக வேண்டாம்; விவேகம் என்னும் வாளால் அவித்தையெனும் மண்டலத்தைக் குறுக்கே வெட்டிவிட்டு, மிகச் சுருங்கிய பாதை வழியாக அவன் கோரிய இடத்தை அடைகிறான்.

ஆனால் அத்தகைய குறுக்குவழியைப் பின்பற்றுவது எளிதன்று. ஞானயோக நெறியிற் செல்லுமுன் ஒருவற்கு உள்ளத்தை மிக்க அளவிற்கு ஆயத்தமாக வைத்துக்

கொள்ளுதல் அவசியமாகின்றது. இம்முறையைப் பின்பற்று முன் நல்ல நிலையிலுள்ள தூய உள்ளம் பெற்றிருத்தல் கட்டாயமாகும். மிகச் சிறந்த கூரிய அறிவின் துணையொன்றுலேயே ஆன்மாவின் தெய்வத்தன்மையை உணரக் கூடும். உள்ளம் முற்றும் தூயதாயிருக்கும்போது மட்டுமே அறிவு அத்தகைய நிலையினை எய்தும். (கட. உபநி—1-2,12).

இக்காரணம் பற்றியே ஞான சாதனங்கள் நான்கிலும் நன்கு தேர்ச்சி பெற்றவரே (சாதன சதுஷ்டய ஸ்ம்பன்னரே) இந்த யோகத்தைக் கைக்கொள்ளும் தகுதி பெற்றவராவர் என்ப. (பிரம். சூ—1–1—சங்கர பாஷ்யம்.)

இந்த யோகம் பழகுபவன் மெய்ப்பொருளுக்கும் (கடவுளுக்கும்) பொய்ப்பொருளுக்கும் (உலகிற்கும்) உள்ள வேறுபாட்டை விவேகத்தால் உணரவேண்டும். இம்மை மறுமைகட்குரிய எப்பொருளிலும் பற்றற்றிருக்க வேண்டும். அவனுடைய இந்திரியங்களும் உள்ளமும் முழுதும் அவன் வசமாயிருத்தல் வேண்டும்; எந்நிலையிலும் போதும் என்ற மனமுடையனுதல் வேண்டும். தனக்கு நேரும் எல்லாத் துயரங்களையும் பொறுக்கவேண்டும்; அங்ஙனம் பொறுக்கும்போதும் சினமும் வருத்தமும் அற்றிருத்தல் வேண்டும். அவன் தன்னிடத்தும், இருடியர் கண்டுபிடித்துள்ள ஞான உண்மைகளிலும் தீவிர நம்பிக்கையுடையவனுதல் வேண்டும். அனைத்திற்கும் மேலாக முக்தியை அடைவதில் கொழுந்து விட்டெரியும் அவாவுடையவனும், அதை நாடுவதில் ஒருமுகப்பட்ட ஈடுபாடுடையனும் இருத்தல்வேண்டும்.

இத்தகைய மனப்பக்குவமின்றி ஆன்மத் தியானம் ஒண்ணுததாகும். ஆன்மாவின் உண்மை இயல்பினைப்பற்றிய சிந்திப்பினுல், மிஞ்சியவழி ஒருவற்கு அப்பொருளைப்பற்றி அறிவுக்குட்பட்ட ஒரு மங்கலான கருத்தையே பெறலாகும். அதற்கப்பால் முன்னேறுதல் தடைப்பட்டே தீரும். ஆன்ம ஞானத்தோடு ஒப்பிடும்போது அக்கருத்து பயனற்றதாகும்.

கற்றுத் தேர்ந்த பண்டிதர் ஒருவரைப்போல அப்பொருளைப் பற்றித் தாராளமாகப் பேசும் திறமையை மட்டும் அளிக்கலாம். தூய்மையடையாத உள்ளம் இந்நெறியிற் பெறக் கூடியதெல்லாம் ஏறக்குறைய அவ்வளவேதான். ஞான விளக்கமோ இதற்கு வெகு தொலைவில் உள்ளது, தூய மனமுடையாரால் மட்டும் அடையக்கூடியது.

போதிய தகுதியுடையார்க்கு ஞான யோகம் காட்டும் மூன்று படிகளாவன: சிரவணம் (கேட்டல்), மனனம் (சிந்தித்தல்), நிதித்யாஸனம் (தெளிதல்) என்பன.

சிரவணம் என்னும் முதற்படியாவது, மெய்ப்பொருளாகிய ஆன்மாவைப் பற்றிக் கேட்டலில் அடங்கும். ஞான விளக்கம் பெற்ற வழித்துணைவரிடமிருந்தே இதைக் கேட்க வேண்டும். முத்தநிலையிலுள்ள ஒரு ஞானி மட்டுமே அப்பொருளைப் பற்றிப் பயன் தரு நிலையிலே பேசவும், மாணவனின் ஐயங்களைப் போக்கவும், வல்லவனுவான்; மாணவனும் போதிய தகுதியுடையவனுகும் போதே அதுவும் இயலும் என்க. (மாண்டூ. உபநி—1–2, 12). அத்தகைய மெய்ஞ் ஞானியை மாணவன் வணக்கத்தோடும், பொருத்தமான வினுக்களோடும் பணி செய்யும் பான்மையோடும் அணுகும் போது, அவர் அவர்க்கு மறைவான ஆன்ம ஞான உண்மைகளை வெளியிடுவர். (கீதை—4–34). எனினும், அத்தகைய ஞானி கிடையாதபோது, முதிர்ந்த ஞான சாதகர் ஒருவரையேனும் வழிகாட்டியாகக் கொள்ள வேண்டும். அத்தகைய ஒருவரது துணையைக்கொண்டு ஆத்ம ஞானத்தை எடுத்துரைக்கும் தக்க சாஸ்திரத்தைக் கற்கவேண்டும்.

இரண்டாவதுபடி மனனம், அதாவது சிந்தித்தல். குருவினிடமிருந்தும் சாஸ்திரங்களினிடமிருந்தும் கேட்டவற்றை யுக்தியால் ஆராயவேண்டும். மிக நுட்பமான கருத்துகளைப் பற்றிய சிந்தனை வேண்டியிருத்தலின், வருந்தியும் ஏறக்குறைய ஓயாமலும் மிகுதியாக நினைவைச் செலுத்துதல்

அவசியமாகின்றது ; அதுவும் ஒரு முகப்பட்டகவனத்தோடும் செய்தாக வேண்டும். சுருங்கச் சொல்லின், இதுவே மன னம் எனப்படுவதாகும்.

பொதுவாகக் கூறின், நம்மிடம் பெரிதும் குழம்பியுள்ள நிலேயே உள்ளது ; இதை இயன்றவரை மனனத்தால் திருத்தியமைக்க வேண்டும். நமது கவனத்தாலும் கல்வியா லும் பிரபஞ்சத்திலுள்ள பல பல பொருள்களே அறியும் திறமை நமக்கு உண்டாயினும், நம்மைப்பற்றி நாம் அறிந் தது மிக சொற்பம் என்பதே உண்மை.

'நான்' 'எனக்கு' 'என்னுடைய' 'என்னுடையது' என்ற மொழிகள் மிக சாதாரணமாக வழங்கப்பட்டு வரு கின்றன. நான் காண்பவன், எனக்கு வெளியிலுள்ள உலக முழுமையும் எனது அனுபவத்திற்குரிய பொருளாகும். ஆக உலகம் இருகூருகப் பிரிக்கப்படுகிறது. அனுபவிக்கும் யான் ஒன்று, புற உலகம் முழுவதும் என்னுல் அனுபவிக்கப்படும் மற்ருென்று. இவ்விரு கூறுகளுள், அனுபவிப்பவனே மற்ற தனினும் மிகச் சிறந்த பொருள் என்பது நிச்சயம். உண்மை யுரைக்கின், யான் காணும் உலகிற்கு மையமாயிருப்பவன் யானே.

அனுபவிப்பவனுகிய நம்மைப் பற்றிய அறிவு அவ்வளவு முக்கியமாயிருப்பினும், நம்மைப்பற்றி நாம் கொண்டுள்ள கருத்து மிகக் கலங்கியதேயாகும், நமது பேச்சுகளே இவ் வுண்மைகளே ஒளியாது காட்டி விடும், 'நான்' என்னும் போது அம்மொழியினுல் குறிப்பிட்டுக் கூறுவது நம்மிடத் துள்ள இன்ன பகுதி எனபதைப்பற்றி நாம் அறியாது போகி ருேம். ஆயினும், அம்மொழி குறிப்பது நம்மோடு இன்றி யமையாத தொடர்புற்ற ஏதோ ஒன்றையே ; ஏனேயயாவும் அதற்குப் பின்னரே நிற்பன.

'இது ஒரு குதிரை' என்னும்போது, குதிரை என்னி னும் வேறுபட்டது என்பதும், அது எனது அனுபவத்திற்கு

உட்பட்ட ஒரு பொருளே என்பதும் உறுதியே. ‘இது எனது குதிரை’ என்னும்போது, யான் கொள்ளும் பொருளாவது, எனது அனுபவத்திற்கு இலக்காகும் தனிப்பட்ட பொருளாகிய குதிரை எனக்குரியது என்பதே. குதிரையும் யானும் ஒன்றென்னும் குழம்பிய அறிவு என்னிடம் இல்லை. குதிரை உதையும்போது, நானே உதைப்பதாக ஒருகாலும் சொல்வதில்லை. அந்த அளவிற்கு நம் கருத்துகள் ஒன்றோடொன்று முரணுது அமைகின்றன. குதிரையைப் போன்று நமது அனுபவத்திற்கு உட்பட்ட வேறெந்தப் பொருளைப்பற்றிப் பேசும்போதும் அவ்வாறே கருத்துகள் அமைகின்றன.

ஆனுல், ‘எனது உடல்’ என்னும்போது, எனது நினைவில் சிறிது குழப்பம் உண்டாகிறது. வெளிப்படையாக நோக்கின், உடல் எனக்குரியது என்பது எனது கருத்து; ஆதலின் உடல் என்னினும் வேறுபட்ட ஒன்ருகவேண்டும் என்பது உறுதி. வேறு எந்தப் பொருளைப் போன்றும் எனது அனுபவத்திற்கு உட்பட்ட பொருளே அது. ஆனுல் நம் கருத்துக்கள் இவ்விஷயத்தில் சிறிதும் தெளிவாக அமைவதில்லை. ஏன் எனில் 'யான் காயமடைந்தேன்' எனும் போது, அத்தகைய குழப்பத்தை நாம் வெளிக்காட்டுகிருேம். காயம் உடலிலுள்ளது என்பதும், உடல் என்னினும் வேருனது என்பதும் வெளிப்படையே. ஆனுலும் நாம் இவ்வுண்மையை மறந்து, ‘யான் காயமடைந்தேன்’ என்னும்போது, அத்தகைய இவ்வுடலை நானுகவோ என் பகுதியாகவோ கருதுகிருேம். இவ்வாறே, ‘யான் பலவீனமாயுள்ளேன், நோயடைந்துள்ளேன், முதுமையடைந்துள்ளேன்’ என்று சொல்லுகிருேம்; உண்மை யாதெனில், உடலே அத்தகைய நிலைகள் வழியாகச் செல்லுகிறது. நான் ஓர் ஆண் என்ருே பெண் என்ருே எண்ணும் நமது கருத்தும் அம்மாதிரியான குழப்பமுற்ற நினைப்பினுல் விளைவதொன்றே.

உள்ளத்தைப் பற்றியும் அவ்வாறுதான் ‘எனது மனம்’ என்று நாம் கூறுகிருேம்; இதனுல் மனம் என்னினும் வேறு

பட்டது எனக் கருதுகிறோம் என்பது உறுதி. புறத்தே யுள்ள எல்லா நிகழ்ச்சிகளையும் நாம் கவனிப்பதுபோல நமது மனத்தின் தொழில்களையும் நாம் கவனிக்கிறோமல்லவா? மற்றெல்லாப் பொருள்களையும் போன்று மனமும் நமது அனுபவத்திற்கு இலக்காகும் ஒரு பொருளே என்பது உண்மை. ஆனால் இக்கருத்து தெளிவாக நமக்குப் பிடிபடுவதில்லை. உண்டெனில், 'யான் நினைக்கிறேன், யான் சங்கற்பிக்கிறேன்' என்று நாம் எவ்வாறு கூறமுடியும்? மனமே இவற்றைச் செய்துவருவது மெய்யன்றோ? 'என் மனம் கவலையடைகின்றது' 'யான் கவலையடைகிறேன்' என்று இருவகையாகப் பேசும்போதும், ஒரு கருத்தே குறிக்கப்படுகின்றது. நமது மனத்திற்கும் நமக்கும் உள்ள சம்பந்தத்தைப் பற்றி நமக்குக் குழப்பம் ஏற்படுவதை இது தெளிவாகக் காட்டுகின்றது.

உடலும் மனமும் எனது அனுபவத்திற்கு நன்கு விளங்கும் பொருள்களாகும். ஆயினும் நாம் அவற்றை நம்மிடமே யுள்ள பகுதிகளாகக் கருதுகிறோம். எனினும், 'எனது உடல்' 'எனது உள்ளம்' முதலியவற்றை நாம் சொல்லும்போது, உண்மை வெளிப்பட்டுவிடுகிறது. மெய்யும் பொய்யும் எவ்வாறோ நமது நினைவிற் கலந்து கிடக்கின்றன. (பிரம். சூ. சங்கர பாஷ்யம்—முகவுரை). இந்து சாஸ்திரங்களின் கொள்கைப்படி, மூல அவித்தையே (அறியாமையே) இதற்குக் காரணம். இந்த அவித்தை நமது உண்மையியல்பை மறைத்துவிட்டு, நாம் எதாக இல்லையோ அதை நமக்குக் காட்டுகிறது. மிகச்சிறிய புழுவினின்றும் தொடங்கி முத்திநிலையை எய்திய முனிவர்வரையுள்ள ஒவ்வோர் உயிரிடத்தும் ஒரே ஆன்மா உள்ளது. அவற்றுக்குள் இருக்கும் வேறுபாடு, அதன் இயல்பு வெளிப்படும் அளவினைப் பற்றியதேயன்றி வேறில்லை. அவித்தை சிறிது சிறிதாக நீங்குங்காலத்து, ஆன்ம விளக்கம் மேலும் மேலும் வெளிவருகிறது.

மனித நிலையில், நமது உண்மையான ஆத்மனைப்பற்றி நமக்குள்ளே அறியாமை போதுமானபடி ஆழ்ந்திருத்தலின், நாம் உடல் அல்லது வேறில்லை என்றும் நினைக்கும்படி அது செய்கின்றது. நம்மைப்பற்றி நாம் கொள்ளும் மிகத் தாழ்ந்த (பண்படாத) கருத்து இதுவே. ஒரு சிறிதே ஆனதும் குறைவுற்றதுமான விவேகத்தினுலே, உடலும் புலன்களும் மனமும் ஒன்று கூடிய தொகுதியே நாம் என்றும் பையப் பைய நம்பத் தொடங்குகிறோம். அதற்குமேல் ஓரெட்டு எடுத்து வைத்து முன்னேறியதும், நமது உடலைப்பற்றி நாம் வேறு விதமாக அறிகிறோம். உடல் ஒரு வெளிக்கூடே என்றும், அதனுள் புலன்களும் மனமும் புத்தியும் பிராணனும் சேர்ந்த ஒரு சேர்க்கைப் பொருளாக நுண்ணிய நிலையில் நாம் வாழ்கிறோம் என்றும் அறிகிறோம். இன்னும் முன் செல்லும் பொழுது, இவையும் நமது அனுபவத்திற்கு இலக்காகும் பொருள்களே என்பதைக் காண்கிறோம். அவை தொழிற்படுவதை நாம் சாக்ஷியாக நின்று பார்க்கக்கூடும். இந்நிலையில் நாம் புத்தியில் வாழ்வதை உணர்கிறோம். சாதாரண நிலையில் எல்லா ஜீவர்களுக்கும் அதுவே இருப்பிடமாக அமைவதுபோல் தோன்றுகிறது.

புத்தியைத் தான் நிற்கும் நிலையாகக் கொள்ளும் ஜீவன் தானே எல்லாச் செயல்களுக்கும் கருத்தா என்பதாகவும், எல்லா அனுபவங்களையும் பெறும் போக்தா (அனுபவிப்பவன்) ஆகவும் இருப்பதாக உரிமை பூணுகின்றான். இதை உபநிடதங்களில் ஒன்று, ஓர் அழகிய சொற்பட வாயிலாக வருணிக்கின்றது:—"ஆத்மனைத் தேருக்குச் சொந்தக்காரனாகவும், உடலைத் தேராகவும், புத்தியைத் தேர் ஓட்டுபவனாகவும், மனதைக் கடிவாளமாகவும், இந்திரியங்களைக் குதிரைகளாகவும், இந்திரிய விஷயங்களை (ஐம்புலப் பொருள்களை)க் குதிரைகள் செல்லும் பாதை ஆகவும் அறிக." (கட உபநி. 1—3, 4).

உண்மையிலே நாம் ஜீவர்களாகும் நிலையிலே சூக்குமஉடலின் ஒரு பகுதியாகிய புத்தியை உறைவிடமாகக்கொள்ளுகிறோம்; அச்சூக்கும உடல், மனத்தாலும் புத்தியாலும்

இந்திரியங்களாலும் பிராணனாலும் ஆயது. ஜீவர்களாகும் நிலையிலே நாம் தூல உடல் வாயிலாகத் தூல வெளியுலகத்தோடு சம்பந்தமடைகிறோம். இன்னும், மெல்லிய உறக்கத்தில் தூல உடலைத் தனியே விடுத்து, கனவு நிலையிலும் நாம் கருத்தாக்களும் போக்தாக்களும் ஆகிறோம். முழு சூக்கும உடலோடும் இத்தூல உடலைவிட்டு மரண காலத்தில் நாம் வெளியேறி, மறுபிறப்பில் இன்னொரு தூல உடலிற் புகுகிறோம். இவ்வாறு எண்ணிறந்த பிறப்புகள் இறப்புகள் மூலம் நாம் ஜீவர்களாகவே தொடர்ந்து வாழ்ந்து வருகிறோம்.

ஆயினும் ஒவ்வொரு நாளும் நாம் ஆழ்ந்து உறங்கும் போது மிக்க ஆச்சரியமான ஒன்று நிகழ்ந்து வருகின்றது. அது யாதெனில், ஆழ்ந்த உறக்க நிலையில் (சுழுத்தி நிலையில்) நாம் நம்மைப்பற்றிய இவையனைத்தையும் இழந்து அதுவரை நடித்துவந்த நாடக மேடையினின்றும் மறைந்து விடுகிறோம். அந்நிலையில் நாம் ஒன்றையும் காண்பதில்லை. எச்செயலையும் ஆற்ற ஒண்ணாத நிலையிலும் உள்ளோம். கருத்தாக்களாகவும் போக்தாக்களாகவும் ஆனநிலை கழிந்து விடுகின்றது. நாம் ஜீவர்களாயிருந்த நிலை மறைந்ததுபோல் தோன்றுகிறது. நாம் காரண அவஸ்தையில் ஒடுங்கி விடுகிறோம். நமது நினைவுகளும் அனுபவங்களும் ஆகிய யாவும் இந்நிலையில் ஒடுங்கியிருக்க, அவற்றோடு யாம் வாழ்கிறோம். இச்சுழுத்தியினின்றும் விடுதலையடைந்ததும் நாம் கனவு நிலையிலோ விழிப்பு நிலையிலோ கருத்தாக்களாகவும் போக்தாக்களாகவும் திடீரெனக் கிளம்பி விடுவதாகத் தோன்றுகிறது.

உண்மையை உரைப்போமாயின், சுழுத்தியாகிய இந்நிகழ்ச்சி சாதாரணமான ஒன்றன்று. நாம் கருத்தாவாகவும் போக்தாவாகவும் தொடர்ந்து வாழ்ந்துவரும் வாழ்க்கையில் கிட்டத்தட்ட அன்றாடமும் ஒரு பிளவினை அது உண்டாக்குகிறது. ஆயினும் ஆழ்ந்த உறக்கத்து நாம் இல்லாதொழிகிறோம் என்று நம்மாற் கூற இயலாது. அது முழுச் சூனிய

நிலையோ வெறும் பாழோ அன்று. ஆழ்ந்த உறக்க நிலைவழி யாகச் செல்லும்போதும், நமது வாழ்வில் ஒரு தொடர்ச்சி யிருப்பதாகவே நாம் உணர்கிறோம். நாம் விழிக்கும்போது, நாம் ஆழ்ந்து உறங்கினோம் என்றும், எதனையும் அனுப விக்க வில்லையென்றும் சொல்ல நமக்கு இயலுகின்றது. நாம் அவ்வாறு சொல்வதற்கு நமக்கு சாக்ஷி யாது? நம் வாழ்வி லுள்ள சுறுசுறுப்பான பகுதி அம்மேடையிலே (நிலையிலே) காணப்படவில்லையே. ஆயினும் நம்மிடத்துள்ள யாதோ ஒன்று அச்சுழுத்தி நிலைக்கும் சாக்ஷியாக அமர்ந்திருந்தது. ஆதலால், யாதொருசெயலும் அனுபவமும் இன்றி சாக்ஷியாக மட்டும் இருந்த இவ் இருப்பு நம்மிடத்து என்றைக்கும் உறங்கியறியாத ஒரு பகுதியைச் சார்ந்ததாகிறது. அது எப்போதும் உள்ள ஒன்று. இது தான் நமது உண்மை யான ஆன்மா (சாக்ஷி சைதன்யம்). இந்த ஆன்மா கருத் தாவுமன்று, போக்தாவுமன்று. விழிப்பு கனவு நல்ல உறக் கம் எனும் மூன்று நிலைகள் வழியாகவும் ஜீவன் செல்லும் போது, ஒரு பிறப்பினின்று மற்றொரு பிறப்பிற்குச் செல் லும் போதும், அந்த ஜீவனின் எல்லாச் செயல்கட்கும் அனுபவங்கட்கும் சதா சாக்ஷியாக நிற்பது அதுவே.

இந்த சாக்ஷி சைதன்யமான (ஆன்மாவான) இருப்பே நமது உண்மை யியல்பு. நம்மிடத்துக் கருத்தாவாகவும் போக்தாவாகவும் உள்ள ஜீவனும் நமது அனுபவத்திற்கு இலக்காகும் ஒரு பொருளே. புத்திக்கும் அப்பால், அதனின் றும் வேறானதாக, நாம் எக்காலத்தும் சுத்த சைதன்யமாக உள்ளோம். (கீதை. 3-42). இதுவே நமது ஆன்மா; நம் அனைவருடைய ஆன்மாவும் ஏகமான, எங்கும் வியாபகமான ஸத்தே (உண்மைப் பொருளே). அது உண்மை—அறிவு— இன்பம் (ஸத்–சித்–ஆனந்தம்) எனும் அகண்டமான கடலே. எல்லையற்ற ஏக பரம் பொருளான பிரம்மன் எனும் தத்து வம் இதுவே. இதனிடத்திலிருந்தே, தூலம் சூக்குமம் ஆகிய

எல்லா உலகங்களும் வெளித் தோன்றுகின்றன, இதனி டத்தே அவை வாழ்கின்றன, இதற்குள்ளே அவை பிரளய காலத்து மறைகின்றன.

உண்மையாகவே நமது ஆன்மா ஒன்றேயாகும், பகுப் பறியாததாகும். நமது வெவ்வேறான புத்திகள் முற்கூறிய ஒரே பிரம்மனின் சைதன்யத்தால் (ஞான ஒளியால்) விளக் கம் பெற்று, தனித்தனியான அழிவற்ற பொருள்களாகத் தோன்றுகின்றன. (கட. உபநி. 2—2–15) பிரம்மன் எனும் ஒரே சூரியனது ஒளியால் அவை பல சந்திரர்களைப் (மதி களைப்) போன்று மிளிர்கின்றன (பிரகாசிக்கின்றன). நம் மிடத்துள்ள இந்த ஜீவனெனும் சந்திரனே நம்மைச் சுற்றித் தூல உலகங்களிலும் சூக்கும உலகங்களிலும் நாம் காணும் அனைத்தையும் விளங்கச் செய்கின்றது.

இம்மாதிரியாக மனனம் செய்வதன் (சிந்தித்தலின்) மூலம், தகுதிவாய்ந்த சாதகன் நாளடைவிலே, தூல சூக்கும உடல்களினின்றும் பிரிந்து வேருகித் தான் சாக்ஷியாகவும் பிரம்மனுகவும் விலகியிருப்பதை உணரும் திறமையைப் பெறுகிருன்.

மூன்ருவது படியாகிய நிதித்தியாஸனம் (தெளிதல்) என்னும் நிலையை அடையவேண்டின், ஞானயோகி இந்நிலை யில் எல்லாப் பொருள்களினின்றும் முற்றும் தன்னை உள் ளிழுத்து விலக்கிக்கொண்டு 'யான் சாக்ஷியே' என்ற கருத் தில் மனதை ஒருமுகப்படுத்த வேண்டும். இத்தகைய மன ஒருமை நிலை முதிரும்போது, திடீரென அனைத்தும் காட்சியி னின்றும் மறைந்துவிடுகிறது; தான் அழிவற்ற பிரம்ம னேடு ஒன்ருக நிற்பதைக் காண்கிருன். இதுவே நிருவிகற்ப சமாதியெனப்படும்.

ஆக, இம்மூன்று படிகளின் துணையினல், ஞானயோகி இவ்வுலகத்தைத் தோல்தோலாக உரிப்பதுபோல் உரித்

தெடுத்து, அதன் நடுவான அடிப்படை உண்மையை நாடி, மெய்யுணர்வெனும் பரம ஞானத்தைப் பெற்றவனுகிருன்.

## 11

## பக்தி யோகம்

இந்துக்கட்குரிய இந்தியாவில் வாழ்ந்த புகழோங்கிய ஞானியும், இந்தி மொழி இராமயணத்தை இயற்றியவரும் ஆகிய துளசிதாஸர் தமது இளமைப் பருவத்தில் தமது மனேவிமீது அளவுக்கு மிஞ்சிய பேரன்பையுடையராயிருந்தார். ஒருகாலத்தில் அவள் அவரை விட்டுப் பிரிந்து தனது தந்தையின் இல்லத்திற்குச் சென்று சிறிது காலம் தங்க நேர்ந்தது. ஆனல் துளசிக்கு அது தாங்க முடியாததாயிற்று. அவர்க்குத் தம் இல்லத்துத் தங்குதல் இயலாத காரியமென்பது தெரியவந்தது, ஆதலின் அவள் புறப்பட்டுச் சென்ற அதே நாளில் அவர் அவளேப் பின் தொடர்ந்து, அவளேத் தமது மாமனுர்கத்துக் கண்டனர். அவ்வமயம் அவரது மனேவி அவரிடம் ''நீர் என்னிடம் எவ்வளவு பிரேமை கொண்டவாராயிருக்கின்றீர்! இப் பிரேமையை நீர் இறைவனே நோக்கித் திருப்புவீராயின், நீர் அவரை மிக விரைவிலே உணர்வீர்'' என்று கூறலானுள். இவ்வுரை துளசிதாஸரது உள்ளத்தில் ஒரு மந்திரம் போன்று வேலே செய்யலாயிற்று. அவர் முன்னிருந்த நிலே மாறி, இறைவன்மீது பிரேமை கொண்டவரானுர். காலம் முற்றியபோது அவர் இறைவனே உணர்ந்தவராகி, பிறரும் அப்பேற்றை அடைதற்குப் பேருதவி புரிந்து வந்தார்.

இந்து புராணக் கதைகளில் அத்தகைய மனமாற்றத்திற்குப் பலப்பல சான்றுகள் உள்ளன. ஒரு பரத்தையின் மீது பில்வமங்களர் வைத்த கோரமான பாசத்தை இறைவன்மீது திருப்பியபோது, அவர் மெய்க் காட்சிப் பேற்றை அடைந்தனர்.

முற்கூறிய இரண்டு உதாரணங்களும் பக்தியோகம் (அன்பு நெறி) இன்னது என்பதைப்பற்றி ஒரு குறிப்பைப் புலப்படுத்துகின்றன. பக்தி யோகத்திற்கு அடிப்படையா யுள்ள எளிய உண்மை யாதெனின், இறைவன்பால் அன்பு செலுத்துவதனுல் எவரும் அவரை உணரலாகும் என்பதே. வேறொன்றும் வேண்டா. தத்துவத்தைப் பற்றிய சிந்தனேயோ, உடலேயும் மனதையும் கருவியாகக் கருதிப் பயிற்சியை அளிப்பதோ அவசியமில்லே. இன்னும், அது இயற்கைக்கு மாருன யாதொன்றையும் வேண்டுவதில்லே.

நம்மிற் பெரும்பாலார் இயல்பாகவே உணர்ச்சி வயப் பட்டவராகிறேம்; வேறெவ்வித உணர்ச்சிக்குக் கட்டுப்படு வதினும் மிகுதியாக அன்புணர்ச்சிக்கு அடங்கி வாழ்பவரா கிறேம். நமக்கு நம்மிடத்து அன்புண்டு; நம் உற்ருர் உறவினரிடத்து அன்பு உண்டு. நமது இல்லத்தின்மீதும் இல்லத்தார்மீதும் அன்பு உண்டு. நம் சொந்த இனத்தார் மீதும், நம் நாட்டினர்மீதும், நம் வர்க்கத்தினர்மீதும் அனபு உண்டு. செல்வம் அதிகாரம் உடைமை இவற்றில் நமக்குப் பிரியம் உண்டு. காமம் நம்மை அடக்கியாள்கிறது. இவையனேத்தின்மீதும் நாம் கொள்ளும் பிரியமே நம் செயல்களிற் பெரும்பாலானவற்றை அமைத்து, நமது ஒழுக் கத்தை உருவாக்குகின்றது. மேலும் அது நமக்கு ஆனந் தத்தை அளித்து, வாழ்வை இனியதாக்குகிறது. உலக முழு தின் மீதுமே அது ஒரு வகைக் கவர்ச்சியை வீசுகின்றது. அது இல்லாதபோது வாழ்க்கையே தாங்கவொண்ணுததா கின்றது.

அன்பென்பது அடிப்படையான உலகப்பொதுவான ஓர் உணர்ச்சி என்பதிலும், அக்காரணத்தால் அது நமது வாழ்க் கையில் அடங்கிய மிக்க வலிமையார்ந்த ஒரு பகுதி என்பதி லும் ஐயமில்லே. இந்த அடிப்படை உணர்ச்சி ஏனேய உணர்ச்சிகளில் ஒவ்வொன்றையும் ஊக்கத்தோடு கிளப்பு வதுபோலத் தோன்றுகிறது. உதாரணமாக, வாழ்வில் நமக்குள்ள பிரியத்தினின்றே நமது மரண பயம் கிளம்பு

கின்றது. மிதமிஞ்சிய தன்னயப் பிரியத்தினின்றும் பகை கிளம்புகின்றது. உண்மையாகவே, மிக உயர்வான செயல்களும் மிக இழிவான செயல்களும் நம்மை அடக்கியாளும் இத்தன்னயப்பற்றினின்றே உற்பத்தியாகின்றன. பிறர் மீது செலுத்தும் தன்னயமற்ற அன்பே எல்லா அன்பர்களையும் சிறப்பாக உண்ணின்று இயக்குவதாகும். நம் மிகத் துணிவான செயல்களைக் கிளப்பும் ஊக்கத்திற்குப் பிறப்பிடமாவது இந்த அன்பே. தாய் தனது கண்ணனைய குழந்தையைக் காத்தற்காகச் சிங்கத்தையும் எதிர்த்து நிற்கிருள். தனது நாட்டின் மீதுள்ள அன்பினுல் போர் வீரன் மரிக்கவும் துணிகிருன். இது போன்றே மற்ருெரு பக்கத்தும், வேறெதினும் பார்க்க மிகுதியாக சுயநலப் பற்றே கொலையாளியையும் கொடுங்கோன் மன்னனையும் பிறரைச் சுரண்டுபவனையும் ஆட்டி வைத்து வருவதைக் காண்கிருேம். தீத்தொழிற் கூட்டத்தான் ஒருவனை அச்சமின்றிப் பாதகச் செயல்களை இயற்றும்படித் தூண்டுவதும், அவனுக்குத் தன் அருஞ் செல்வமனைய குடும்பத்தாரின் மீதுள்ள நேசமே. ஆக ஸமூக வாழ்க்கைக்குத் தலையணி போன்ற பண்புகளையும், அதனைச் சிதைக்கும் இருள் செறிந்த பாவச் செயல்களையும்—இவ்விரண்டையும் சம அளவிற்குத் தூண்டுவது அன்பேயாம். ஒரு விளக்கை இறைவனது சந்நிதியில் ஒளி சொரியும் தீபமாக்கலாம்; அன்றேல், ஓர் இல்லத்தைத் தீக்கு இரையாக்கவும் பயன்படுத்தலாம் அன்ருே? அத்தகைய விளக்குப் போன்றதே அன்பு. பெருந்திறல் வாய்ந்த இவ்வுணர்ச்சியை நாம் பயன்படுத்தும் முறையைப் பொறுத்ததாகின்றன யாவும்.

இந்த உணர்ச்சியை இயன்றவரை மிகச் சிறந்த முறையிலே பயன்படுத்துதற்குரிய ஒரு வழியைப் பக்தி யோகம் நமக்குக் காட்டுகிறது. வாழ்க்கையின் குறியாகிய முத்தியை நாடுவதற்கும் நாம் அதனைப் பயன்படுத்திக் கொள்ளலாம். இதற்கு நாம் செய்ய வேண்டியதெல்லாம், இவ்வுலகத்

துள்ள வேருெரு பொருளிடத்துச் செலுத்துவது போன்ற அன்பைத் தீவிரமாக இறைவனிடத்தும் செலுத்துவதேயாம். ஓர் ஆளையோ பொருளையோ மிகப் பிரியமாக நேசிக்கும் வகையை நாம் அனைவரும் அறிவோம்; நம் அன்பு குவியும் இடத்தை உலகப் பொருள்களினின்றும் இறைவன்பால் மாற்ற வேண்டுவதொன்றே தேவை. இம்முறையினுல் நமது உணர்ச்சி மயமான இயல்பு முற்றிலும் தொழிற்படுவதாகும். ஆதலால், நமக்குப் பழக்கமான ஒன்றை விட்டுப் புதிய ஒன்றிற்குப் போகும் உணர்ச்சி நம்மிடம் ஒருக்காலும் ஏற்படுவதில்லை. மேலும், இறைவன்மீது அன்பு வளர வளர வேறு பொருள்களின் மீதுள்ள பற்று வரவரத் தேய்ந்து வருகின்றது. ஆதலால் துறவு எளிதாகவும் இயற்கைக்கு ஒத்ததாகவும் ஆகிறது. இன்னும், இறைவன்மீது செலுத்தும் அன்பு தொடக்க முதலே தூய ஆனந்தத்தை விளைக்கின்றது. இக்காரணம் பற்றியே பக்தியோகம் எனும் அன்பு நெறி மக்களிற் பெரும்பாலார்க்கு உவந்ததாகிறது. ஒருக்கால் அது முத்தியடைய அனைத்தினும் எளிய வழியாகவும், நம்மில் அநேகருடைய சுவைக்கும் தகுதிக்கும் பொருத்தமானதாகவும் இருக்கலாம்.

ஆயினும், இறைவன்மீது அன்பு கொள்ளல் வெளிப் பார்வைக்குத் தோன்றுகிறபடி அவ்வளவு எளியதுமன்று. உலகப் பொருள்களின்மீது இம்மியளவு பற்றேனும் ஒருவனது உள்ளத்து இருக்கும்வரை, இறைவனை யடையப் பசித்துத் துடிக்கும் நிலை அவனுக்கு வர இயலாது. நமது புலன்கட்கு இன்பந்தரும் ஒரு பொருளின்மீது ஆசை வைப்பது நமக்குத் தெரிந்த ஒன்றேயாகும்; ஆனுல் தொடக்கத்திலே நம்மாற் காணவும் உணரவும் முடியாத இறைவன்மீது ஆசைப்படுதல் என்பது அதனினும் முற்றிலும் வேருன ஒன்று என்பது உறுதியே.

இந்த சிரமத்தினின்றும் வெளியேற நமக்கு உதவுவது பக்தியோகமே. புதியோன் ஒருவனும், முத்தியினிடம் நேரா

கச் சேர்ப்பிக்கும் கடவுட் பிரேமையினை நாளடைவில் படிப் படியாய் அடைய உதவும் ஒரு முறையை அது எடுத்துக் காட்டுகின்றது (கிறிஸ்து மதமும் இஸ்லாமும், பக்தியோ கம் ஒன்றையே, இறைவனை அணுகுதற்குரிய ஒரே வழியாக எடுத்துரைக்கும் என்பது சற்றே சிந்திப்பார்க்கு விளங்கும்).

இத்தகைய உயர்ந்த ஒரு முகப்பட்ட அன்பு 'பர பக்தி' எனப்படும். பலப்பல சாதகர்கள் இத்தகைய அன்பையும், அதனை அடுத்து வரும் ஆனந்த பரவசத்தையும் கடவுட் காட்சிகளையுமே தமது ஞான சாதனத்தின் அறுதி நிலையாகக் கருதி, அவற்றையடையப் பேரவாக் கொள்வர். இம்மாதிரி அன்பர்கள் (பக்தர்கள்) இம்மையிலே இறைவனை உணர்ந்த பின் பூரணமடைகின்றனர். இறந்தபின் அன்னார் தமது சூக்கும உடலை வைத்துக் கொண்டு, மேலுலகங்கட்குச் செல் கின்றனர்; ஆங்கே அவர்கள் தமது இஷ்ட தெய்வத்தின் முன்னிலையில் சதா வாழ்ந்து வருகின்றனர்.

ஆனால் இறைவன்மீது பாயும் இப்பிரேமையை ஒரே நாளில் அடைய முடியாது. அதைப் பேணி வளர்த்து வரல் வேண்டும். அதற்காக ஓர் ஆரம்பப் பயிற்சியைப் பின்பற் றல் வேண்டும். இது 'கௌணி பக்தி' (முக்கியமல்லாத பக்தி) எனப்படும். சிரத்தையோடு நெடுங்காலம் சாதனம் பழகுவதன் பயனாகக் கௌணி பக்தி (அபர பக்தி) நாளடை வில் பர பக்தி (உயர்ந்த பக்தி) யாக மலரும்.

வேறெந்த யோகத்தைப் போன்றும் பக்தியோகமும் ஒரு வகையான அற ஒழுக்கத்தை விதிக்கின்றது. ஆசை களை அடக்குதலும், தன்னடக்கப் பயிற்சியும், தன்னல மறுப் பும், வாய்மையும், நேர்மையும், சிரத்தையும் இன்னா செய் யாமையும் (அஹிம்சையும்) ஆகிய குணங்களைச் சாதகன் முயன்று பெறல் வேண்டும். பிறர்க்குரியவற்றில் ஆசையின் மையும், கைம்மாறு கருதாது அனைவர்க்கும் நன்மை செய் யும் இயல்பும் அவசியமாகும். இவையன்றியும், உடலும் மனமும் வலிமையுற்றனவாய் இருந்தலும், அளவுக்கு

மிஞ்சிய களிப்புக்கு இடங் கொடாமையும் கட்டாயமாக வேண்டியனவாம்.

முற்கூறிய ஒழுக்க அமைப்பைப் பெற்று, ஞான சாதனத்தைத் தீரத்தோடும் மன உறுதியோடும் சாதகன் விடாது பற்றவேண்டும். ஏனெனில், இப்பழக்கம் ஒன்றினுலே அவன் தன் மனத்தை ஏனைய பொருள்களினின்றும் இழுத்து, இறைவன்மீது நிலைநிறுத்த வேண்டும். தாழாத ஈடுபாடுடையனுய் முன் செல்லுபவன் இம்முயற்சியில் வெற்றியடைகிருன்.

பக்தியோகம் விதிக்கும் ஞான சாதனமாவது, சதா பகவானை நினைத்தலே. இத்தகைய நினைவே உள்ளத்தைத் தூயதாக்கி, அதற்கு வலிமையையும் ஆனந்தத்தையும் கூட்டி, பரம பக்தியையும் முக்தியையும் நோக்கி மேலும் மேலும் அணுகும்படி அதனைச் செய்கிறது. கீதையிலே (12-6, 7) ஸ்ரீ கிருஷ்ண பகவான் கூறுவதாவது: "எல்லாக் கருமங்களையும் என்பால் ஒப்புவித்த பின்பு, என்னைப் பரமெனக் கொண்டு, வேருென்றிலும் யாதும் பற்றின்றி என்னைத் தியானித்து வழிபடுவோர் யாவர், என்பால் அறிவை முழுதும் புகுத்திய அன்னுரை நான் அடுத்தடுத்து வரும் இறப்பும் பிறப்புமாகிய கடலினின்றும் விரைவில் தூக்கி விடுவேன்." பகவானைப் பற்றியே எப்போதும் சிந்தனை செய்தல் உள்ளத்திற்கு மிக்க சிரமமானது என்பதைப் பற்றி ஐயமே இல்லை. ஆயினும் உறுதியோடு செய்யப்படும் ஒவ்வொரு புது முயற்சியும் கோரிய கருமத்தை முன்னினும் எளிதாக்கி வரும்; ஆனுல் இப்பயனை விழையும் சாதகன் உலகப் பொருள்களின்மீது பற்றற்றவனுதல் வேண்டும். (கீதை. 6–35).

முதலில் மனம் ஒரே நெறியில் சென்று கொண்டிருக்க இசையாது போகலாம். ஒரே நினைவை ஒரே மாதிரியாகத் திரும்பத் திரும்ப நினைத்தலில் மிக்க அருவருப்பு உண்டாகலாம். ஆரம்பத்தில் நேரும் இந்த சிரமத்தை நீக்குதற்காகப்

பகவானை நினைத்தற்குரிய பலவகைப்பட்ட நெறிகளைப் பக்தி யோகம் எடுத்துக் காட்டுகிறது. அவரது பெயரையே ஓதிக் கொண்டேயிருக்கலாம் ; தோத்திரப் பாக்களையும் பிரார்த் தனைகளையும் பாடலாம் ; நைவேத்தியங்களை இட்டு அவரை வழிபடலாம் ; அவரைப் ப்ற்றியோ அவரது சக்தியையும் புகழையும் பற்றியோ தியானிக்கலாம் ; அவரைப் பற்றியும், அவரது அருளைப் பெற்றுய்ந்த பாக்கியவான்களான மகான் களைப் பற்றியும் கூறும் சாஸ்திரங்களை நாம் வாசிக்கலாம். இவ்வாறு நமது மனத்தைப் பகவானைப் பற்றிய சிந்தனையில் பல வழியாக ஈடுபடுத்தலாம். இதனுல் அருவருப்பு குறை யும், சாதனம் இனிமையானதாகும்.

மேலும், பகவான் இப்பிரபஞ்சத்தைத் தம்மிடமிருந்தே தோற்றுவித்துள்ளார் என்ற இந்துமதக் கருத்தினுல் (அத்தி யாம் 20-ஐப் பார்க்கவும்) அவரைப் பற்றி நினைத்தல் நமக்கு ஒருவாறு எளிதாகின்றது. எப்பொருளைப் பற்றி நினைக்கி னும், அதன் உருவத்தின் வாயிலாகவே நினைக்கும் பழக்கம் நம்மிடம் உள்ளது. உருவமற்ற பாழ் ஒன்றை நினைத்தல் நமக்கு இயலாததாகும். முற்கூறிய கருத்தின் உதவியால் பிரபஞ்ச முழுதையும் பகவானுகவே நாம் பாவிக்கலாகும். படைப்புக்குட்பட்டவற்றில் ஏதேனும் ஒரு பொருளைத்தெரிந் தெடுத்து, அதனைப் பகவானுகப் பாவித்தல் அதனினும் மிக எளிதாகும். பகவான் தம்மை வெளிப்படுத்தியுள்ள உருவங் களில் அதுவும் ஒன்றன்றோ?

ஆயினும், நம்மைச்சுற்றிலும் நாம் காணும் பொருள் களின் வடிவங்களே யன்றியும், பகவான் வேறு பல திவ்விய வடிவங்களையும் கொண்டுள்ளனர். நாராயணன், சிவன், கணபதி, சூரியன், துர்க்கை, காளி என்பவற்றை இதற்கு உதாரணமாகக் காட்டலாம். உண்மையைக் கூறுவோமா யின், எல்லாத் தெய்வங்களும் பகவானின் தூலவடிவங்களே யாதலின், அவற்றில் யாதேனும் ஒன்றைப் பகவானுகப் பாவித்து வழிபட்டும், அதேயளவு பயனை அடையலாகும்.

வடிவத்தின் தரம் உயர உயர, அதனைப் பகவானுகப் பாவித்தல் நமக்கு மேலும் மேலும் எளிதாகும்.

இன்னும், மக்கள் ஞான வளர்ச்சியைப் பெறத் துணையாகும் பொருட்டு பகவான் தாமே மனித வடிவத்தில் அவதரிக்கிருர் என்பதும் இந்துக்களது நம்பிக்கை. இராமரும் கிருஷ்ணரும் இந்நாட்டில் தோன்றிய சிறந்த அவதாரங்களில் இருவராவார். இந்த அவதாரங்களில் யாதேனும் ஒன்றைப் பகவானுக நினைந்து, அவர்மீது பக்தி செய்யப் பழகுதலும் அமையும்.

பக்தியோகத்தைப் போற்றி வருவாருள் தலைசிறந்தவராகிய வைணவர்கள் ஸ்ரீராமசந்திரரையோ ஸ்ரீகிருஷ்ணரையோ தமது இஷ்ட தெய்வமாக மேற்கொள்ளுகின்றனர். மனித வடிவத்தின் வாயிலாகப் பகவானை நேசித்தல் நமக்கு அனைத்தினும் மிக எளிதாகும் என்பது திண்ணம். அருவமான எல்லாம் வல்ல இறைவன் முன்போ, சோதிமயமான திவ்விய வடிவுகொண்ட இறைவன் முன்போ நாம் அச்சத்தோடும் பணிவோடும் முன்னிற்கலாம். ஆனல் அது அன்பன்று. உறவுணர்ச்சியை ஆதாரமாகக் கொண்டது அன்பு. பகவான் மனிதனுகத் தோன்றும் போது, அவர் உண்மையாகவே நமக்கு மிக அருகே வருகின்றனர்; நாமும் அவரை எளிதாக அணுகலாம். அம்மாதிரியான மனித வடிவத்தின் வாயிலாகப் பகவான்மீது அன்பு செலுத்துதற்காக, நாம் அளவுக்கு மிஞ்சி நமது கற்பனு சக்தியை வருத்திப் பயன்படுத்த வேண்டிய அவசியம் இல்லை.

### பிரதிகையும், பிரதிமையும்

எனினும், கௌணி (ஆரம்ப) பக்தியாவது, புல் முதலாக உலகங்களைப் படைத்த பிரம்மாவரை, படைப்பிலுள்ள எந்த வடிவத்தின் மூலமாகவேனும் பகவானிடத்து மனதை நிலைநாட்டுதற்கு முழுமனதோடு முயலுதலேயாம். படைக்கப்பட்டுள்ள ஒவ்வொரு வடிவமும் பகவானை வெளிப்படுத்

தும் ஒரு வடிவமாதலின், பகவானை யன்றி வேறொன்றாகாது. ஆதலால் சூரியனையோ சந்திரனையோ வானத்தையோ பகவானாக பழிபடலும் ஆம். கடலிலோ, நதிகள் மலைகள் மரங்கள் இவற்றில் ஒன்றிலோ பரந்தும் கரந்தும் உறைவதாகவும் பகவானை நினைக்கலாம். ஒரு சிலையையோ உலோகத்தாலான ஒரு துண்டையோ பகவானது அறிகுறியாகக் கருதிப் பேரன்போடு வணங்குதலும் செய்யலாம். இவ்வாறுதான் சாளக்கிராம சிலையோ சிவலிங்கமோ அம்மாதிரியான வேறு குறிகளோ—இவற்றில் ஒன்றின் வாயிலாக இந்துக்கள் ஒரே பகவானை வழிபட்டு வருகின்றனர். அம்முறைப்படியே, சூரியனும் வானமும் சாளக்கிராமச் சிலையும் அகண்டமான சாஸ்வதமான பிரம்மனின் வெளித்தோற்றங்களாகிய சிறு சிறு பகுதிகளாதலின், அவை பகவான்மீது நமது மனத்தைக் குவியச் செய்ய ஏதுவாகின்றன. மனத்தால் அகண்ட பரம்பொருளைப் பற்றுதல் இயலாது வரையறைக்கு உட்பட்ட தூலமான ஒன்றின் மீதுதான் அது நெடிது நிற்க இயலும். இக்காரணம் பற்றியே, பகவானை அவரது எல்லையுற்ற தூல வடிவங்களில் யாதேனும் ஒன்றின் வாயிலாக நினைப்பது நமக்கு எளிதாகின்றது. இவ்வடிவங்கள் பிரதிகைகள் (குறிகள்) எனப் பெயர் பெறும். [வழிபாட்டிற்காக வழக்கமாகப் பயன்படுத்தும் குறிகளாவன: சாளக்கிராமம், சிவலிங்கம், கங்கை, மணி, யந்திரம், சாஸ்திரம், கும்பம், நீர், மலர் என்பவை. மாத்ரிகாபேத தந்திரம் 13-ம் அத்யாயத்தைப் பார்க்கவும்.] இப்பிரதிகைகள் பகவானைக் குறிப்பவையாம். இவ்வடிவங்களுள் ஒன்றின் வாயிலாகப் பகவானை வணங்குதல் பிரதிகை உபாசனை எனப்படும்.

மேலும், இறைவனின் திவ்விய வடிவங்கட்குப் பிரதிமைகளும் படங்களும் குறிகளாவதுண்டு. இப்பிரதிமைகள் வழக்கமாகக் களிமண்ணாலோ கல்லாலோ உலோகத்தாலோ மரத்தாலோ ஆக்கப்படுகின்றன. (மத்ஸ்ய புராணம்: அத். 258, 20–21). பிரதிமை வாயிலாக இந்துமத பக்தன்

வணங்குவது பகவானையன்றி வேறெதையும் அன்று. அவன் தனது பக்தியை வெளிக்காட்டுவது ஒரு கல்லின் துண்டிற்கோ உலோகத் துண்டிற்கோ அன்று. ஒரு படத்தைச் சுற்றியோ, மரித்த ஒரு வீரரது சிலையைச் சுற்றியோ ஒரு மாலையை அணியும்போது, நாம் மதிப்பது யாரை? நமது புகழ்ச்சிக் குரிய பொருள் ஒருதாளோ செதுக்கிய கல்லோ அன்ற என் பது வெளிப்படையே. நாம் உண்மையாகச் செலுத்தும் பணிவுக்குரிய வீரரை நமக்கு அவை நினைவூட்ட மட்டும் உதவுகின்றன. அது போன்றே, குறியோ பிரதிமையோ ஒருவர்க்கு நினைப்பூட்டுவது, இந்துக்கள் வணங்கும் பக வானையே. உண்மையாதெனில், வழிபாடு முடிந்ததும், களிமண் பிரதிமைகள் பலமுறையும் நீரிலே அமிழ்த்தப் படுகின்றன. பிரதிமை யாரைக் குறிக்குமோ அந்த பக வானையே இந்துக்கள் மதிக்கின்றனர், அது தானே எப் பொருளாகுமோ அதை மதிப்பதில்லை.

ஆயினும், பிரதிகையோ பிரதிமையோ ஏதோ ஒரு தூலப்பொருளாய் அமைதலின், அது நமது மனங்களை இந் திரிய விஷயங்களினின்றும் தன்னிடமும், தன்வாயிலாகப் பகவானிடமும் இழுத்துக் கொள்ள நமக்கு உதவுகின்றது. ஒரு வழியாக நோக்குமிடத்து, இதனை நமது ஞானப் பயிற் சிக்கு ஒரு துணையென்றும், குழந்தை நிலையில் இருப்பவர்க் கேற்ற முறை ஒன்று எனவும் கூறலாம். எவ்வாறெனில், இதன் வாயிலாக முழுமனதோடு உழைக்கும் சாதகன் இறை வனைக்கண்டு தொட்டுப் பேசும் நிலையினை அடைகிறான். அந் நிலையில் பிரதிமையும் கோயிலும் கிரியைகளும் சாஸ்திரங் களும் தமது நோக்கத்தை நிறைவேற்றிவிட்டுப் பின்பக் கத்தே ஒதுங்கி விடுகின்றன. உருவங்களும் கிரியைகளும் பரபக்தியை அடைதற்கு உதவி செய்யும் வகையில் நமக்குப் பயன் அளிக்கின்றன.

இங்கு நாம் நினைவில் வைத்துக் கொள்ளற்குரிய ஓர் உண்மை உள்ளது; அது யாதெனில், கௌணி பக்தியைச்

சார்ந்த கிரியைகள் உள்ளத்தைத் தூய்மையாக்கிப் பகவான் மீது தூய தீவிர பக்தியை வளர்க்கும் கருத்துடையன என்பதே. ஆசை நெறியைப் பின்பற்றுவோர் பழகிவருவன வாய பகவானின் நாமங்களை ஓதுதல், தோத்திரங்கள், பிரார்த்தனைகள், வழிபாடு ஆகிய இதே கிரியைகளும் இக் கௌணி பக்திக் கிரியைகளும் ஒன்றென யாம் மயங்குதல் கூடாது. ஆசை நெறியிற் செல்வார் இவற்றை இயற்றுவது தம் தீய செயல்களால் விளையும் தண்டனைக்கு அஞ்சியோ, தீவிரமான இந்திரிய போக இச்சையாலோ ஆகும். அன்னார் தமது வணக்கத்திற்குப் பதிலாக இந்திரிய உலகத்தில் யாதேனும் ஒன்றை விரும்புவார். பக்தி அத்தகைய பண்டமாற்றினால் வளர வொண்ணாது. அத்தகைய செயல்கள் ஆசைப் படும் பொருள்களை மட்டும் நமக்கு அளிக்கும் புண்ணியச் செயல்களேயாகும். இவை ஒருகாலும் நம்மைப் பரபக்திக்கோ முக்திக்கோ செலுத்துவனவாகா. ஐம்புல இன்பத்தின் புரையோடிய தன்மையினைக் கண்டறிந்து, துறவு நெறியிற் செல்ல விருப்பங் கொண்டவரே யோகங்களில் எதையேனும் முடிவான சாதனமாகப் பின்பற்றத் தகுதி யுடையவராவார். ஆதலின், ஆரம்பத்திலிருந்தே பக்தியோகி ஏதேனும் ஓர் உலகப் பொருளைக் குறித்துப் பகவானிடம் பிரார்த்தித்தலை ஒழித்து விடவேண்டும். பகவான்மீது பயனைக் கருதாது பக்தியை வளர்க்கச் சிரத்தையோடு முயல வேண்டும்.

அவன் ஞானத்தைத் தனக்கு வழங்கும் திறனுடைய ஒரு முக்தரான ஞானியை வழிகாட்டியாகத் தேர்ந்து, அவரது சொல்படி ஒழுக வேண்டும். அந்த குரு அவனுக்கு இயைந்த ஓர் 'இஷ்ட'த்தை—அதாவது, அவனுக்கு நன்கு பொருந்தும் இறைவனது வடிவத்தை—தெரிந்தெடுப்பார். அத்தகைய வடிவம் ஒவ்வொன்றுக்கும் தக்கவாறு ஒரு மந்திரம் (ஒலி வடிவம்) உள்ளது. அவன் ஒவ்வொரு நாளும் பக்தியோடு ஜெபிக்க வேண்டிய ஏற்ற மந்திரத்தை குரு அவனுக்கு அளிப்பார். அவன் தனது இஷ்ட தெய்வத்தை இன்னவாறு வழிபட வேண்டும் என்பதையும் குரு அவனுக்

குப் போதிப்பார். இவ்வாறு தனது ஞான வழிகாட்டியான குருவினிடமிருந்து பக்தியோகத்தின் ஆரம்பப் பாட முழுவதையும் கற்றுக்கொண்டு, அதன்படி நாடோறும் சிரத்தையோடும் பக்தியோடும் பழகி வரவேண்டும்.

'இஷ்ட நிஷ்டை'—அதாவது, ஒரு குறிப்பிட்ட இலக்ஷியத்தினிடத்து மட்டும் ஈடுபாடு—அவசியமாகும். இறைவனது வடிவம் ஒன்றையே ஒருவன் தனது 'இஷ்ட'மாக விடாதுபற்றி ஒழுகவேண்டும். ஸ்ரீராமசந்திரரின் பெரும் பக்தரான அனுமார் கூறியதாவது: 'ஸ்ரீ நாதே ஜானகி நாதே அபேத: பரமாத்மனி, ததாபி மம ஸர்வஸ்வ: ராம: கமலலோசன:—திருமகளின் நாதரும் ஜானகியின் நாதரும் பரமாத்மனிடத்து ஒன்றுவார்; எனினும் எனக்கு யாவும் ஆவார் தாமரைக் கண்ணரான ராமரே). இதுவே இஷ்ட நிஷ்டையாம். அவனவனுக்குரிய இஷ்ட தெய்வத்தினிடத்து இத்தகைய சலியாத பக்தியின்றி சாதகன் முன்னேற்றம் சிறிதும் அடையான்.

கௌணி பக்தியைப் பழகுதல் வாயிலாக மனம் முன்னினும் தூய்மை மிகுந்து, பகவானிடத்துப் பக்தி கொள்ளத் தலைப்படுகின்றது. பகவான்மீது எழும் அன்பை நாம் பழகியுள்ள துறைகளில் யாதேனும் ஒன்றின் வாயிலாகப் பெருகும்படி செய்யக்கூடுமாயின், அது மிக எளிதாகும். குழந்தைக்குப் பெற்றோர் மீதுள்ள அன்பையும், நன்றியார்ந்த பணியாளனுக்குத் தன் எஜமானன் மீதுள்ள அன்பையும் நாம் அறிவோம்; ஒரு மெய்யான நண்பனின் அன்பு பயனுற்றது என்பதையும் நாம் அறிவோம்; தாய்க்குக் குழந்தைகள் மீதுள்ள அன்பும், கற்புடைய மனைவிக்குத் தன் கணவன் மீதுள்ள அன்பும் நமக்குத் தெரிந்தவையேயாம். ஒருவர் மற்றொருவர்மீது அன்பு கொள்வதும் அன்பை வெளிப்படுத்துவதும் இம்மாதிரியான பற்பல உறவுமுறைகள் வாயிலாகவேதான். இக்காரணம்பற்றியே பக்தியோகம் இந்நிலை

யில் ஒருவனைத் தனது இஷ்ட தெய்வத்தின்மீது இம்முறைகளில் (பாவனைகளில்) யாதேனும் ஒன்றைக் கொள்ளுமாறு போதிக்கின்றது. ஒருவன் தனது இஷ்ட தெய்வத்தைத் தன் பெற்றோருள் ஒருவராகவோ எஜமானனாகவோ தோழனாகவோ குழந்தையாகவோ கணவனாகவோ கருதி, அவ்வாயிலாக ஒழுகவும் அன்பைப் பெருக்கவும் முயலலாம்.

சாஸ்திரங்கள் விதிக்கின்ற ஐந்து பாவனைகளாவன: சாந்த, தாஸ்ய, ஸக்கிய, வாத்ஸல்ய, மதுர பாவனைகள் என்பன. அவற்றிற்குள்ள வேறுபாடு தன்மையைப் பற்றியதாகும். சாந்தபாவனை ஒருவாறு அலக்ஷியமான அன்பு நிலையைக் குறிக்கின்றது; அதை அடுத்துவரும் பாவனைகள் முதிர்ச்சியில் ஒன்றுக்கு ஒன்று மேலாகும் நிலையில் வகுக்கப்பட்டுள்ளன. ஸக்கிய (தோழ) பாவனையில் உள்ள ஸமத்துவ உணர்ச்சி மிகமுதிர்ந்த அன்புநிலையைக் காட்டுகிறது. வாத்ஸல்ய பாவனையில் சாதகன் பகவானின் சக்தியையும் பெருமையையும் மறந்து, அவரைத் தனது குழந்தையாகக் கருதுகிறான். இதற்கு மாதிரியாவது யசோதைக்குக் கிருஷ்ணன் மீதிருந்த அன்பே; தான் ஊட்டினாலன்றிக் கிருஷ்ணன் பட்டினியாயிருப்பான் என்பது யசோதையின் நம்பிக்கை. அவள் கிருஷ்ணனை அழிவற்ற எல்லாம் வல்ல ஏக பரம்பொருளாக நினைப்பதை ஒரு பொருளாகக் கொள்ள மாட்டாள். உண்மையாகவே, வாத்ஸல்ய பாவனையால் அன்பு வெறிகொள்ளும் நிலைவரை முதிர்கின்றது. ஆயினும் முதிர்ச்சியின் அறுதிநிலை மதுர பாவனையில் அடையப்படுகிறது; இதிலே பக்தனும் பகவானும் பக்தியின் முதிர்ச்சியால் ஒன்றாகி விடுகின்றனர். இதற்குக் கிருஷ்ணன்மீது ராதை கொண்ட பக்தியே இலக்ஷியமாகும். இத்தகைய அன்பிற்கு இந்துமத வரலாற்று நூலிலே ஓர் உதாரணமாய்த் திகழ்பவர் மீராபாய் என்பார்.

இவ்வழியாகப் பண்படுத்தப்பட்ட பக்தி பரபக்தியாக முதிரும்போது, பேரின்பத்தின் உச்சநிலை எய்தப்படுகின்றது. உண்மையாகவே அப்போது சாதகன் அழகுக்கும் இன்பத்திற்கும் அன்பிற்கும் உள்ளீடாயுள்ள (உட்பொருளான) பகவானை அடைகிறுன். 'ரஸோவை ஸ:'—அவன் எல்லா இன்பத்திற்கும் ஸாரமாயிருப்பவன் (தைத்திரிய உபநிடதம், 2—7). பகவான் பரலோகத்தில் ஏதோ ஓரிடத்துப் பிறர் அணுகக் கூசும் மகிமையோடு வீற்றிருந்து, நல்லார்க்கும் பொல்லார்க்கும் முறையே வெகுமதியையும் தண்டனையையும் வழங்கி வருதலையே தொழிலாக வுடையரென்று இந்துக்கள் நினைப்பதில்லை. இந்துக்கள் உருவ நிலையிலுள்ள பகவானைப்பற்றிக் கொள்ளும் கருத்து அதற்கு முற்றிலும் வேறுபாடானது. இவரது பகவான் மிக அருகாயிருப்பதினும் மிகமிக அருகாயும், மிகப் பிரியமான ஒன்ருயும் இருப்பவர். ஈன்ற தாய்க்குத் தன்சேய் மீது பொங்கி வழியும் அன்பும் பகவானுக்குத் தமது அடியார்மீது எழும் அன்பு வெள்ளத்திற்கு ஈடாகாது. உலகிலே உளத்தை வசீகரிக்கும் எப்பொருளின் முகத்திலும் திகழும் அழகு பகவானது தெய்விக அழகின் மங்கிய பிரதி பிம்பமேயாகும். 'தஸ்ய பாஸா ஸர்வம் இதம் விபாதி' (கடஉபநிடதம், 2—1—15)—அவன் ஒளிர, ஏனைய யாவும் ஒளிர்கின்றன. பகவானது முன்னிலையிலே அச்சமோ நடுக்கமோ எழமாட்டாது. ஆனந்த பரவசத்தால் புளகமே உண்டாகும். அப்பேரின்பத்தின் முறுகுதலை என்னென்பது! பக்தர் முத்தியையும் வேண்டாது எப்போதும் அந்த ஆனந்தத்தையே நுகர விரும்புகின்றனர். உருக்கொண்ட பகவானது வரம்பிலா அழகையும் அளவிலா ஆனந்தத்தையும் நுகரப் பேரவாக் கொள்வதன்றி, நிர்க்குணப் பிரம்மத்தினிடத்து லயமடையவும் விழையார். ஆன்ருேர் கூறுமாறே, அன்ஞர் சருக்கரையைச் சுவைக்க ஆசைப்படுவதன்றி சருக்கரையேயாக ஆசை கொள்ளார்.

இத்தகைய நிலையில் பக்தன் தனது இஷ்ட தெய்வத்தைத் தன்னைச் சுற்றி எங்கும் காண்பதோடு, தனது உயிரின் உள்ளுக்குள்ளேயும் தரிசிக்கின்றான். அவனுக்கு உலகம் முழுவதும் அன்பிற்கும் வணக்கத்திற்கும் உரிய பொருளாகி விடுகின்றது. புலியினிடத்தும் பாம்பினிடத்தும் அவன் தனது அன்பிற்கினிய இறைவனையே பார்க்கின்றான். அத்தகைய அருள்பெற்ற ஆன்மாக்கள் செல்லுமிடமெங்கும் அன்பையும் தூய்மையையும் இன்பத்தையும் அலையலையாக வீசுகின்றனர்; தம்மை அடுப்பார் அனைவரிடத்தும் ஞான முன்னேற்றத்தை யடையத் தூண்டுகோலாகும் ஓர் ஊக்கத்தை ஊட்டுவார்.

## பக்தி யோகம் (தொடர்ச்சி)

### தாந்திரிக சாதனம்

தாந்திரிக சாதனம் எனப் பெயர் பெறும் ஒரு தனியான ஞான சாதன முறையும் வைணவத்தைப் போல அதே அளவு பக்தியோகத்தின் எல்லையுள் அடங்கி நிற்கின்றது.

இந்த முறையும் சம அளவிற்கு விரிந்ததாகி, ஞான முயற்சியின் முழுப் பிரதேசத்தையும் தன்னகத்தே கொண்டுள்ளது. ஞானயோகம் ராஜயோகம் கருமயோகம் எனும் மூன்றின் ஆச்சரியமான கலவை இது; ஞான வளர்ச்சிக்குரிய பல படிகளிலுமுள்ள மக்கட்கும் இது பொருத்தமாகும். ஜீவாத்மனும், பரமாத்மனும் ஒன்றே எனும் முடிவை ஆதாரமாகக் கொண்டு, இது பக்தனைத் தூலவடிவங்கள் கிரியைகள் வழியாகப் படிப்படியாக அந்த அறுதி உண்மையின் அனுபூதிக்கும், அதன் பயனாக விளையும் முக்திக்கும் நடத்திக்கொண்டு செல்கிறது.

தந்திர சாஸ்திரங்கள் அடியார்களில் வெவ்வேறு வகைகட்குத் தக்கபடி வெவ்வேறு ஞான சாதனங்களை விதித்

துள்ளன. அச் சாதனங்களிற் சில ஞான ஏணியின் மிகத் தாழ்ந்த படியிலுள்ளவர்க்கென அமைக்கப்பட்டுள்ளன. இம்மக்கள் தாமசிகர்; அதாவது, இயல்பாகவே மந்தமாயும் அறிவற்றவராயும் சோம்பராயும் இருப்பவர்; கிட்டத்தட்ட விலங்கு மட்டத்தில் இருப்பவர் (மிருகம் போன்றவர்). இவ் வகையினரை உயர்த்துவதற்காக விதிக்கப்பட்டுள்ள முறை பசு ஆசாரம் (விலங்கு போன்ற மனிதர்க்குரிய ஒழுக்கமுறை) எனப்படும். ஞான ஏணியின் நடுவில் இருப்பவராய் இராஜஸிகர்க்கென, அதாவது இயல்பாகவே சுறுசுறுப்பும் பேராசையும் உடையவர்க்கென, வேறொரு ஞான சாதன முறை விதிக்கப்பட்டுள்ளது. இம்முறை வீராசாரம் (வீரமுடைய ஆன்மாக்கட்குரிய ஒழுக்க முறை) எனப்படும்.

இவ் விருவகையினரும் தாந்திரிக சாதனங்களைப் பல முறையும் பழகுவது, சக்தியைப் பெறுதற் பொருட்டும், இம்மையிலோ மறுமையிலோ போகத்திலோ தமக்குள்ள ஆசையைத் தீர்த்துக்கொள்ளுதற் பொருட்டும். ஆதலின், அவர்கட்குத் தாந்திரிக சாதனம் பிரவிருத்தி மார்க்கம் (ஆசை நெறி) ஆகவே பயன்படுகிறது. உண்மையுரைப்பின் பிரவிருத்தி மார்க்கத்தைச் சார்ந்த தேவ யக்ஞத்திற்குப் பதிலாக இந்நாளிற் பெரும்பாலும் கையாளப்படுவது தாந்திரிக வழிபாடே. இராஜ யோகத்தைப் போன்று தாந்திரிக சாதனமும் சித்திகளை நாடுவார்க்கு அவற்றை அளிக்கின்றன. ஆனாலும், சித்திகளையும் ஐம்புல இன்பத்தையும் நாடுவோராய் இவர்கள் பின்பற்றும் தாந்திரிக சாதனம் 'பக்தியோகம்' என்பதின் கீழ் வராது; ஏனெனில் அது ஈசனிடத்துச் செலுத்தும் தூய தீவிர தன்னயமற்ற அன்பு வாயிலாகத் தெய்வத் தன்மையை அடையும் வழியே யாகும்.

இன்னுமொரு வகை மக்களும் உளர்; இவர்களை ஞான ஏணியின் உயர்ந்த படிக்கருகே இருப்பதாகக் கூறலாகும். இவர்கள் துறவுடையோர். இவர்கள் இயல்பாகவே சாத்

விகர்; அதாவது, அமைதியும் தூய்மையும் திருப்தியும் தெளிந்த காட்சியும் உடையவர். ஐம்புல இன்பத்தின்வறிய தன்மை இம்மக்கட்கு வெளிப்படையாயுள்ளது; ஆதலின் இவர்கள் பரம்பொருளை யுணர்ந்து பூரணமாதல் ஒன்றுக்கே அவாக் கொள்கின்றனர். இவ்வகையினர்க்குத் தந்திர நூல்கள் திவ்யாசாரம் (தெய்வத் தன்மை வாய்ந்தவர்க்குரிய ஒழுக்க முறை) என்னும் தனி முறையை விதிக்கின்றன. இம்முறையின் சிறப்பியல்பு யாதெனில், உலக சம்பந்தமான எதனையும் பெறுதற்காக இது பழகப்படுவதன்று. பக்தியினால் இறைவனை உணர்தற்பொருட்டே பழகுதற்குரியது என்பது. இக்காரணத்தால் இம்மாதிரியான தாந்திரிக சாதனம் பக்தி யோகத்தில் அடங்குகின்றது.

அறுபத்து நான்கு முக்கியமான தந்திர நூல்கள் உள்ளன. மூன்று வெவ்வேறு வகை அடியார்கட்குமென ஏற்படுத்தப்பட்ட நூற்றுக்கணக்கான தனித் தனிக் கிரியைகளையும் சடங்குகளையும் அவை விதிக்கின்றன. ஆயினும் இவையனைத்தின் ஊடேயும் அவற்றை ஒன்றாகப் பிணைக்கும் சில பொதுப் பண்புகள் காணப்படுகின்றன.

தந்திர நூல்கள் இறைவனின் சக்தி (தெய்விக ஆற்றல்) வடிவ வழிபாட்டை ஆதரிக்கின்றன. சக்தியைத் துர்க்கை சண்டி காளி தாரை புவனேச்வரி ஜகதாத்திரி போன்ற தேவி வடிவங்களில் யாதேனும் ஒன்றின் மூலமாகக் குறிப்பது வழக்கம். சக்தியை வழிபடுவோர் சாக்தர் எனப்படுவர், விஷ்ணுவை வணங்குவோர் வைஷ்ணவர் எனப்படுதல் போல. சாக்தர் தமது இஷ்ட தெய்வத்தைத் தேவியம்மையாக மதிப்பர்.

திவ்விய வடிவங்களில் யாதேனும் ஒன்றின் வாயிலாகக் கருதப்படும் தேவியம்மை உண்மையாகவே உலகத்தைப் படைத்தும் காத்தும் அழித்தும் வருபவள் ஆவாள். அவட்கு ஆதியுமில்லை அந்தமுமில்லை, அவள் நித்தியமானவள். இடம்

அவளை வரையறுக்காது. அவள் அகண்டமானவள், எங்கும் வியாபகமானவள். அவள் முழுதும் சைதன்யமானவள், ஆதலால் அவளை 'சைதன்யமயி' என அழைப்பார். படைப்பு அவளது லீலை, பிரளயமும் அவ்வாறே. இதனால் அவள் 'லீலாமயி' எனும் பெயர் பெறுவாள். அவளது திவ்விய சக்தியில் ஸாத்துவிகம் ராஜஸிகம் தாமஸிகம் என்னும் மூன்று வெவ்வேறு பகுதிகள் உள்ளன. இக்காரணத்தால் அவளைத் 'திரிகுணமயி' என்று சொல்லுவர். தாமஸிகப் பகுதி வாயிலாக நோக்கும்போது அவள் சடப்பொருளாகத் தோன்றுகிறாள்; ராஜஸிகப் பகுதி வழியாக நோக்கும்போது அவள் தூல சக்தியாகவும் பிராணனாகவும் தோன்றுகிறாள்; சட உலகிலும் எல்லாப் பிராணிகளின் தூல உடல்களிலும் எல்லாவித மாறுதல்களையும் உண்டாக்குகிறாள். அவளது ஸாத்விகப் பகுதி வாயிலாக நோக்கும்போது, பற்பல தொழில்களை இயற்றும் மனமாகத் தோன்றி, ஒவ்வொரு பிராணியிடத்தும் போக்தாவாகவும் கருத்தாவாகவும் திகழ்கிறாள். உலகம் எனப் பெயர் பெறும், சதா மாறிவரும் எல்லா ரூபங்களின் வழியாகவும தன்னை வெளிப்படுத்துகிறாள். உண்மையாகவே அவள் நித்தியமான மாறுதலற்ற பரம் பொருளாய நிராகார நிர்க்குண பிரம்மத்தினின்றும் எவ்வாறோ விடுவிக்கப்பட்ட மாற்றச் சக்தியாகிறாள்.

இதுவே சகுண பிரம்மத்தைப்பற்றி இந்துக்கள் கொள்ளும் கருத்தாகும்; அதனிடத்துப் பால் வேற்றுமை இல்லையென்பது வெளிப்படை. ஆயினும் ஸகுணப் பிரம்மம், பக்தன் தன்னை அணுகும் வழிக்கு ஏற்ப ஆண் வடிவையோ பெண் வடிவையோ கொள்கிறது. வைணவரும் சைவரும் ஸௌரரும் காணபத்தியரும் ஆண் வடிவை விரும்புவாராக, சாக்தரோ ஸகுணப் பிரம்மத்தைத் தமது தேவியம்மையாகக் கருதுவதில் இச்சையுடையராகின்றனர். இறைவனின் தாயான தன்மை பகவானுக்கும் பக்தனுக்கும் இடையே

ஒரு மிக இனிய தொடர்பை நிலைநாட்டுகிறது என்பதில் ஐயமில்லை. ஒரு குழந்தையைப் போன்று பக்தன் தனது தேவியம்மையின் தாயன்பிற்கும் பேணி வளர்க்கும் சிரத்தைக்கும் தன்னை ஒப்புவித்துவிடுகிறான்.

தாந்திரிகக் கிரியைகட்கு இன்னுமோர் இயல்பு உண்டு. அவை ஜீவாத்மனும் பரமாத்மனும் ஒன்று என்னும் உண்மையையும், (தெய்விகமான) சக்தி பரம் பொருளினிடமிருந்து கிளம்பிய தொன்றாகி, எல்லா நாம ரூபங்கள் வழியாகவும் தன்னை வெளிப்படுத்திக் கொண்டிருக்கும் உண்மையையும் ஒருவற்கு நினைப்பூட்டுகின்றன. தேவியை வழிபடு முன்பு, சாதகன் தனது ஆன்மா பரமாத்மாவோடு ஒன்றுபட்டுவிட்டதென்றும், படைப்பிலுள்ள யாவும் முற்றும் மறைந்து விட்டனவென்றும், சிறிது நேரம் தியானிக்கும்படி வேண்டப்படுகிறான். பின்னர் அந்த அருவப் பரம் பொருளினிடமிருந்து வழிபடுவோனாகிய தானும், அவன் வழிபட நினைக்கும் தேவியும் புதிதாக உண்டானதாக அவன் பாவனை செய்ய வேண்டும். தேவியின் களிமண் உருவொன்றிற்கும் அவன் உயிரை ஊட்டவேண்டும், பிராணப் பிரதிஷ்டை செய்ய வேண்டும்; தனது தெய்விக ஆன்மா அவ்வுருவோடு பொருந்துவதைக் குறிக்கும் ஒரு செயலால் அங்ஙனம் அவன் செய்கிறான். இதன்பின்பே உருவம் தேவியின் உயிருள்ள குறியாகக் கருதப்பட்டு, பூசனை செய்யும் முறையாகப் பல பொருள்கள் தேவிக்குச் சமர்ப்பிக்கப்படுகின்றன. (இனி வரும் 20-ம் அத்தியாத்தை நோக்கவும்).

தூல வடிவங்களைத் துணைக்கொண்டு நமது ஆன்மாவின் தெய்வத்தன்மை யென்னும் வேதாந்தப் பேருண்மையை மனத்தில் நாளடைவில் பதித்தற்குத் தந்திர நூல்கள் உதவி புரிகின்றன என்பதை இது தெளிவுபடுத்துகின்றது. முத்தியை அளிக்கும் அறுதியான அப்பேருண்மையை அறிவதற்கு வேண்டிய ஒருவகையான ஆராய்ச்சிக்களப் பயிற்சியோ குழந்தைப் படிப்போ அது என்னலாம். விவேகத்தாலும்

அருவத் தியானத்தாலும் மட்டும் ஞானயோகி அடைய முயல்வது எதுவோ, அதைத் தாந்திரிக சாதகன் தனது கிரியை முறையால் பெறப் பாடுபடுகிருன்.

தந்திர நூல்கள் அனைத்திற்கும் பொதுவான இன்னொரு பகுதியாவது, (ஹ்ரீம் க்ரீம் முதலிய) மந்திரங்கள் சிலவற்றைத் திரும்பத் திரும்ப ஜெபித்தலை அவை வற்புறுத்தி வருதலே. இவற்றில் ஒவ்வொன்றும் ஒரு குறிப்பிட்ட வடிவில் வெளிப்படும் ஒரு குறிப்பிட்ட தெய்வப் பகுதியைக் குறிப்பதாகின்றது. ஒவ்வொரு வடிவிலும் தெய்வம் உலகைப் படைத்து அளித்து அழிப்பதாகக் கருதப்படுகின்றது. ஆயினும் பற்பல வடிவங்கள் வாயிலாக ஒரே தெய்வம் வெவ்வேறு சிறப்புற்ற குணத் தொகுதிகளோடு கூடியதுபோல வெவ்வேறு தெய்விக வடிவங்களாகத் தோன்றுகிறது. உதாரணமாக; காளி, தாரா, சோடசி, துர்க்கா, ஜகதாத்திரி—இவையொவ்வொன்றுக்கும் வெவ்வேறு தனி வடிவங்களும் தனியான குணத் தொகுதிகளும் உண்டு; அவ்வொவ்வொன்றிற்கும் ஏற்றவாறு ஒரு தனிப்பெயரும் ஒரு தனி மந்திரமும் உள்ளன. இம்மந்திரத்தைத் தந்திர நூல்களின் போதனைக்கிணங்க ஓதுவதால், ஒருவனது மனம் தூய்மையடைகின்றது. அவனது இஷ்ட தெய்வத்தை மேலும் மேலும் அணுகுகின்றது. இவ்வாறு ஜெபித்தலோடு மந்திரத் தியானமும் உடன் சேர்வது வழக்கம்; அதனுல் பயன் மிகுகின்றது.

தாந்திரிகக் கிரியைகட்குரிய இன்னொரு பொதுவியல்பும் உள்ளது; இவ்விஷயத்தில் தந்திரங்களுக்கும் ஞானயோகத்திற்கும் பெரும் வேறுபாடு உண்டு. பின்னது தன்னைப் பின்பற்றுவோரை மோகப் பொருள்களிலிருந்து விலகும்படி வேண்டுவதாக, தந்திரங்களோ தம்மைப் பின்பற்றுவோரை அவற்றைத் துணிவோடு எதிர்த்து வெல்லும்படிப் போதிக்கின்றன. சில தாந்திரிகக் கிரியைகளைப் பின்பற்றுவார்க்கு

7

மனதை மயக்கும் சிற்றின்பப் பொருள்களோடு சம்பந்தப் படுதலும், அதேசமயம் மனத்தை அப்பொருள்களினின்றும் தூர இழுத்து தன் இஷ்ட தெய்வத் தியானத்தில் நிலைநாட்டு தலும் அவசியமாகின்றன. இம்முறையினுல் விஷயக் கவர்ச் சியை ஈசன் மீதுள்ள பக்தியாக உயர்த்திப் புனிதமாக்கும் அவசியம் அவனுக்கு விதிக்கப்படுகின்றது. உதாரணமாக, மதுவோடோ மாதினேடோ சம்பந்தம் பெறுதல் சில தாந்திரி கக் கிரியைகட்கு இயல்பாய் அமைகிறது. ஆனுல் மது வெறிக் காகவும், மாது போகத்திற்காகவும் ஏற்பட்டதாகக் கருதப் படுவதில்லை. சாதகன், இம்மயக்கப் பொருள்களால் தன் மனம் பலமாக இழுக்கப்படுதலைத் தடுத்து, அம்மனத்தை அவனது இஷ்ட தெய்வத்தின்மீது நிலை நாட்டடல் வேண்டும். இது துணிவுள்ள முறையே என்பதில் ஐயமில்லை; ஆனுல் இதனை வெற்றியுறப் பழகுவார் ஒரே முயற்சியால் உட லுணர்ச்சியை வென்று விடுகின்றனர்.

ஆயினும் இச்சிறப்பியல்பே காரணமாகத் தந்திர நூல் கள் வசைமொழிக்கு ஆளாயுள்ளன. ஆனுல் அந்நூல்கள் கைக்கொண்ட முறை கண்டனத்திற்கு உரியதன்று. ஒருவன் இறைவனை உணரும்போதே முத்தியெனும் இலக்ஷியம் அடையப்படுகிறது என்பதும், மனது முற்றும் இறைவனி டம் குவியும்போது தான் இந்த உணர்வு பெறப்படுகின்றது என்பதும் இந்துக்கள் நம்புகின்ற கொள்கைகளேயாம். இவையே யோகங்கட்கெல்லாம் ஆதாரமானவை; இம்முடி வைக் குறித்தே தந்திர நூல்கள் தமக்கெனச் சிறப்பாக அமைந்துள்ள ஒரு முறையை எடுத்துக் காட்டுகின்றன.

இச்சிறப்பு முறையாவது: நமது மனங்களைப் பிற நெறிகளினின்றும் இழுத்து, ஒரு நிலைப்படுத்தக் கூடிய சில உணர்ச்சிகள் பொங்கியெழுந்து மனத்தை அடக்கியாள வல்லனவாய், எல்லாரிடத்தும் அமைந்தனவாய் உள்ளன வன்ரே? அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளலே முறை

யாம். உதாரணமாக, பலமான காம உணர்ச்சியோ மறு கணம் மரிக்கும் பயமோ இவ்வாறு செய்யவல்லதாகும். ஆதலின், அனைத்தையும் மீறியெழும் உணர்ச்சிகளாகிய இவ்விரண்டில் ஒன்றுக்குச் சாதகனை உட்படுத்துவது என்றால், அவனுடைய கருத்துகளை ஒருமுனைப்படுத்தல் என்பதே பொருளாகும். பொங்கியெழும் ஓர் உணர்ச்சி வாயிலாக, இந்திரியத்திற்கு விளங்கும் ஒரு பொருளின் மீது மனம் இவ்வாறு குவிந்து நிற்கும்படிச் செய்யப்படுகிறது. அதன் பின், அந்நெறியிலே இன்னும் முன்செல்ல இடங்கொடாது. தந்திர நூல்கள் முன்பே ஒரு முனைப்படுத்தப்பட்ட உள்ளத்தைக் கடவுளின்மீது திருப்பும்படி போதிக்கின்றன. இம்முறையினாலே செயல் ஆற்றுதற்கு எளிதாகின்றது. வானத்துள்ள பொருள்களை ஆராய உதவும் தொலையாடியை (தூர திருஷ்டிக் கண்ணாடியைத்)த்!தரைமீது தொலையிலுள்ள ஒரு பொருளைச் சோதிப்பதற்காக ஒருவாறு சுமாராகச் சரிப்படுத்தி அமைத்தலைப் போன்றதாகும் இது.

இக்காரணம்பற்றியே சில தாந்திரிகக் கிரியைகளில் சாதகர் முதலிலே மதுவின் சம்பந்தத்தாலோ மாதின் சம்பந்தத்தாலோ காம உணர்ச்சியை முறுகச் செய்தபின், கடவுள் தியானம் செய்யுமாறு வேண்டப்படுகின்றனர். வேறு சில கிரியைகளில், வழிபடுவோர் பேரச்சத்தை விளைக்கும் சூழ்நிலைகட்கு இடையில் அமர்ந்திருக்கும் போதே தம் உள்ளங்களைக் கடவுள்மீது நிலைநிறுத்தும்படி வேண்டப்படுகின்றனர்; இதுவும் அக்காரணம்பற்றியே யாம். உதாரணமாக, ஒரு மாசத்தில் மிக இருட்டான இரவன்று தனிமையான மயானத்திலே ஒரு பிணத்தின்மீது அமரும்படி அவர்கள் வேண்டப்படுகின்றனர்.

தந்திர நூல்களிற் போதிக்கப்படும் இத்தகைய உபாயம் குறிக்கோளை (இலக்ஷியத்தை) நோக்கி விரைவாக ஒருவரைச் செலுத்தும் தன்மையது என்பதைப்பற்றி ஐயமில்லை.

ஆயினும் மிக விழிப்பாயிராதவர்க்கு இது ஆபத்து நிறைந்த தேயாம். சிறப்பாகக் கூறின், இந்நெறியைப் பின்பற்ற நேரும் ஒரு துறவிக்கு மிக்க விழிப்போடிருத்தல் கட்டாய மாகும். சிற்றின்ப வாஞ்சையெனும் பலவீனம் ஒரு சிறிதே னும் அவனிடம் இருப்பின், துணிவுகரமான கிரியைகட்குரிய செயல்களாலே மூண்டெழும் காமம் அச்சம் என்பவற்றிற்கு எளிதே அவன் வசமாவான். அப்போது கடவுட்காட்சி பெறுவதற்குரிய முயற்சிகள் யாவும் தடுக்க வொண்ணுவாறு உடலுக்கும் மனத்திற்கும் நாசத்தை விளைப்பனவாகும்.

பலர் தாந்திரிக சாதனங்களினுலே ஆனந்தப்பேற்றை அடைந்துள்ளனர். இராமப் பிரசாதர் வாமக்ஷேபர் எனும் இருவரின் பெயர்களும் வங்காள முழுதும் நன்கறிந்தவை யாம். நமது காலத்திலே ஸ்ரீராமகிருஷ்ணர், இந்து சாஸ் திரங்களின் பிரிவுகளில் ஒன்ருன தந்திர நூல்கள் விதிக்கும் கிரியைகளையும் முறைகளையும் பின்பற்றித் தமது சொந்த அனுபூதியால், அந்நூல்கள் உண்மையானவை என்பதை மெய்ப்பித்தார்.

**நிராகார உபாசனை:**

உருவமற்ற சகுணப் பிரம்ம வழிபாட்டையும் இந்து மதம் விதிக்கின்றது. ஆனுல் அறிவாற்றல் வாய்ந்தவர்களிற் பலர்க்கு உருவக் கடவுள் வழிபாடு சுவையுள்ளதாகத் தோன்றவில்லை.

ஆயினும், ஞான சாதன வாழ்க்கையினின்றும் உருவங் களைக் குறைகூறி விலக்கிவிடுமுன் மிக விழிப்பாயிருத்தல் அவசியம். வெளிப்பார்வைக்குத் தோன்றுவதுபோல அது உண்மையில் அவ்வளவு எளிதான காரியமன்று. மலையனைய அறிவு வாய்ந்த ஒரு மனிதனும் ஆராய்ந்து பார்க்குங்கால், ஞானப் பயிற்சிப் பள்ளியில் ஒரு மதலையளவேயாகலாம். அவனது நிலைக்குப் பாலர் வகுப்பிற்குரிய ஏதோ ஒரு பயிற்சியே வேண்டியதாகலாம்.

மேலும், ஞான விஷயங்களைப்பற்றி நமது அறிவு கூறும் முடிவுகளை ஆபத்துக்கு இடமற்ற ஒரு வழிகாட்டியாகக் கொள்ளுதலும் ஒண்ணாது. எல்லையற்ற பரம்பொருளிற்கு எல்லையற்ற வடிவம் இருத்தல் இயலாது என்று நமது அறிவு வற்புறுத்திக் கூறலாம். பரப்பிரம்மம் உருவமற்றது (நிராகாரம்) என்பதை இந்து மதமும் ஒப்புக்கொள்ளலாம். அது அவ்வளவில் நில்லாது முன்சென்று, பரம்பொருளுக்குக் குணமில்லை யென்றும் கருதுகிறது. ஏனெனில், நன்மை-தீமை, அன்பு-கொடுமை, கடுமை-மென்மை போன்ற, ஒன்றோடொன்று முரண்பட்ட இரட்டைக் குணங்கள் பலவும் உதிப்பது அந்த ஒரே பகுத்தற்கரிய மெய்ப் பொருளினிடமிருந்தன்றோ? அனைத்தையும் கடந்த பிரம்மன் ஒருவகையான குணங்களின் தொகுதியால் மட்டும் கட்டுண்டிருப்பதும், ஏனைய குணங்களை விலக்கி வைப்பதும் எவ்வாறு பொருந்தும்? ஆயினும் உருவமும் குணங்களும் அற்ற இந்தப் பிரம்மனே படைப்புக்கு மூலம் என்ற உண்மையை இந்துமதம் போதிக்கின்றது. (பிரம். சூ. 1—1, 2.) எவ்வாறோ இந்த சாஸ்வதமான அழிவற்ற பிரம்மன் ஸகுணப் பிரம்மமாகிய ஈசுவரராகின்றது. இப்பிரபஞ்சமாகவும், அதனை ஆளுபவராகவும் தோன்றுகிறது எனல் அதனினும் பொருத்தமாகிறது. இது அவருடைய மாயை.

இப்போது ஒன்றைச் சிந்திப்போம். அறிதற்கரிய மாயையினால் தன்னை இப்பிரபஞ்சத்துள்ள நாம ரூபங்கள் அனைத்தின் வாயிலாகவும் வெளிப்படுத்த வல்ல நிர்க்குணப் பிரம்மன் எந்தத் தெய்விக வடிவ உடையிலும் நன்கு தோன்றக் கூடும் அன்றோ? அதன் ஆக்கும் வல்லமைக்கு வரையறை கூறுவார் யாரே? இவ்விஷயத்திலே ஒரு முடிவான தீர்ப்பையளித்தற்கு நமது அறிவு மிக அற்பமான ஒரு பொருளேயாகும்.

இன்னும், எல்லையற்ற பரம்பொருளை நமது தெய்விகத் தந்தையென எண்ணி, நமது பிரார்த்தனைகட்கு அவர் செவி சாய்க்கிறார் என்றும், நீதியை வழங்கியும் அருள்பாலித்தும் வருகிறார் என்றும் கருதுவதும் எவ்வாறு? அதீதமான பரம் பொருளை அங்ஙனம் குறுக்கி யொடுக்குதலை நமது அறிவு எவ்வாறு நியாயமெனக் கருதுதல் கூடும்? அதீதப் பரம் பொருள் உருவத்தாலும் குணங்களாலும் வரையறுக்க ஒண்ணாதது. அது மனிதனது மன வாக்குகட்கு எட்டாத அனைத்தையும் கடந்த பரம்பொருள் (தைத்தி. உப. 2—9, 1.) அத்தகைய பிரம்மனை யாரால் வணங்க இயலும்? ஆயினும், நமது உள்ளத்தைக் கடவுள் முகமாகத் திருப்ப, குணத் தொகுதியொன்றின் வாயிலாக நோக்கி அவரைக் கருத்தில் அமைக்கவும், அவரை இரக்க முடையவர் என்றும் பிறவும் அழைக்கவும் முயல்கின்றோம். இதனால் தெய்வத் தன்மையை நாம் அணுகுதற்கு வசதி வாய்க்கின்றது. நமது ஞான சாதன வாழ்க்கைக்காக இவ்வளவு வசதியை நம்மால் அளிக்க இயலுமாயின், அதே காரணம்பற்றி, இறைவனுக்கு விதிக்கப்பட்டுள்ள உருவங்களில் யாதேனும் ஒன்றின் வாயிலாக இறைவனைத் தியானித்தலில் யாதொரு குற்றமுமில்லை. அம்மட்டோ? மனத்தை இறைவன்மீது நிலைநாட்டுதற்கு இது ஓர் எளிய வழியுமாகலாம்.

உண்மையாதெனில், நமது உள்ளத்தின் அமைப்பைக் கவனிப்போமாயின், சூக்குமமான ஒன்றைப் பற்றுதல் அதற்கு இயலாது. மனம் பற்றி நிற்றற்கு ஏதேனும் ஒரு தூலப் பொருள் அதற்கு வேண்டியதாகும். இக்காரணம் பற்றியே, இறைவனுக்கு வடிவங்களைக் கற்பித்தலைக் கண்டிப்பார்க்கும் தமது ஞான வாழ்க்கையில் உருவங்களை முற்றும் ஒதுக்கி விடுதல் இயலாததே. தெய்விகத் தந்தை யெனும் கருத்தும், கடவுளை ‘அவன்’ என்றோ ‘அவள்’ என்றோ சுட்டிக் கூறுதலும், நித்திய உலகில் தேவனதோ தேவியினதோ உறைவிடத்தைப் பற்றிய வருணனையும்,— இவையாவும், மற்றும் நாம் இறைவனை வழிபடும் இடங்களின் அமைப்பும், பூசைக் கிரியைகளைப் பற்றிய எல்லா

விவரங்களும் தூல வடிவங்களையே முழுதும் பொறுத்து நிற்பனவாகின்றன.

குறிகள் (பிரதிகைகள்) வாயிலாகவும் உருவங்கள் (பிரதிமைகள்) வாயிலாகவும் இறைவனை வழிபடும் முறையை நீக்கிவிடுமுன் முற்கூறிய இவையனைத்தையும் நன்கு சிந்தித்து உள்ளத் தராசில் இட்டு நிறுத்து மதிப்பிட வேண்டும். வெறும் அறிவுக்கு மதிப்புக் காட்டுதலால் தவறுன வழக்குக்கு இடந்தர நேரும், உலகாயதக் கொள்கையில் ஒருவேளை முடிவடையலாம். தமது ஞான சாதனத்தின் மாட்சியால், குறிகளாலும் உருவங்களாலும் பெறக்கூடிய துணைகளின் அவசியத்தைத் தாண்டியவர்கள் மட்டுமே ஸகுண நிராகார உபாசனையைப் பின்பற்றக்கூடும்.

அத்தகைய அன்பர்க்கு இறைவனது எங்கும் நிறைந்துள்ள சாந்நித்தியத்தைப்பற்றித் தியானிக்கும்படி போதனை வழங்கப்படுகிறது. சில தகுதியான பாவனைகளை நம் சாஸ்திரங்கள் எடுத்துக் கூறியுள்ளன; அவை வாயிலாக அம்மாதிரியான தியானம் மிக எளிதாகும். எல்லாத் திசைகளிலும் நீராற் சூழப்பட்டுள்ள கடல்மீனாக ஒருவன் தன்னைக் கருதிப் பின் நீருக்குப் பதிலாக இறைவனைச் சிந்திக்கலாம். ஒரு வெறுங்கலத்தை வாயுவோ ஆகாசமோ எங்கும் நிறைத்துச் சூழ்ந்திருப்பதுபோல, ஒருவன் தன்னை இறைவன் சூழ்ந்து நிறைப்பதாகத் தியானிக்கலாம். அம்மாதிரி அன்பர்கட்கும், இந்து சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டுள்ள பொருத்தமான தோத்திரங்களும் பிரார்த்தனைகளும் வழிபடு முறைகளும் உள்ளன. இந்நெறியைத் தெரிந்தெடுத்தற்கு உண்மையாகவே தகுதி வாய்ந்தவர் இறைவன்மீது மனப்பூர்வமாகப் பக்தி பூண்டு ஞான சாதனத்தைத் தொடர்ந்து பழகி வருவாராயின் வேறெந்த பக்தி யோகியைப் போன்றும் அவர்களும் கோரிய இலக்ஷியத்தை அடைவது உறுதியே.

இந்துக்களின் ஞான வரலாற்றினை ஆராய்வார்க்கு ஓர் உண்மை தென்படும்; அது யாதெனில், பக்தியோக நெறியைச் சார்ந்த ஒவ்வொரு மதப்பிரிவிலிருந்தும் எண்ணிறந்த மெய்யுணர்ந்தோர் (ஸித்த மஹா புருஷர்கள்) அம்மதத்திலே தோன்றியுள்ளார் என்பதே.

## 13
## கருமயோகம்

ஸ்ரீ கிருஷ்ண பகவான் குருக்ஷேத்திரப் படுகளத்திலே கௌரவ—பாண்டவப் பெரும்போர் தொடங்குமுன் இரதத்தை யோட்டி, எதிர்த்து நிற்கும் இரு திறத்துச் சேனைகளையும் தலைசிறந்த பாண்டவ வீரனான அருச்சுனன் பார்வையிடும் பொருட்டு, அவைகட்கு நடுவே நிறுத்தினர். இரதத்தில் அமர்ந்தவாறே அருச்சுனன் சுற்றி நோக்க, தன் முன் தன் உற்ருர் உறவினரே இருபக்கங்களிலும் அணிவகுத்த நிலையில், உயிர்க்கு ஆபத்தை விளைக்கும் போர்புரிய முனைந்து நிற்பதைக் கண்டான்.

இக்காட்சி அவனது உள்ளத்தில் பேரிரக்கத்தை ஊட்டுவதாயிற்று. தனக்குக் கிட்டிய உறவினர் பிரியமானவர் மதித்தற்குரியோர் ஆகியவர்களைப் போரிலே கொல்லுதல் என்னும் நினைவே அவனைத் திகிலடையச் செய்தது. அத்தகைய மாபாவச் செயலிலே அவன் எவ்வாறு தலையிடக்கூடும்? பேராசையாலும் பொருமையாலும் குருடான எதிர்த்திறத்தார் அக்காரியத்தை நோக்கிப் பாயலாம். ஆயினும் அம்மாதிரியான மிருகச் செயலுக்கும் அவனுக்கும் யாதொரு சம்பந்தமும் இருத்தல் ஒண்ணுது என்பது திண்ணம். வெற்றிக்காயினும், இழந்த நாட்டை மீண்டும் கைப்பற்றுதற்காயினும், அன்றித் துறக்கத்தை ஆளும் பேற்றுக்கேயாயினும் மயங்கி, அதனை இயற்ற அவனது மனம் இடங்கொடாது. அதுபோன்ற இழிவான ஒரு செயலிற்

கலந்து கொள்ளும்படி அவ்வளவு தாழ்ந்த நிலைக்கு அவனது உள்ளத்தை இழுக்க மண்ணகத்தும் விண்ணகத்தும் ஏதும் இருக்க இயலாது. தன் உறவினரோடு போராடும் எண்ணத்தை அவனது உடலும் உள்ளமும் பொருது எதிர்ப்பன வாயின. அத்தகைய நினைவுகளால் அருச்சுனன் முற்றிலும் நிலை குலைந்தனனாதலின், அவன் போர்புரிய மறுத்து, தனது சாரதியான பகவானிடம் திருப்பியோட்டுமாறு வேண்டினான்.

ஆயினும் ஸ்ரீ கிருஷ்ணர் அவனது விருப்பப்படியே நடக்க அனுமதிக்கவில்லை. அதற்குமாறாக அவர் அருச்சுனனை மனமெலிவென்னும் மாயவலைக்குட் சிக்கிக் கொண்டதற்காகக் குற்றஞ் சாட்டினார். அருச்சுனன் மோகத்துக்கு உள்ளானதை அவர் எடுத்துக் காட்டினார். வெறும் உணர்ச்சிப் பெருக்கை ஞானமெனக் கருதும் குழப்பத்திற்கு அவன் ஆளாயிருந்தான். பண்பட்ட நெஞ்சுடைய ஆரியனான அவனது அறிவுக்கு இதனினும் மேன்மையுடையது புலப்பட்டிருத்தல் வேண்டும். அவனது நடத்தை அவனது தகுதிக்கு ஒவ்வாதது. பெரு வீரனெனும் அவனது புகழைக் கறைப்படுத்துவதோடு, அவனது சுவர்க்கப் பேற்றிற்கும் அது தடையாகின்றது. அது அறப்போராதலின் க்ஷத்திரியனான அவனுக்கு அதிற்புகுதல் கடமையென்பது தேற்றம். அவனது மதமும் அதனை வேண்டியதாகக் கருதும். சாஸ்திரங்கள் க்ஷத்திரியனுக்கு விதித்துள்ள கடமையை அவன் இயற்றியாதல் வேண்டும். அதனைக் கைவிட்டு, அந்தணரைப் போன்று கானகம் சென்று ஒதுங்குதல் அவனுக்கு ஏற்றதன்று.

இதைக் கேட்டதும் அருச்சுனனது குழப்பம் முன்னினும் முதிர்ந்தது. அறமல்லாத கொடுஞ் செயலெனத் தெற்றென விளங்கும் ஒன்றைச் செய்ய அவனது மனம் இசையவில்லை. இம்மையிலோ மறுமையிலோ எதனையும் தான் நாடவில்லையென்று அவன் ஸ்ரீ கிருஷ்ணரிடம் தெளிவாகக்

கூறினான். புகழிலோ சுவர்க்கப் பேற்றிலோ அவன் மயங்க வில்லை யென்றான். க்ஷத்திரிய தருமத்தைப் பின்பற்றுவதனால் அவன் பெறக்கூடியவை இவையே. அத்தகைய அற்பப் பொருள்களில் அவனுக்கு ஆசையில்லை. அவன் விரும்பியது (சிரேயஸ் என்னும்) சிறப்பே, பூரணமே. தன் பிரிய உறவினரையும் மதித்தற்குரிய குருமாரையும் கொலை செய்தல் வாழ்க்கைக்குரிய ஞான நோக்கத்திற்குப் பொருத்தமாகக் கூடுமா? அத்தகைய தீச்செயல் ஞான முன்னேற்றத்திற்கு முரண்பாடானதன்றோ? இதுவே அவனது உள்ளத்து எழுந்த ஐயவினா. இதற்குத் தக்க விடை காணினல்லால் போர்புரிதற்குரிய மன நிலையை உண்டாக்கிக் கொள்ள இயலாது. இது பற்றியே அவன், செய்தற்குரியது இன்னதென அறியாது திகைக்கும் நிலையினின்றும் தன்னை விடுவிக்குமாறு தன் தோழரும் சாரதியும் ஆனபகவான் ஸ்ரீ கிருஷ்ணரிடம் நெஞ்சார வேண்டினான்.

இந்துக்களுடைய சாஸ்திரங்கள் அனைத்தினும் மிகுதியாக விரும்பப்படும் ஸ்ரீமத் பகவக் கீதை இக்காட்சியோடு தொடங்குகிறது. வேதகால இருடியர் கண்டுபிடித்துள்ள ஞானப் பேருண்மைகளைப்பற்றிய சிறந்ததொரு சம்பாஷணை வாயிலாக அருச்சுனனது ஐயத்தை ஸ்ரீ கிருஷ்ணர் தீர்க்கும் வகையைப் பின்னர் எடுத்துரைக்கிறது.

இப்போதனையிலே மிகத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளதொன்று யாதெனில், ஓர் இல்லறத்தானும் நிவிருத்தி மார்க்கமெனும் இறுதி நெறியைப் பின்பற்றலாம் என்பதும், அவ்வாறு செய்ய அவன் இல்லத்தைத் துறக்க வேண்டாம் என்பதுமே. உலக வாழ்க்கைக்கு மத்தியிலே இருந்து, தனக்கு விதித்துள்ள கடமைகளைக் கவனித்துக் கொண்டே பூரணத் தன்மையும் சிறப்புமாய அறுதி நிலையை நோக்கி நேராக முன் செல்லக்கூடும். எவ்வளவு அருவருப்பாயிருப்பினும் எக்கடமையும் ஞான முன்னேற்ற நெறியில் இடையூறு

காது. ஒருவன் செய்யவேண்டிய காரியத்தின் இயல்பு ஒரு பொருளன்று, அவனது மனநிலையே கருதத் தக்கது. உலகிலே வாழ்ந்து கருமங்களை இயற்றும் முறையொன்றினால் ஒருவன் தனது மனதை முற்றும் தூய்மைப் படுத்தவும் மிக வுயர்ந்த ஞானப்பேற்றை எய்தவும் ஏது உண்டாகும்.

இம்முறையே கருமயோகம் எனப்படுவது. கீதையிலே வரையப்பட்டுள்ள ஸ்ரீ கிருஷ்ணரது சிறப்பார்ந்த போதனையின் நடுநாயகமாய் மிளிர்வது இதுவே. அவர் எடுத்துக் காட்டுகிறபடி, இந்த யோகம் பண்டைய ஞானியரால் அறியப்பட்டதொன்றேயாம். ஆயினும் நெடுங்காலப் போக்கிலே மக்கள் அதன் பயனை மறந்தொழிந்தனர். இதுவும் முற்றிலும் இயற்கையானதே. எவ்வாறெனில் உலகவாழ்விற்கும் ஞான வாழ்விற்கும் இடையிலுள்ள தொலையைக் கடந்து செல்ல உதவும் பாலம்போன்ற ஒரு பேருண்மையை மக்கள் மறப்பது இயல்பே எனினும், வெகுகாலம் மறதியிற் கழிந்த பின், ஸ்ரீ கிருஷ்ணர் இந்த யோகத்தை முத்திக்குரிய தனி நெறியாக மீண்டும் நிலைநாட்டினர்.

முத்தியடைதற்குரிய ஏனைய எல்லா நெறிகளையும் மதித்தும், ஞானயோகம் பக்தியோகம் போன்ற மிக முக்கியமானவற்றை விவரித்தும் வரும்போதே ஸ்ரீ கிருஷ்ணர் கருமயோகத்தைச் சிறப்பாக வற்புறுத்தினர். அந்த யோகம் குறிப்பதையெல்லாம் விவரமாகச் சித்திரித்து, அது யுக்திக்குப் பொருத்தமாயிருக்குமாற்றைத் தெளிவு படுத்தினர். காரணம் யாதெனின், இதுவொன்றே அருச்சுனனது சங்கடத்தைத் தீர்க்கக் கூடியதாகும். உறவினரைக் கொல்லுதலாகிய கடமை வெறுக்கத்தக்கதாயினும், அவன் அதை விலக்க விரும்பினன் எனினும், அதையும் ஒரு கருமயோகி தீவிரமான, பயன்தரவல்ல ஞான சாதனமாக மாற்றிவிடக் கூடும்.

மெய்யாகவே, கருமயோகம் என்பது ஓர் உலகியற் (இலௌகிக்) கடமையையும் வழிபாடாக மாற்றவல்ல ஓர் உபாயமாகும். (யோக: கர்மஸு கௌசலம்—யோக முறையே கருமத்தைத் திறமையோடு செய்யும் முறையாகும் —கீதை 2-50). ஒரு கருமம் இம்மையிலோ மறுபிறவி களிலோ துன்பத்தையோ இன்பத்தையோ நிச்சயமான பல னைக அளிப்பது வழக்கம். ஆக, நாம் செய்யும் ஒவ்வொரு கருமமும் நம்மைப் பிணிக்கும் ஸம்ஸாரம் (பிறவித் தொடர்) என்னும் சங்கிலிக்கு ஒரு வளையத்தைக் கூட்டுகிறது. இதுவே கருமமென்னும் மாறுத நியதியாம்; சாதாரணமாக இதனின்றும் நாம் தப்புதல் அரிதாகும். உரிய பலனை அளித் தல் கருமத்தின் இன்றியமையாத இயல்பாகும். ஆயினும் கருமயோகம் என்னும் உபாயத்தால் இந்த இன்றியமையா இயல்பையும் துடைத்து விடலாகும். கருமம் பயனை யீன இயலாத நிலையை அடைகிறது. யோக முறையாற் செய்யப் படும் கருமம் நம்மைப் பிணிக்கும் சங்கிலிக்கு ஒரு வளையத் தைக் கூட்டுவதற்குப் பதிலாக, நமது முத்திக்கு வழியை உண்டாக்குகிறது. அப்போது கருமம் சிறப்பாக ஞான சாதனமாக மாறுகிறது.

இத்தகைய அற்புதத்தை நிகழ்த்தவல்ல யோகம் என் பது யாது என்று வினவலாம்? எந்நிலையிலும் உள்ளத்தை ஒரே தன்மையதாய் வைத்திருத்தலாகிய சமத்துவ நிலையே யோகம் என்று கீதை அதற்கு இலக்கணம் கூறுகின்றது. (சமத்வம் யோக உச்யதே—சமத்துவமே யோகம் எனப்படும் —கீதை 2-48). கருமத்தை இயற்றும்போது ஒருவனது உள்ளம் அதன் பயனையடையும் விருப்பத்தால் அலைவுறாதி ருத்தல் வேண்டும் என்பதை இந்த யோகம் விதிக்கிறது. கடமைபற்றியே கடமையை இயற்றல் என்பது கோட்பாடு. பயன் எதுவாயினும், இலாபமோ, நஷ்டமோ, வெற்றியோ தோல்வியோ விளையினும் (லாபாலாபௌ ஜெயாஜெயௌ —கீதை 2-38) இரண்டையும் சம நோக்கோடு ஏற்றுக்

கொள்ளல் வேண்டும். மனத்தின் இத்தகைய சமநிலையே யோகம் எனப்படும். அத்தகைய மனச்சமநிலையோடு ஒருவன் தன் கடமைகளனைத்தையும் இயற்றும்போது, அவன் கருமயோகி எனப்படுவான்.

இது அறிவுக்குப் பொருத்தமாகும் தன்மையை ஆராய்வோம். வைதிக (இந்து) மதத்தின் அடிப்படைக் கருத்தாவது, அனைத்தும் இறைவனிடத்து இருத்தலின், ஒருண்மையேயாம்; இக்காரணத்தால் நமது ஆன்மாவும் தெய்வத் தன்மை வாய்ந்த அழிவற்ற பொருளாம். பிரம்மனே உள்ளது; எனினும், இப்பிரபஞ்சத்து உயிருள்ளனவும் உயிரற்றனவும் ஆன வெவ்வேறு வகைப்பட்ட எண்ணிறந்த பொருள்கள் இருப்பதான பொய்த் தோற்றமும் நம் முன் உள்ளது. இப்பொய்த் தோற்றத்தால், செயல்கள் அனைத்தும் பிரகிருதியால் (இயற்கை முழுதும் பரந்துள்ள சக்தியால்) உண்மையாக இயற்றப்படும்போது நாம் தனித்தனியே மெய்யாகக் கருத்தாக்களாகவும் போக்தாக்களாகவும் இருப்பதாக நம்பிவிடுகிறோம் (கீதை 3–27). நாம் பகவானது தெய்விக மாயையின் மயக்கத்திற்கு உட்பட்டுள்ளோம்; அதனைக் கடந்து செல்வது மிக அரிதாம்.

நாம் மாயைக்கு உட்பட்டிருக்கும் வரை, ஒன்றையன்றிப் பலவற்றைக் காணும்வரை, நாம் அதற்கிசைய நமது நடத்தையை அமைத்துக் கொள்வதும் இயல்பே. யான் துன்பத்தை உணர்வேனாயின், பிறர்க்குத் துன்பத்தை அளியாத வண்ணம் பாதுகாத்துக்கொள்ள வேண்டும். இவ்வாறு நல்ல செயல்களையும் தீய செயல்களையும் வேறுபடுத்தி யறிய வேண்டும். ஆனால் இவ்வேறுபாடுகள் யாவும் ஒன்றோடொன்று ஒப்பிடப்படும்போது ஏற்படும் மதிப்புகளேயன்றி வேறல்ல. உயர்வற உயர்ந்த நிலையிலிருந்து நோக்குங்கால் வைதிக (இந்து) மதப்படி அத்தகைய வேறுபாடு உள்ளதன்று; காரணம் யாதெனின், பிரகிருதியே எல்லாச் செயல்கட்கும் கருத்தாவாகின்றது.

உண்மையை உரைப்போமாயின், உயர்வற உயர்ந்த ஞான நிலையை அடைவோர் இதற்கு முற்றிலும் வேறுபட்ட ஒரு நிலையினின்றும் இவ்வுலகினைக் காண்கின்றனர். அன்னூர் அனைத்திற்குள்ளும் அனைத்தின் வழியாகவும் பரம் பொருளையே மெய்யாகக் காண்கின்றனர்; தமது ஆன்மா அப்பரம் பொருளினின்றும் வேருனதன்று என்பதையும் மெய்யாகக் காண்கின்றனர். இப்படைப்பின் உண்மைப் பொருளை அவர்கள் உணர்கின்றனர்; இறைவனது ஆணையின் லீலையென்றே அதனை அனுபவிக்கின்றனர். சுகம் துக்கம், உடல்நலம் பிணி, வாழ்வு மரணம், புகழ் இகழ் ஆகியவற்றிற்கு அடியிலே, உண்மையாகவே நல்லவை தீயவையென்னும் எல்லாப் பொருள்கட்கும் அடியிலே, தெய்விக லீலையொன்றே அமைந்திருப்பதை அவர்கள் காண்கின்றனர். தமது உண்மையான ஆன்ம உணர்விலே நிலையாக நின்று நோக்கி அனைத்தையும் தெய்வத்தின் அம்சமாகவே அவர்கள் காண்கின்றனர். உண்மையான ஆன்ம ஞானம் உதயமாகும் போது புண்ணியம் பாவம் இரண்டிற்குமே வேறுபாடு தோன்ருதொழிகின்றது. ஆன்மா ஒன்றைச் செய்வதுமில்லை, அனுபவிப்பதுமில்லை. அது எவ்வித மாறுபாடும் அடைவதும் இல்லை. அது யாரையேனும் கொல்வதும் யாராலேனும் கொல்லப்படுவதும் யாங்ஙனம் இயலும்? (கீதை 2–19).

இம்மாதிரியான காட்சியைப் பெற்றதும், ஞானியர் சம நிலையினை எய்திவிடுகின்றனர். ஆன்மா பூரணப் பொருளேயாகும். இக்காரணத்தால் ஆன்மாவை உணருவார்க்கு அடையவேண்டியது வேருென்றும் இல்லை. எதனையேனும் பெறும் ஆசை ஒரு கணமாயினும் அவர்களது உள்ளத்தில் அலையினை எழுப்பாது. எல்லா அவாக்களினின்றும் முற்றும் விடுபட்ட இம்முனிவர் தமது ஆன்மாவின் சொரூபமாகிய அந்தமிலாப் பேரின்பத்திடை அழுந்துகின்றனர். (கீதை 2–55). ஆசையும் அச்சமும் சினமும் நீங்கியவரான அவர்

சுகத்தை விரும்புவதில்லை. துய்ரத்தால் வருந்துவதுமில்லை. நன்மையோ தின்மையோ எதுவரினும் அவர்கள் ஒரேவித மன அமைதியோடு ஏற்கின்றனர். முன்னதை அவர்கள் ஆனந்தமாக வரவேற்கவும் செய்யார், பின்னதை வெறுத்துப் பழிக்கவும்மாட்டார். அவர்களுடைய உள்ளங்கள் பூரண சாந்தியிலும் சமநிலையிலும் நிலைபெற்றுள்ளன.

ஞானியரிடத்துக் காணும் இத்தகைய ஈடற்ற ஒழுக்கத்திற்கு இயல்பான ஆதாரமாவது, தமது ஆன்மாவையும் உலகையும் பற்றிய பேருண்மையை அவர்கள் நேரிற் கண்ட காட்சியே. அக்காட்சி காரணமாக, அத்தகைய ஒழுக்கம் அதன் காரியமாக விளைகின்றது. ஆதலாலே, முழுமனதோடும் அத்தகைய ஒழுக்கத்தை முன்மாதிரியாகக் கொண்டு பின்பற்ற முயல்வதே அத்தகைய காட்சிப் பேற்றுக்கும் முக்திக்கும் வழியாகும். கருமயோகம் யுக்திக்குப் பொருத்தமாதல் இதினின்றும் தெளிவாகும். ஞானியரைப் போன்ற ஒரு மனிதன் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் மனதைப் பூரண சமநிலையில் வைத்திருக்க ஓயாது முயலவேண்டும். அதுவும் இவ்வுலகியல் வாழ்விற்கு நடுவே, அதற்குரிய எல்லாவித உறவு முறைகட்கும் இடையிலும், கடமைகளையெல்லாம் இயற்றும் போதும் செய்யப்படல் வேண்டும். 'தீவிர முயற்சிக்கு நடுவே அழியாத அமைதி'—இதுவே அடைதற்குரிய இலக்ஷிய நிலையாகும். இதுவே கருமயோகம் ஆகும்.

ஆதலின், கருமயோகத்தில் முயற்சியும் சமநிலையும் எனும் இரு பகுதிகளும் அமைந்துள்ளன. ஒருவன் மிகத் தீவிரமான முயற்சியில் ஈடுபடுதல் வேண்டும்; ஆயினும் அமைதியாயும் சமநிலையோடும் இருத்தல் வேண்டும். இது செய்தற்கு இயலாத ஒரு பெருங் காரியமாக மேலெழுந்த பார்வைக்குத் தோன்றும். மிகத் தீவிரமாக ஒரு முயற்சியில் ஈடுபட்டு நிற்கும்போது, மன அமைதியை எவ்வாறு குலையாது பாதுகாக்கக்கூடும் என்று வினவலாம். சிந்தனை தியானம் பிரார்த்தனை முதலியவெல்லாம் மன அமைதிக்கு

மிகவும் அனுகூலமானவையாகலாம். இதை எவரும் அறியக்கூடும். ஆனால் ஒருவர்க்குரிய இலௌகிக் கடமைகளைக் கவனித்தல் என்பது இதற்கு முற்றிலும் வேறுபட்ட ஒன்றாகும். அது மனதைச் சிதறச் செய்து, சமநிலையினின்றும் வெளியே தள்ளும் தன்மையதாகுமன்றோ? எனில் அவ்வாறன்று. ஏனெனில், முயற்சிதானே மன அமைதியைக் குலைப்பதன்று, ஒவ்வொரு கருமத்திற்கும் மனத்தின் ஒரு முகப்பட்ட நிலை வேண்டியதாகும். அக்காரணத்தால் அது ஒரு முகப்படுத்துவதிலும் அமைதியாயிருப்பதிலும் மனதிற்குப் பயிற்சியை அளிக்க ஒரு சந்தர்ப்பத்தைத் தருகின்றது; நமது மனத்தை அலையச் செய்வது முயற்சியென்பதேயன்று, மற்றொன்று. அது யாதெனில் நமது கருமத்தின் பயன்கள் மீதுள்ள விருப்பமே. நாம் இப்பயன்களை நாடுகிறோம்; அதுவே நமது உள்ளத்தை அமைதியற்றதாக்குகின்றது. நம் கருமங்களின் பயன்களை நாடுவதை நிறுத்திவிடுவோமாயின் எவ்வளவு முயற்சியும் நமது மனத்தைக் குழப்பத்திற்கு உள்ளாக்க வல்லதாகாது. அம்மட்டோ! அந்நிலையில் ஒவ்வொரு செயலும் மன அமைதியையும் தூய்மையையும் காட்சித் தெளிவையும் அடைதற்கு மேலும் மேலும் துணை செய்யும்; இறுதியில் நம்மையும் உலகத்தையும் பற்றிய பேருண்மையை உணர்ந்து, என்றென்றும் முத்தராயிருக்கவும் உதவும்.

சாதாரணமாக, நமக்கு யாதேனும் ஒரு குறை இருப்பதனால் தான் யாம் கருமம் புரிகின்றோம். கருமத்தின் பயன் மீதுள்ள விருப்பமே கருமத்திற்குரிய விதைகளை விதைத்தற்கு வழியாகிறது எனல் வேண்டும். அவ்வாறாயின், இவ் விருப்பத்தைத் துறந்துவிடின், நம்மைச் செயல் செய்யுமாறு தூண்டுவதற்கு எது ஏதுவாகும் என்றும், நாம் தமோ குணத்திற்கு இறங்கிவிடுவோமன்றோ என்றும் கேட்கலாம். அப்படியன்று என்பதே பதில். ஒவ்வொருவனும் பயனைக் குறியாது தன் கடமைகளை மிக்க கவனத்தோடு இயற்ற வேண்டும் என்றும், அதை ஒரு ஞான சாதனமாகச் செய்ய

வேண்டும் என்றும் கருமயோகம் விதிக்கிறது. அது பரி பூரணுநந்த நிலையெனும் இலக்ஷியத்தை நோக்கி விரைவாக நம்மைச் செலுத்துகிறது. ஆதலின் ஞான முன்னேற்றத் தில் நமக்குள்ள ஆவலே நம்மைக் கருமம் செய்யுமாறு தூண்டும். முயற்சி தாமச குணத்தைக் குறைக்கின்றது; ஆசைகளை வேரொடுமாய்க்க முயலுதல் இராஜச குணத் தால் எழும் அமைதியின்மையை அடக்குகின்றது. இவ்விரு குணங்களும் குறைவதால், அமைதியும் தூய்மையும் காட் சித் தெளிவும் வளர்கின்றன. ஆக கருமயோகம் உள்ளத் தைத் தூய்மையாக்கி, ஆன்ம ஞானம் உதிப்பதற்குத் துணை யாகிறது.

மனம் சமநிலையடையும்வரை கருமயோகத்தின் மூலமாக இவ்வாறு சித்த சுத்தியை உண்டு பண்ணுதலே முத்தியில் இச்சையுடையார்க்கெல்லாம் அவசியமான ஒரு முயற்சியா கும் என்று கீதையில் கூறப்பட்டுள்ளது. (ஆருருக்ஷோ: முனே: யோகம் கர்ம காரணம் உச்யதே—யோக நிலையில் ஏற விரும்பும் யோகிக்குத் தொழிலே கருவியாகக் கூறப் பட்டுள்ளது. கீதை 6—3). ஒருவற்குப் பிரியம் இருக்கு மாயின், அத்தகைய நிலையை அடைந்தபின்தான் ஸமூக வாழ் விற்குரிய பந்தங்களை அறுத்தெறியலாம். ஏனெனில் அப் போதுதான் அத்தகைய மனத்திற்கு இறையுணர்வில் அமிழ்ந்திருத்தல் கைகூடுவதாகும். ஆனுல் அத்தகைய மனி தற்கு ஜனகரையும் மற்ற முனிவர்களையும்போல் இல்லறத் தாளுக உலகில் வாழ்ந்து, அதன் நலத்தை நாடிக் கருமம் புரிதலும் இயலும் என்பதில் ஐயமில்லை. ஆயினும், துறவு நிலையில் (இலௌகிகக் கடமைகளினின்றும் விடுபட்ட ஒரு வாழ்க்கையில்) புகுந்து, யாதேனும் ஒருவகையான ஞான சாதனத்தில் ஆழுமுன், கருமயோகத்தால் (யோக) சமத் துவ நிலையை அடைதல் நன்று எனக்கீதை போதிக்கிறது. இம்மாதிரியான மனப் பக்குவமில்லாது, எல்லா இலௌகிக

உறவுகளையும் கடமைகளையும் துறத்தல் ஞான முன்னேற்றத்தைத் தருவதற்குப் பதிலாகத் துயரத்திற்கு ஆளாக்கும் தன்மையதாகும். (ஸன்யாஸஸ்து மஹாபாஹோ துக்கம் ஆப்தும் அயோகத:—யோகமில்லாதவன் ஸன்யாஸம் பெறுதல் கஷ்டம். கீதை 5—6).

ஆயினும், கருமயோகம் வெளிப்பார்வைக்குத் தோன்றுவதுபோல அவ்வளவு எளிதானதன்று. நமது செயல்களின் பயன்கள்மீது எழும் ஆசையை அறவே விட்டுவிடுதல் இலேசான காரியமன்று. இந்திரியங்களை வசப்படுத்திய பின்னும் தூல ஆசைகளை அடக்கிய பின்பும், பெயர் புகழ் பெருமை மதிப்பு முதலியவற்றின்மீது உண்டாகும் நுண்ணிய பலமான பற்றுகள் ஒழித்தற்கு மிக அரியவாகக் காணப்படும். அவை மிகப் பிடிவாதமாகப் போர்புரியும். அவற்றின் இருப்பை உணர்வதும் பன்முறையும் சிரமமாகும். அவை உள்ளத்தின் ஆழத்தில் உணர்வு ஒடுங்கியுள்ள பகுதிகளில் மறைந்து கிடக்கின்றன; இதனால் அவற்றை உணர்வதும் ஏறக்குறைய இயலாத செயலாகும்.

எனினும் இவ்அரிய செயலையும் இயற்றுதற்கு ஒரு வழி உள்ளது. நம் ஆசைகள் உதிக்கும் இடத்திலே பாடுபட வேண்டும் என்று நமக்குப் பெரியார் போதனையருளுகின்றனர். ஆசைகள் எழும் காரணம் யாது? அதனைக் கண்டு பிடித்து நீக்க வேண்டும். நம் இந்திரியங்களை இயல்பாகவே சில பொருள்கள் கவர்கின்றன, மற்றவை விலக்குகின்றன. (கீதை 3—34). மனம் இந்திரியங்களைப் பின்பற்றி ஓடும்படி விடப்படும்போது, முந்தியவற்றில் விருப்பையும் பிந்தியவற்றில் வெறுப்பையும் பெறுகிறது. இவ் விருப்பும் வெறுப்புமே நமது ஆசைகள் அனைத்தையும் விளைக்கின்றன. கவரும் பொருளைப் பற்றவும், விலக்கும் பொருள்களை நீக்கவும், பிரியம் உண்டாகின்றது. ஆதலால், நம் ஆசைகளை வேரறுத்தற்காக, உலகப் பொருள்களின் மீதெல்லாம் எழும் விருப்பு வெறுப்புகளாகிய அடிப்படை உணர்ச்சிகளை எவ்வாறாயினும் நாம் வென்றுவிடல் வேண்டும்.

இதனைச் சங்கற்ப வலிமையினால் மட்டுமே செய்யலாகும். நட்பு பகைமை, வெற்றி தோல்வி, இலாபம் நஷ்டம், உடல்நலம் நோய் முதலிய தொந்தங்கள் (ஒன்றுக்கொன்று எதிரான இரட்டைகள்) எல்லாவற்றையும் சமமாக நினைத்தல் வேண்டும் என்னும் மனஉறுதியோடு பாடுபடுதல் ஒன்றே அவசியமானது. மனதை அம்மாதிரியான சம நிலையில் வைத்திருக்க சிரமத்தோடு உழைக்கும்போதே, நம்மிடத்துள்ள முழுத்திறமையோடும் சக்தியோடும் நம் கடமைகளை இயற்றிவரல் வேண்டும். இதுவே தனிக் கருமயோகமாகும். சிரத்தையோடு ஒருவன் இதனைப் பின்பற்றி வருவானாயின், வேறு எந்த யோகத்தையும் போன்று இதுவும் ஞான இலக்ஷியத்தை நோக்கிச் செலுத்துவது திண்ணம்.

ஆனால், இவ்வண்ணம் செய்தற்கு மாபெரும் சங்கற்ப வலிமை வேண்டும்; அது மிக மிக அரிதாகவே காணப்படுவதொன்று. இக்காரணத்தால், ஞானத்தோடோ பக்தியோடோ இந்த யோகத்தை இணைத்துப் பயன்படுத்திவரின் இது மிக எளிதாகும், பலர்க்கும் பழகக்கூடிய ஒன்றாகும். எதிரிடையான இரட்டைப் பொருள்களின்மீது சம தரிசனம் பெறுவதற்குப் பரம்பொருளை இவ்வுலகத்தின் ஆன்மாவாகவோ, இதனைப் படைத்த பேரருள் வள்ளலாகவோ சிந்தித்தல் வழியாகலாம்,

இவ்வுலகப் பொருள்களின்மீது தோன்றும் நம் விருப்பு வெறுப்புகள் அறியாமையை வேராகவுடையன. ஞானிகள் அனைத்துப் பொருள்கட்கும் உள்ளேயும், அவற்றினூடே எங்கும் பரந்திருக்கும் ஏகனாகிய பரமனையே காண்கின்றனர்; ஆனால் நாமோ அவ்வொரு பொருட்குப் பதிலாகப் பலவற்றைக் காண்கிறோம். நமது அறியாமை காரணமாக, நம்மை உடல்களும் மனங்களும் வெவ்வேறாகப் பெற்றுள்ள தனித் தனிப் புருடர்களாக உணர்கிறோம். எல்லாச் செயல்கட்கும் அனுபவங்கட்கும் நாமே கருத்தாக்களென்

றும் போக்தாக்களென்றும் நினைக்கிறோம். ஏனைய உயிர்கட்கு வேறாக 'யான்' 'எனது' என்று நம்மை நாம் பிரித்து வைத்துக் கொள்ளவும், அவற்றையே மற்ற எதையும்விட மிக்க மதிப்புடையன வாக்கவும், தொடங்குகிறோம். நம்மில் ஒவ்வொருவரும் அத்தகைய ஒடுங்கிய பொய்யான காட்சி நிலையினின்றும் பரம்பொருளை நோக்கி, 'யான்' 'எனது' என்பவற்றைக் கற்பித்துக்கொண்டு, இப்பொய்யான அகங்காரத்தையே இவ்வுலகிற்கு மையமாகக் கொண்டு வாழ்கிறோம். பண்படாத மனதிற்கும் இந்திரியங்கட்கும் தேட்டமானவற்றைத் தேடியளிப்பனவாக வெளிப் பார்வைக்குத் தோன்றுவனவெல்லாம் இச்சிறிய பொய்யான அகங்காரத்தினுற் பெரிதும் மதிக்கப்படுகின்றன. இவற்றின்மீது விருப்பமும் இவற்றிக்கு எதிரிடையானவைமீது வெறுப்பும் இதனுல் தாமே தொடர்ந்து வருகின்றன. முடிவற்ற ஆசைகளின் பெருக்கை விளைவிக்கின்றன. இக்காரணத்தால், கருமயோகி ஆசைகளைத் துறத்தற்காக அவித்தையை எதிர்த்தாகவேண்டும்; அவன் தனது உண்மை இயல்பையும் உலகத்தின் உண்மையான சொரூபத்தையும் சிந்திப்பதே அவித்தையை ஒழிக்கும் வழியாகும்.

பேரின்பத்தை நாடுபவன் உயர்ந்த ஞான பூமியைத் தனக்கு நிலைக்களமாக் கொள்ளவேண்டும் என்று நமது ஆன்றோர் புத்திமதி கூறுகின்றனர். மெய்ப்பொருள் ஒன்றேயெனும் பேருண்மையை நினைக்க அவன் ஓயாது முயலுதல் வேண்டும். அவன் தன்னைத் தூல சூக்கும உடல்கட்கு அன்னியமான ஒரு பொருளாகக் கருதவேண்டும். எல்லா நிகழ்ச்சிகட்கும் அழியாத சாக்ஷியாகி, சாந்தியோடும் அமைதியோடும் விலகி நிற்கும் தெய்விக ஆன்மாவே அவன். அவன் கருத்தாவுமல்லன், போக்தாவுமல்லன் (ஒரு கருமத்தையும் செய்வதுமில்லை, பலனை அனுபவிப்பதுமில்லை.) உடலையும் மனத்தையும் இந்திரியங்களையும் பிராணனையும் புத்தியையும்

அகங்காரத்தையும் பிரகிருதியே (இயற்கையே) ஆட்டிவைக்கிறது, தொழில் புரியச் செய்கிறது. அப்பிரகிருதியே எல்லாச் செயல்கட்கும் எல்லா அனுபவங்கட்கும் உண்மையான கருத்தாவும் போக்தாவும் ஆகின்றது. ஆதலின் உடலும் மனமும் ஒரு தொழிலில் ஈடுபட்டிருக்கும்போது, பிரகிருதியே தன் தொழிலை நடத்தி வருகிறது என்பதையும், உண்மையான ஆன்மா கருத்தாவுமன்று போக்தாவுமன்று என்பதையும் ஒருவன் உணர முயலவேண்டும். உடலும் மனமும் வேலை செய்யினும் ஓய்ந்திருப்பினும், விழிப்பு கனவு எனும் மூன்று நிலைகளிலும் உடலிலும் மனத்திலும் நிகழும் அனைத்தையும் விகாரமடையாது நோக்கிக் கொண்டிருக்கும் மாறாத சாக்ஷியே தான் என்பதை யோகத்தில் வெற்றி பெற்றவன் உண்மையாக உணர்கிறான். உடல் வாயிலாகவும் மனத்தின் வாயிலாகவும் தொழில் நடைபெற்று வரும்போதும் தான் எதையேனும் செய்வதாக அவன் ஒருக்காலும் உணரான் (கீதை 5-8). யோகத்தில் வெற்றி பெற்றவனது மெய்ப்பொருட் காட்சியைத் தியானித்தலே அவனது ஒழுக்கத்தைப் பின்பற்றப் பெருந் துணையாகின்றது; அவ்வொழுக்கமே கருமயோகம் எனப்படும். இவ்வழியிலே தியானித்தல் அறியாமையை ஒழிக்க உதவுகின்றது; மனத்தின் அடிப்படைச் சக்திகளான பற்று வெறுப்பு இரண்டையும் எதிர்த்து வலியற்றனவாக்கவும், அவ்வாறே ஆசைகளின் வேகத்தை உற்பத்தியாகும் இடத்திலே தடுக்கவும் இது பயன்படுகிறது. ஆக, கருமயோகம், இவ்வாறு அதனை ஞானயோகத்தோடு இணைத்துக்கொள்ளக் கூடியவர்க்கு முற்றிலும் பழகுதற்குரிய சாதனமாகின்றது.

இந்த இணைப்பும் (சேர்க்கையும்) பலர்க்கு ஒருவாறு கடினமானதாக முடியலாம். ஒரு சாதகன் ஏகமான அதே பரம்பொருளை வேறொரு நிலையினின்றும் நோக்கலாம். ஈசன் அனைத்தையும் உண்மையாக இயற்றி வருதற்குத் தான் ஒரு

கருவியாக மட்டும் இருப்பதைத் தியானிப்பது முற்கூறிய முறையினும் அவனுக்கு எளிதாகலாம். ஒவ்வொரு பிராணி யின் இதயத்திலும் ஈசன் அமர்ந்து, மாயையெனப்படும் தனது உணர்தற்கரிய சக்திவாயிலாக ஒவ்வொருவரையும் ஒரு பொம்மலாட்டத்திற் போன்று ஆட்டி வைக்கின்முன். (கீதை 18–61).

"நான் யந்திரம், நீ யந்திரி (யந்திரத்தை ஓட்டுபவன்). நான் ரதம், நீ சாரதி. நான் வீடு, நீ அதில் வசிப்பவன்." ஈசனோடு இம்மாதிரியான ஓர் உறவுகொண்டு, அதனைச் சிந் தித்தல் சாக்ஷியான ஆன்மாவாக விலகி நிற்க முயல்வதைக் காட்டிலும் மிக எளிதாகும். பொய்யான அகங்காரத்தை ஒழிக்க இயலாத காலம்வரை, அதற்கும் ஈசனுக்கும் உள்ள உறவைப்பற்றித் தியானித்தல் மிக நன்று. ஈசனது தெய் விக மாயையால் அது தோன்றியுள்ளது; அதன் வாயிலாக மட்டுமே அது காரியங்களை இயற்றுவதாகவும் அனுபவிப்ப தாகவும் தோன்றுகின்றது. ஈசன் தனது பரப் பிரகிருதி யால் (உயர்ந்த இயற்கைச் சக்தியால்) எண்ணிறந்த தனித் தனியான சிறு ஆன்மாக்களாகத் தோன்றுகிறுன்; தனது அபரப்பிரகிருதியால் (தாழ்ந்த இயற்கைச் சக்தியால்) உடல் கள் மனங்கள் இந்திரியங்கள் முதலியவையாகவும் சடவுலக மாகவும் தோன்றுகிறுன். ஈசனை ஒரே மெய்ப்பொருளாகத் தியானிக்கவும், நமது அற்பமான 'நான்' 'எனது' என்ப வற்றை ஒழிக்கவும் நமக்கு இயலாது போகும்வரை, நம்மை அத்தனை பலப் பல கருவிகளாகக் கொண்டு ஈசன் தனது தெய்விக சங்கற்பத்தை நடத்திக்கொண்டு வருகிறுன் என்று கருதுவது நன்று. இக்காரணம் பற்றியே ஸ்ரீ கிருஷ்ணபக வான் அருச்சுனனிடம் "இம்மக்களை யான் முன்னரே கொன்றுவிட்டேன் (எனது உலகபரிபாலன சங்கற்பத்தால் கொன்றுவிட்டேன்), நீ (எனது சங்கற்பத்தின்) கருவியாக மட்டும் இருந்து வா" (கீதை 2–33) என்ருர்.

"நான் பகுதி (அம்சம்) நீ தொகுதி (முழுமை), நான் அலை நீ கடல், நான் பொறி நீ தீ"—இம்மாதிரியாகவும் சாத கன் தன்னை ஈசனோடு ஐக்கியமாகப் பாவனை செய்து தியா

னித்து, தனது அனாதி அவித்தையை ஒழிக்க முயற்சி செய்ய லாம். அதனினும் மிகத் தெளிவான முறையாவது, பக்தி யோகத்தில் விதித்துள்ளபடி, ஈசனை நமது தந்தையாகவோ தாயாகவோ தோழனாகவோ, எஜமானனாகவோ வேறுவகை யிலோ மிக நெருங்கிய உறவினனாகக் கருதுவதேயாம். "அவர் (ஈசர்) தமக்காகப் பணி செய்வதற்கென்றே இவ்வுல கிற்கு என்னை அனுப்பித்துள்ளார். எனது சக்திக்குத் தக்க படி எல்லாரையும் பாதுகாத்து எல்லோருக்கும் நல்ல தைச் செய்யும் தொழிலை என்னிடம் ஒப்பித்துள்ளார். குடும் பத்திலிருந்து தொடங்கி மனித ஸமூகம் முழுவதும் வரை யாவும் ஈசர்க்கே உரிமையாவன. அவரது எல்லையற்ற அன் பினாலேயே செழிப்படைந்து வருகின்றன. அவர்களுடைய நலத்தைப் பேணுதல் எனது அன்பார்ந்த தாயோ தந் தையோ எஜமானரோ ஆன அவரைச் சார்ந்ததாகும். இதில் எனக்குரிய பங்கை யான் ஏற்றுக்கொள்ளல் வேண்டும். எனது குடும்பத்தைச் சார்ந்தவர்களோடு நான் எக்காலமும் நிலையாக உறவுள்ளவனென்று கருதுவதற்குப் பதிலாக, அவர்கள் அனைவரையும் ஈசரின் குழந்தைகளாகவும், எனது பாதுகாப்பிற்கென்றே ஒப்புவிக்கப்பட்டவர்களாகவும் நான் கருதுதல் வேண்டும்; இவ்வாறே என் கூட்டத்தாரையும் என் நாட்டினரையும், என் இனத்தாரையும், மனித ஸமூக முழுமையையும் நான் கருதவேண்டும். ஒரு வேலைக் காரி தனது எஜமானனின் குழந்தைகளைப் பிரியத்தோடு பேணிவருவது போலவும், அக்குழந்தைகள் தன்னுடையவை யல்ல என்பதை நன்கறிந்திருந்தும் போற்றி வருவது போல வும், என் குடும்பத்தார் கூட்டத்தார் நாட்டினர் இனத் தார் மனித ஸமூகத்தார் அனைவரையும் நான் அன்போடு பாதுகாத்து வருதல் வேண்டும். எல்லாச் செல்வமும் உண் மையாக ஈசனுக்குரிமை யானதேயாம். நான் இறக்கும் போது அவையனைத்தையும் விட்டுத்தான் செல்லவேண்டும்.

யான் வாழுங் காலத்தும் யான் அவனது சொத்தைக் கை வசம் வைத்திருப்பவனே யாவேன். எனக்கு யாதொன்றி லும் உரிமையில்லை. எல்லாம் அவனுடைமை. நன்றியுள்ள வேலைக்காரன் தனது எஜமானது சொத்தைத் தக்கவாறு பாதுகாத்து வருவதுபோல், அது தனக்குரியதன்று எஜ மானனுக்கே உரியது என்பதை அறிந்திருக்கும் சமயத்தும் அவன் அவ்வாறு செய்தல்போல், தற்காலத்திற்கு எனது ஆளுகையில் உள்ளதுபோலத் தோன்றும் சொத்தையெல் லாம் அவ்வாறே கவனித்து வரவேண்டும்.'' இம்மாதிரியான முறையில் சிந்தித்து வருவதனால் நமது அஞ்ஞானத்தின் பெரும்பகுதி தொலைந்து, கருமயோகம் பழக அனுகூலம் உண்டாகும் என்பது திண்ணம்.

இம்மாதிரியான சிந்தனையின் பயனாக உலக காரியங்களை நோக்கும் மனநிலையொன்று உண்டாகிறது; அது இல்லறத் தானது வாழ்வினைப்பற்றிய ஒவ்வொன்றையும் தூயதாக்கு கிறது. அவ்வாழ்க்கைக்குரிய ஒவ்வொன்றும் இறைவ னோடு இணைக்கப்பட்டுள்ளதாகக் காணப்படுகிறது. தன்ன லம் ஒளிந்து கொள்ளுதற்குரிய மூலை முடுக்கும் இதில் இல்லாதொழிகிறது. அகங்காரம் இறைவனது அன்பார்ந்த நன்றிமிக்க காரியஸ்தனாக மாறிவிடுகின்றது. எல்லாம் புனிதமாகின்றன. வெறுத்தற்கோ சிறப்பாகப் பற்று வைத் தற்கோ ஒன்றும் இல்லாது போகிறது. உலகப் பொருள் களின் மீதெழும் பற்றுகள் உதிக்கும் இடத்திலே தடுக்கப் படுகின்றன; கடமைகள் இறைவனுக்குச் சொந்தமான வேலைகளாகவே தோன்றுகின்றன. அவை பக்தி சிரத்தை யோடு இயற்றப்படுகின்றன. அவற்றின் பயன்கள் இறை வனுக்கே சமர்ப்பிக்கப்படுகின்றன. அத்தகைய அன்பன் எதுவரினும் நன்றேயாயினும் தீதேயாயினும், அனைத்தும் தனது அன்பிற்கினிய நாதனால் தனது நலத்தின் பொருட்டே விதிக்கப்பட்டன வென்னும் நம்பிக்கையோடு, எதனையும் சமநோக்கோடு தலைவணங்கி ஏற்றுக் கொள்கிறான்.

பக்தியோக முறைப்படிச் செய்யும் சிந்தனை கரும யோகம் பழகுதற்குத் துணையாவது இவ்வாறு என்னலாம். இம்மாதிரி இரண்டையும் ஒன்ருக இணைத்துக் கொள்ளும் முறை சிரத்தையுடையாரிற் பெரும்பாலர்க்குப் பொருந்திய தாகும். உண்மையாகவே முத்தியை அடைய விரும்பும் இல்லறத்தார்க்கு இது மெச்சத்தக்க உபாயமாகும்.

ஆயினும் ஒன்று கருதத் தக்கது. அத்தகைய இல்லறத் தார்க்குக் கருமயோகமே, ஞானத்தோடோ பக்தியோடோ இணைக்கப்பட்டிருப்பினும் ஓர் இன்றியமையாத ஞான சாதன முறையாகும். அவ்விரண்டில் ஒன்ருேடு அது இணைக்கப்படுதல், சாதகன் தனது ருசிக்கும் தகுதிக்கும் இயைந்தவாறு தெரிந்தெடுப்பதைப் பொறுத்ததாகின்றது. அது எவ்வாருயினும், முத்தியையே (சிரேயஸ்ஸை, அதாவது 'சிறப்பை') வாழ்க்கையின் மிக உயர்ந்த நோக்கமாகக் கருதுபவன் உலக சம்பந்தமான ஒவ்வொன்றையும் ஞான சம்பந்தமுள்ளதாக்க அரும் பாடுபட்டே தீரவேண்டும். அவன் தன் கடமைகளோடு ஒட்டிய எல்லாச் செயல்களை யும் வழிபாடாக மாற்ற வேண்டியவனுகிருன். ஏனெனில், கருமயோகத்தின் வாயிலாக ஒருவன் தனது வாழ்வை ஞானத்திற்கெனவே முற்றும் ஒப்படைத்துவிடும் செயல் அவனது உள்ளத்தை விரைவில் தூய்மைப்படுத்தி, அவனது ஞான முன்னேற்றத்தையும் துரிதப்படுத்துகிறது.

ஆக, கருமயோகம் உலக வாழ்வைத் திவிர ஞான வாழ் வாக மாற்றுதற்கென அமைந்த ஒரு விசித்திர முறையாகின் றது. இராஜ யோகத்தையோ ஞான யோகத்தையோ பக்தி யோகத்தையோ பழகி வருபவன் அறுதியாகப் பின்பற்ற வேண்டிய ஞான சாதனத்திற்கு உலக முயற்சிகள் அனைத்தி னின்றும் முற்றும் நீங்கியிருத்தல் அவசியமாகின்றது. எவ் வாறெனில், இந்த யோகங்கள் விதிக்கும் ஞான சாதனத்தில் வெற்றிபெற, அதில் முழு மனதோடும் ஈடுபடும் தன்மை மிக

மிக இன்றியமையாதது; ஆனல் உறவு முறைகளாய கட்டு களும் கடமைகளின் சுமையும் நிறைந்துள்ள உலக வாழ்க் கையோ அத்தகைய முழு ஈடுபாட்டுக்கு இடையூருகின்றது. இக்காரணம் பற்றியே சிரத்தை மிகுந்தவர் எல்லா உலக உறவுகளையும் அறுத்தெறிந்து, எல்லா உலகக் கடமைகளை யும் துறந்துவிடுதலை வழக்கமாகக் கைக்கொள்கின்றனர். அவர்கள் துறவு வாழ்க்கையை மேற்கொள்கின்றனர்; அப் புதிய வாழ்வில் ஞான சாதனத்தோடு சம்பந்தப்படாத மற் றெல்லாப் பொறுப்புகளும் கவலைகளும் அவர்களிடமிருந்து நீங்கிவிடுகின்றன. இதிலிருந்தே உலக வாழ்க்கை உண்மை யான ஞான வாழ்விற்குத் தடையாகும் என்று பலரும் கருத நேர்கின்றது. உலகமும் ஞானமும் ஒன்றுக்கொன்று எதி ரான இரு கோடிகள் என்ற எண்ணம் எழுகின்றது. ஆனல் கருமயோகம் இந்த மயக்கத்தை ஒழித்து விடுகின்றது. உலக வாழ்க்கை மன ஒடுக்கத்தைக் குலைக்க ஏதுவாகாது. ஞான முன்னேற்றத்தை விரைவாக்கவும் துணையாகும் என் பதைக் கருமயோகம் எடுத்துக் காட்டுகிறது. யோகம் என்ப தன் கை தீண்டப் பெற்றதும், ஓர் உலகக் கடமை ஞான முயற்சியாக மாறிவிடுகின்றது; உறவு முறைகளாகிய கட்டு களும், கடமைகளின் சுமையும் நிறைந்துள்ள உலக வாழ் வையும் அது புனிதப்படுத்துகின்றது. கருமயோகம் எனும் நிலையிலிருந்து நோக்குங்கால் கானகத்துப் பெறும் ஏகாந்தத் தினும். ஸமூக வாழ்வெனும் சூழ்நிலை ஞான வளர்ச்சிக்குக் குறைவான அனுகூலந் தருவதன்று என்பது புலனுகின்றது.

ஜனகரைப் போன்ற பலர் தமது உலகக் கடமைகளைத் துறந்துவிடாமலே பூரண நிலையை அடைந்தனர் என்பது கீதையில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. (கீதை 3—20). உபநிடதங்களிலும் பல ராஜரிஷிகள் கூறப்படுகின்றனர். அவர்களிடமிருந்து பிரம்ம வித்தையைப் பெறுதற்காக அந் தணரும் வருவதுண்டு என்று அவை குறிப்பிட்டுள்ளன. இல்லறத்தேயிருந்து, ஏறக்குறைய எல்லாவகைத் தொழிலி

னரும் கரும யோகத்தின் வாயிலாக ஞான வாழ்க்கையின் சிகரத்தை அடைந்ததற்குப் பல உதாரணங்களைப் புராணங்கள் நமக்குத் தந்துள்ளன.

ஆயினும் கருமயோகம் இல்லறத்தாரால் மட்டும் பழகுதற்குரியதன்று. சமத்துவநிலையை அடையுமுன்னரே உலக வாழ்க்கையைத் துறந்த சன்னியாசிகள் இந்த யோகத்தை ஒதுக்கிவிட்டு முன்செல்ல இயலாது. கரும யோகத்தை ஞானத்தோடோ பக்தியோடோ இணைத்துக்கொண்டு பழகி, அவ்வாயிலாக அவர்களும் பெரிதும் உள்ளங்களைத் தூயதாக்கவும் சாந்தப்படுத்தவும் வேண்டும். இவ்வாறு செய்யாத போது, வேறெந்த வகைப்பட்ட தீவிர ஞான சாதனத்திலும் முழுதும் ஈடுபடுதல் அவர்கட்கு இயலாது போகும். அப்போது பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் கீதையிற் காட்டியுள்ளவாறே, சன்னியாசமாகிய துறவு நிலை வாழ்வு, சுகத்தையும் சோம்பலையும் நாடும் வாழ்க்கையாக மாறும் சந்தர்ப்பத்தைப் பெறும்; ஏமாற்றம் அடைந்து துயருறும் ஆபத்திற்கு ஒருவரை உட்படுத்தும். உண்மையுரைக்கின், மனம் விருப்பு வெறுப்புகளற்று, யாதேனும் ஒருவகை ஞான சாதனத்தில் ஒரு முகமாக ஈடுபடும் தகுதியை எய்தும்வரை, கருமயோகம் அனைவர்க்கும் அவசியமான இன்றியமையாத முறையாகும். உலக வாழ்வைத் துறத்தல் ஞானநெறியிற் செல்வார்க்குப் பேருதவி புரிவதாகும். ஆனால் கருமயோக வாயிலாக எல்லா ஆசைகளையும் ஒழித்ததன் பின் எல்லாக் கருமங்களையும் துறக்கும் நிலை இயல்பாகவே வருதல் இன்றியமையாதது. ஆசைகளை இவ்வாறு தணித்து ஒடுக்கும்வரை, மனதைத் தியானமும் சமாதியும் பழகுதற்குரிய அமைதி நிலைக்குக் கொண்டுவருதல் முடியாததாகும்.

ஆயினும், துறவி கருமயோகத்தைக் கருதும் முறைக்கும் இல்லறத்தான் அதைக் கருதும் முறைக்கும் அடிப்படையில் வேறுபாடு உண்டு. இல்லறத்தானின் கடமைகள் அவனது ஸமூக வாழ்க்கையோடு தொடர்புடைய உறவினர்மீது

செலுத்த வேண்டிய நன்றியினின்றும் எழுவன. ஆனால் துறவியின் கடமைகளோ உலக உறவையொட்டிய யாதொரு கூட்டத்தாரிடத்தும் பற்று எழ இடங்கொடாது, மன்னுயிர் அனைத்திற்கும் செய்யும் பணியினைக் கருதி எழுவனவாம். அவனுக்கும் மன்னுயிர்க்கும் இடையே எவ்விதக் குடும்பமோ ஜாதியோ மதமோ நிறமோ பற்றியெழும் ஆசை குறுக்கிடுதலே அவன் பொருள். மண்ணக மக்கள் அனைவருடையவும் உலக நலனையும் ஞான நலனையும் குறித்துச் செய்யும் கருமங்கள் வாயிலாக மனத் தூய்மை (சித்த சுத்தி) அடைதற்குக் கரும யோகம் அவனுக்கும் எல்லையற்ற சந்தர்ப்பங்களை அளித்துவரும்.

## 14

## சமயகுரவரும் சாஸ்திரங்களும்

இதுவரை பல விஷயங்களைப்பற்றிக் கூறியாய் விட்டது. இந்து மதத்தில் அடங்கியுள்ள முக்கியமான சில உரைக்கப் பட்டுள்ளன. ஸம்ஸாரம் (மறு பிறப்பு), முத்தி இவற்றைப் பற்றிய கருத்துகளும், பிரவிருத்தி மார்க்கமும் (ஆரம்ப நெறியும்) நிவிருத்தி மார்க்கமும் (இறுதி நெறியும்) எனும் ஞான சாதன முறைகளும் எடுத்துக் காட்டப் பட்டுள்ளன. இறுதி நெறியையொட்டி நான்கு அடிப்படை ஞான சாதன முறைகளான இராஜயோகம் ஞானயோகம் பக்தியோகம் கருமயோகம் என்பனவும் விளக்கப் பட்டுள்ளன. ஆனால் இதுவரை இவையாவும் சுருக்கமாகவே சொல்லப்பட்டன.

ஆயினும், இந்துமதத்தை முழுமையாகக் காணுதற்குரிய ஒரு நிலையில் இப்போது உள்ளோம். இதற்காக, அம்மதத்தை ஏனைய மதங்கள் அனைத்தினின்றும் பிரித்தறிதற்குரிய அதன் இன்றியமையாத சிறப்பியல்புகளை வரிசையாக ஆராய்ந்து தொகுத்துரைப்போம்.

ஒவ்வொரு மதத்திற்கும் ஆதியில் ஒரு மத குரவரேனும், சாஸ்திரம் எனப்படும் ஞானக் காட்சியுண்மைகள் அடங்கிய ஒரு நூலேனும் இருக்கும். ஒவ்வொரு மதத்தின் போதனைகளிலும் ஞான உண்மைகள் அடங்கிய ஓர் உறுதியான (வைரமனைய) நடுப்பகுதியும், அதைச் சுற்றி வெளியே வளர்ந்துள்ள கிரியைகளும் புராணக் கதைகளும் ஆகிய மற்றொரு பகுதியும் உள்ளன. ஆக, மதகுரு, சாஸ்திரம், ஞான உண்மைகள், கிரியைகள், புராணக் கதைகள் இவை ஐந்தும் ஒரு மதத்தின் ஐந்து முக்கியப் பகுப்புகளாம். ஆதலின், இந்து மதத்தின் இவ்வைந்து முக்கியப் பகுதிகளையும் பற்றிப் பொதுப்பட அறிதலால் இம்மதத்தினைப்பற்றிய முழுக்காட்சியைப் பெறலாகும்.

### மதகுரவர்

இந்து மதத்திற்கு ஒரு மதகுரவர் ஆதியில் இல்லை. ஞான உண்மைகளை வேதகாலத்திய இருடியர் முதன் முதலில் கண்டுபிடித்து உலகிற்கு வெளிப்படுத்தினர்; அவர்களிற் பலர் தம் பெயர்களைப் பின்னுள்ளார்க்கு விட்டுச் செல்லவும் கருதினரல்லர். குறித்து வைக்கப்பட்டுள்ள பெயர்கட்குரியோரும் மதகுரவராகக் கருதப்படுவரல்லர். ஞான உண்மைகளின் தொகுதிகளான வேதங்கள் பெறும் மதிப்பு அவற்றைக் கண்டுபிடித்தார்க்கு அளிக்கப்படுவதில்லை.

ஆயினும், தருமம் சீர்கெட்டு, அதருமம் தலையெடுக்கும் போதெல்லாம் இறைவன் மீண்டும் மீண்டும் உடலோடு தானே அவதரிக்கிறான் என்பதை இந்துக்கள் நம்புகின்றனர். அத்தகைய காலங்களில் அறநெறியைப் பின்பற்றுவார்க்கு உய்வதற்குரிய உண்மையான நெறியைக் காட்டவும், தீயாரைத் திருத்தி நல்வழியில் நிறுத்தும் பொருட்டு அவர்கள்மீது தக்க தண்டனை சுமத்தவும், தூல உடலெடுத்துக் கொண்டு இறைவன் இவ்வுலகிற்கு இறங்குகின்றனன் என்பதும் அவர்களது கொள்கை.

ஒவ்வோர் உயிரிலும், அம்மட்டோ, ஒவ்வொரு பொருளிலும், இறைவன் இருப்பதை வைதிக மதம் போதிக்கின்றது என்பது உறுதியே. ஆனல் அவனது அறியவொண்ணுத சக்தியாகிய மாயையினுல் ஆன்ம ஞானத்தை மறைக்கும் ஓர் அறியாமைத் திரை முன்னுலே தொங்குகிறது. ஜீவர்கள் இத்திரையைத் தமது சுயமுயற்சியால் சிறிது சிறிதாக நீக்க வேண்டியவராகின்றனர். உண்மையுரைக்கின், மனிதப் பிறவிக்குக் கீழான பிறவிகளில் உயிர்களை மறைவாக உள்ளிருந்து தூண்டிப் பிறவியை உயரச் செய்யும் சக்தியாவது இதுவே. மனிதப் பிறவியில் இம் முயற்சிகள் அறிந்து செய்பவை யாகின்றன. மனிதன் தனக்குள்ளே மறைந்து கிடக்கிற தெய்வத் தன்மையை வெளிப்படுத்த வேண்டியவனுகிருன். இதுவே அவனது தருமம். ஆயினும் இடையிடையே மனிதன் தனது வாழ்வையும், அதன் ஞான நோக்கத்தையும் பற்றிய அடிப்படை உண்மையைக் காணுதொழிகிருன். அவனது அறிவுக் குழப்பத்தின் பயனுக, தன்னிடம் தெய்வத்தன்மை உள்ளடங்கிக் கிடக்கின்றது எனும் கருத்தையும் பொருத்தமற்றதென எள்ளி நகையாடும் அளவிற்கும் அவன் செல்கிருன். காமமும் உலோபமும், பகையும் சண்டையும், அகங்காரமும் தடிப் பேறிய சுயநயமும் எனும் இயற்கைத் தூண்டுதல்களைத் தாண்டி அப்பாற் செல்ல ஒருகால் இயலும் எனும் நம்பிக்கையும் அவனுக்கு எழா தொழிகின்றது. தெய்வத்தன்மையை வெளிப்படுத்தல் என்பது ஒரு வறிய கனவாகத் தோன்றுகின்றது. உயிரனைய இவ் உட்கருத்து நீங்கும் போது மதமும் அதன் கிரியைகளும் கொள்கைகளும் போலியாகின்றன. இந்நிலையில் மக்கள் தாம் செய்யும் மாசுற்ற தீய செயல்களை மறைக்கவும் மதத்தை ஒரு போர்வையாகப் பயன்படுத்தக் கூசார். இவ்வாறு மனிதன் தெய்வத் தன்மையை நோக்கி ஏறும் முயற்சிக்கு ஒரு பெரும் ஆபத்து விளையும்போது, அவனது ஞான முன்னேற்றத்தைத் தடுக்கும் இடையூற்றை நீக்கக் கருதி இறைவன்

உலகிற்கு இறங்குகிறுன். அவதார புருடரது வாழ்க்கையின் வாயிலாக மனிதன் தான் அடையவேண்டிய இலக்ஷியத்தைத் தெளிவாக நேரிற் காண்கின்ருன். மனிதத் தன்மையில் வெளிப்படும் தெய்வத்தன்மை இன்னமாதிரியானது என்பது நன்கு புலனுகின்றது. அப்புருடரின் உபதேசங்கள் வலுத்து வரும் ஐயங்களைப் போக்குகின்றன ; அவரது வாழ்வு ஒரு புதிய உயிருள்ள ஒளி வீசும் மாதிரிவாழ்வாக உலகினர்க்கு ஆகி, அவர்கள் தமது ஞான வளர்ச்சியை அதைப்பார்த்து அமைத்துக்கொள்ள உதவியாகின்றது. இதனுல் . மனிதன் தெய்வத்தன்மையை நோக்கி உயரும் முயற்சிக்கு இது ஒரு பெரிய தூண்டுகோலை அளிக்கிறது. மதம் இவ்வாறு புத்துயிர் பெறுகின்றது. மனிதவர்க்கம் மீண்டும் தெய்வத்தன்மையெனும் ஞானக் குறிக்கோளை நோக்கிச் செல்லும் பிரயாணத்தைத் தொடங்குகின்றது.

பகவானது அவதார நோக்கத்தை இந்துக்கள் கருதும் வகை இதுவே. அவர்கள் 'அவதாரம்' என்ற பெயரை இட்டதும் பொருத்தமே ; எவ்வாறெனின் அவதாரமாவது, எங்கும் நிறைந்த பரம்பொருள் கீழிறங்குதலே (அவ—கீழே ; 'திரி' எனும் வடமொழித்தாதுவுக்குத் 'தாண்டுதல்' என்பது பொருளாகும்.) பகவான் தமது திவ்விய சொரூப உலகைத் தூல வடிவங் தரித்தற்குரிய சட உலகினின்றும் பிரிக்கும் எல்லையைத் தாண்டிவருகிருர். ஜீவர்கட்கு உள்ள மறைப்பைப்போன்று, அவதார புருடர் முன்பு அறியாமைத்திரை தொங்குவதில்ல. உலக ஈசர் மாயையை முற்றும் தம்வசப்படுத்திக் கொண்டும், ஆன்ம ஞானத்தை முழுதும் ஜொலிக்கச் செய்தும் தமது தெய்விக நோக்கத்தை நிறைவேற்றும் வண்ணம் பிறப்பது போலவும் வாழ்வது போலவும் தோன்றுகிருர். அவதாரம் மேலிருந்து தெய்வத் தன்மையை வெளிப்படுத்துதலாகும் ; மனிதனே அதே தெய்வத் தன்மையைக் கீழிருந்து வெளிப்படுத்த வேண்டியவனுகிருன்.

புராணங்கள் எண்ணிறந்த அவதாரங்களைக் குறிப்பிடு கின்றன. (ஸ்ரீமத் பாகவதத்தையும் மார்க்கண்டேய புராணத்தில் 'சண்டி'யையும் காண்க.) சில அவதாரங்கள் தேவலோகத்திலே தோன்றியுள்ளனவாகச் சண்டியிற் கூறப்பட்டுள்ளது. ஆயினும் இப்புவியில் பத்து முக்கிய அவதாரங்கள் நிகழ்ந்ததாகப் புராணங்கள் உரைக்கின்றன; அவையாவன: மத்ஸ்ய (மீன்), கூர்ம (ஆமை), வராஹ (பன்றி), நரசிம்ம (மனித வடிவும் சிம்ம வடிவும் கலந்தது), வாமன (குள்ளம்), பரசுராம, ராமசந்திர, பலராம, புத்த, கல்கி யவதாரங்கள். இந்த அட்டவணையில் பகவான் ஸ்ரீ கிருஷ்ணரது பெயர் விடப்பட்டிருத்தலின், அதில் எல்லாம் கூறப்பட்டதாகக் கொள்ளல் பொருந்தாது. இனி வருங்காலத்தில் இன்னும் பல வடிவங்களோடு ஈசன் வருவான் என்று எதிர்பார்த்தலும் முறையாகும். தேசமும் காலமும் ஈசன் அவதாரமாக வருவதை வரையறை செய்யா. மனித ஸமூக முழுமையிலோ அதன் பெரும் பகுதியொன்றிலோ ஞானச் சமநிலையை மறுபடியும் நிலைநாட்டுதற்கு அவசரமான தேவை ஏற்படும்போதெல்லாம் அவதாரம் நிகழ்ந்துள்ளது. இனி வருங்காலம் முழுவதிலும் இவ்வாறே மீண்டும் மீண்டும் நிகழத்தான் செய்யும். ஈசனது அவதாரத்தைப் பற்றிய அத்தகைய ஞான நியதி உண்டென்று இந்துக்கள் நம்புகின்றனர். இக்காரணத்தால் இந்துக்கட்குப் புத்தரையும் கிறிஸ்துவையும் மகம்மதையும் அவதாரங்களாகக் கருதுவதில் யாதொரு சிரமமும் இல்லை. சரித்திர காலத்திலும் பல தலை சிறந்த ஞான புருடர்கள் இந்தியாவில் தோன்றியுள்ளனர்; அவர்களை இந்துக்கள் அவதார புருடரென மதித்தும் உள்ளனர். புத்தர் சங்கரர் சைதன்யர் இவர்கட்குள் முக்கியமானவர். நமது காலத்திலும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் (1836—1886) பலராலும் அவதாரமெனக் கருதப்பட்டு வருகின்றனர்.

பொதுமக்களிடை வழங்கிவரும் தசாவதாரங்கள் என்னும் அட்டவணையைப் பற்றி ஒருமொழி கூறுதல்

இங்கு அவசியமாகின்றது. மீன் ஆமை பன்றி நரசிங்கம் வாமனம் என்ற வடிவங்கள் காணப்படுவதால் நம்மிற் பலர் மனதில் வருத்தமடைய வேண்டிய அவசியம் இல்லை. தருக்க வழி அறிவையே பிரமாணமாகக் கொள்வோர் பலரும், உயிர்கள் பரிணாமமடைந்துவரும் முறையைப்பற்றிய ஒரு குறிப்பு இதில் காணப்படுவதாகவே கொள்கின்றனர். பரிணாம முறையையும் அது சம்பந்தமான பிறவற்றையும் பற்றி ஈண்டு நாம் கவலுதல் வேண்டாம். அவதாரங்கட்குள் மனிதப் பிறவியினும் தாழ்ந்தன இருத்தல் பற்றிச் சிறுமை யுணர்ச்சி கொள்ளவும் நமக்கு யாதொரு காரணமும் இல்லை. இந்துக்கள் ஈசனைப் பற்றிக்கொள்ளும் கருத்து இவையனைத்தையும் உள்ளடக்கும்படிப் போதிய விரிவுடையது. பொருள்கள் யாவையும் கொண்ட முழு உலகமாகவும் தம்மைத் தோற்றுவித்த ஈசருக்கு, தமது திவ்விய நோக்கத்தை நிறைவேற்றுதற்காக எவ்வடிவத்தையும் கொள்ளுதல் இயலுமன்றோ? இவ் அவதாரங்களின் காலமும் மிகப் பழமையான புராணக்கதைக் காலமெனக் கூறப்பட்டுள்ளது. அக்காலப் பகுதியைப் பற்றிய அறிவு நமக்கு ஒன்றும் இல்லையென்றே சொல்லிவிடலாம். புராணங்களின் கூற்றை மெய்ப்பிக்கவோ ஏதுகாட்டி விளக்கவோ நமது ஆற்றலை வீணாக்க வேண்டாம். இவ்வித வடிவங்களிலும் தோன்றுதல் ஈசருக்கு இயலும் என்பதை நாம் அறிவோம்; அது நமக்குப் போதியதாகும். ஈசரது வாழ்வும் செயலும் சாதாரணமானவற்றினின்றும் வேறுபட்டன. இந்த அவதாரங்கள் வெளிப் பார்வைக்குச் சாதாரணமானவை போலத் தோன்றலாம்; எனினும் அவை முற்றிலும் வேறுபட்ட மற்றொரு வகையைச் சார்ந்தன, அவை தெய்வத் தன்மை வாய்ந்தன (கீதை 4-9). இவ்வுண்மையை நன்கறிபவன் பிறவியாம் சிறையினின்றும் விடுதலை பெறுகிறான்.

சில சமயம் பகவான் ஒரு பெண்ணுடலில் அவதரித்து, ஆணுடலில் அவதரித்துள்ள ஓர் அவதாரத்தின் வாழ்க்கைத்

துணையாகத் தோன்றுவதுண்டு. ஸ்ரீ ராமச்சந்திரர்க்கு மாலையிட்ட தூய நங்கையாகிய சீதையும், ஸ்ரீ சைதன்யர்க்கு மணவாட்டியான விஷ்ணுப் பிரியையும் இந்துக்களால் அவதாரங்களாகக் கருதப்படுகின்றனர். அதுபோல் தூய அம்மையார் என்னும் பெயரோடு விளங்கும் ஸ்ரீ ராமகிருஷ்ணரது திவ்விய பத்தினியாரும் பலப்பல அடியார்களால் அவதாரமாகவே மதிக்கப்படுகின்றனர்.

இன்னும், பகவானின் அவதாரங்களன்றியும் வேறொரு வகையைச் சார்ந்த சிறப்புமிக்க ஞான புருடர்கள் இடையிடையே உலகில் தோன்றுவர் என்றும் இந்துக்கள் நம்புகின்றனர். 'ஆசாரியர்கள்' (குரவர்) என்னும் பெயர் பெறும் இப்பெரியார் சாஸ்திரங்களின் உண்மைப் பொருளைச் சரியாக விளக்கவும், மன்னுயிரை ஞான வாழ்வினில் உயர்த்தியருளவும் வருகின்றனர். அவர்கள் உயர்ந்த உலகங்களில் எங்கேனும் சாதாரணமாக வாழும் பூரணரான ஆன்மாக்கள். சில சமயங்களில் அவர்கள் ஓர் அவதார புருடரொடுவரும் பரிவாரங்களாகத் தோன்றி, அப்புருடரது தெய்விகத் திருப்பணியை நிறைவேற்றுதற்குரிய மங்களக் கருவிகளாக உதவுகின்றனர். சில சமயங்களில் அவர்கள் தெய்வத் தன்மையையும், மனித வாழ்க்கையின் நோக்கமும் பயனுமாகிய ஞானப் பேற்றையும் பற்றிய அழிவற்ற உண்மைகளைப் பரப்பும் பொருட்டுத் தெய்விக தூதர்களாகத் தனியாகவும் வருவார். பலமுறை அவர்கள் பகவானுடைய எல்லையற்ற சக்திகளில் (விபூதிகளில்) ஏதேனும் ஒன்றின் தூல வடிவங்களாகப் போற்றப்படுகின்றனர். அவர்களிடம் காணப்படும் அசாதாரணமான ஞான வாழ்வுகளும் போதனைகளும் அவர்களைத் தீர்க்கதரிசிகள் என நினைக்கவும் இடந் தருகின்றன. இவ்வகையைச் சார்ந்த மாபுருடர்களிடமிருந்து பெருகும் தெய்வ அருட் சக்தியின் (ஐச்வரியத்தின்) வளத்தைச் சிந்திக்கும்போது, இவர்கட்கும் அவதார புருடர்க்கும் வேறு

பாடு காண்பதும் அரிதாகிறது. ஸ்ரீ சங்கராசாரியாரும் ஸ்ரீ ராமானுஜாசாரியாரும் பகவானுடைய அவதாரங்களோ திவ்விய ஆசாரிய புருடர்களோ என்பதை வரையறுத்துக் கூறுதல் மனித அறிவிற்கு எட்டாத தொன்றேயாகும். ஆயினும், நமது காலத்துப் பொலிந்த சுவாமி விவேகாநந்தரும் ஆசாரிய புருடரெனும் இவ்வகுப்பினரில் அனைவர்க்கும் பிற்காலத்தவராகத் தோன்றிய ஒருவரெனப் பல அறிஞராற் கருதப்பட்டு வருகின்றனர்.

ஆக, இந்துமதம் தனது உற்பத்திக்குக் காரணமாக எந்த தீர்க்கதரிசியையும் ஒப்புக்கொள்ளாது போயினும், தீர்க்கதரிசிகள் தோன்றுங்காலத்தையும் அவர்களது பணியையும் பற்றி விவரமான நன்கு வரையறுக்கப்பட்ட கருத்துகளை உடையதாதல் தெளிவாகிறது.

சாஸ்திரங்கள்

நமது அட்டவணைப்படி ஒரு மதத்தின் இரண்டாவது இன்றியமையாத பகுதியாவது, சாஸ்திரங்களே. இது முன்னமே ஒரு தனி அத்தியாயத்தில் (மூன்றும் அத்தியாயத்தில்) கூறப்பட்டுள்ளது. ஆயினும் இந்துமத சாஸ்திரங்களின் கவர்ச்சி வாய்ந்த இயல்புகளை இந்த சந்தர்ப்பத்திலும் மீண்டும் ஒரு முறை கூறுவது பொருத்தமேயாகும்.

ஞான நூல்களைக் குறிக்கும் இந்துமத வார்த்தை 'சாஸ்திரம்' என்பது. சாஸ்திரங்களை எந்த நிலையிலிருந்து இந்துக்கள் நோக்குகின்றனர் என்பதைப் பற்றிய ஒரு குறிப்பை இவ்வார்த்தையே தருகின்றது. இம்மொழி ('கட்டளையிடுதல்' 'ஆளுதல்' என்னும் பொருள் கொண்ட) 'சாஸ்' என்னும் தாதுவின் அடியாகப் பிறந்தது ; ஒருவனை அடக்கியாள்வது எதுவோ அது—என்பதே தாதுப்பொருள். நமது சம்மதத்தை மட்டும் வேண்டி நிற்கும் அருள் மொழிகளின் தொகுதியாகவோ, கோயிற்குள்ளே இயற்ற வேண்டுவதை

மட்டும் விதிக்கும் நூல்களாகவோ இந்துமத சாஸ்திரங்கள் கருதப்படுவதில்லை. ஞான வாழ்க்கையில் நாம் முன்னேறிப் பூரணத் தன்மையை அடையும் பொருட்டு நமது வாழ்க்கை முழுவதையும் சாஸ்திரங்கள் அடக்கியாள வேண்டியனவா கின்றன.

இந்து சாஸ்திரங்களில் முதன்மை வாய்ந்தன வேதங்கள். வேதங்களை அருளாற் பெறப்பட்ட நூல்களாக மட்டும் இந்துக்கள் கருதுவதில்லை யென்பது இவ்விடத்தில் மீண்டும் குறிப்பிடத்தக்கது. 'வேதங்கள்' என்ற பதம் நித்திய மாக இருந்துவரும் ஆன்மிய (பாரமார்த்திக) உண்மைகளின் முழுத் தொகுதியையும் குறிக்கும். இவை முற்றிலும் மனித சம்பந்தம் அற்றன. இவற்றிற் சிலவற்றை இருடியர் கண்டு பிடித்தனர்; அவை வேதங்களெனப் பலராலும் கூறப்படும் நூல்களில் குறித்து வைக்கப்பட்டிருப்பதை நாம் காண்கிறோம். பாரமார்த்திக உண்மைகள் எங்கேனும் என்றைக் கேனும் கண்டுபிடிக்கப்பட்டிருப்பினும் அங்கே அப்போது வேதங்களின் ஒரு பகுதியே வெளியிடப்பட்டுள்ளது என்க; ஏனெனில், வேதங்கள் என்னும்போது பாரமார்த்திக உண்மைகளின் முழுத் தொகுதியும் குறிக்கப்படும். இக்காரணத் தால் அவை அந்த ஆதிக் கருத்தின்படி ஒரு வகுப்பினர்க்கோ ஸமூகத்தினர்க்கோ உரியனவாகா. அவை மனித ஸமூக முழுமைக்கும் உரியன. மேலும், குறிப்பிட்ட ஒரு காலம் எதற்கும் அவை உரியனவல்ல, அவை நித்தியமானவை. அவற்றிற் சில பகுதிகளே கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. வேறு சில வருங்காலத்தே வெளியிடப்படலாம். யார் அறிவார்?

இந்து சாஸ்திரங்களைப் பற்றிக் குறிப்பிடவேண்டிய மூன்றாவது விஷயமாவது: அவை பலவாயுள்ளன; சுருதி ஸ்மிருதி தரிசனம் இதிகாசம் புராணம் தந்திரம் முதலிய வெல்லாம் சாஸ்திரங்கள். சூக்குமமான ஞான உண்மைகளை ஒவ்வொருவரது அறிவின் எல்லைக்குட் கொண்டு வரு

தற்காக, அவை பற்பல சாஸ்திரங்களில் பற்பல வகையாக உணர்த்தப்படுகின்றன. இன்னும், ஒரே முடிவிடத்தை யணுகுதற்குரிய பற்பல வழிகளை இவற்றிற் சில வற்புறுத்து கின்றன.

ஸ்மிருதிகளைப் பற்றியும் ஒரு வார்த்தை உரைக்கலாம். தனி வாழ்க்கைக்கும் சமூக வாழ்க்கைக்கும் உரிய நடத்தை சம்பந்தமான சட்ட திட்டங்களை எடுத்துரைக்கும் ஸ்மிருதி கள் நித்தியமான மதிப்பைப் பெறுவனவல்ல. ஸமூக வாழ்க் கையின் நிலைமைகள் மாறுபடுதற் கேற்றவாறு அவையும் மாறுபடுவன. அம்மாதிரியான அவசியம் ஏதேனும் ஏற்படும் போதெல்லாம், தனிச்சிறப்பு வாய்ந்த ஞானியர் அத்தகைய புது ஸ்மிருதிகளை மாற்றியமைத்துத் தருவதற்காகப் பிறக் கின்றனர். அவை மாறிவரினும், சுருதிகளில் வெளியிடப் படும் அடிப்படை உண்மைகட்கு எப்போதும் ஒத்து அமைய வேண்டியது கட்டாயமாகும்.

இந்து சாஸ்திரங்களைப் பற்றிய இந்த ஒரு சில குறிப்பு கள் நாம் கைக்கொண்டுள்ள காரியத்திற்குப் போது மானவை.

## 15

## ஈசுவரன்

நமது அட்டவணையில் அமைந்த மூன்றுவது இன்றி யமையாத பகுதி ஞான (பாரமார்த்திக) உண்மைகள். ஈசன் இயற்கை ஆன்மா எனும் மூன்று பொருள்களையும் பற்றி சாஸ்திரங்களால் வெளியிடப்பட்டுள்ளனவும், இந்து மத இருடியர் தம் அனுபூதியால் உணர்ந்தனவும், ஆன எல்லாவற் யும் இது அடக்கிக்கொண்டுள்ளது.

இந்து மதத்தினர் வணங்கும் தேவதைகள் இலக்ஷக் கணக்காயிருப்பினும், இந்துக்களின் கொள்கைப்படி ஈசுவரர் ஒருவரேதான். உண்மையைச் சொல்லின் அவர் ஒருவரே

மெய்ப்பொருளாவர். அவர் உண்மையில் எப்படி இருப்ப வர் என்பதை எவராலும் உரைக்கவோ நினைக்கவோ முடியாது. அது மனம் வாக்கு இரண்டையும் கடந்தது (அவாங் மனகோசரம்). மனமும் வாக்கும் எதைத் தேட முயன்று அடையப் பெருது மீளுகின்றனவோ என்று தைத்திரிய உபநிடதம் (2-9) கூறுகின்றது.

நாம் அறிந்த எப்பொருளையும் போன்றவரல்லர் ஈசர் என்பது உறுதி. இயற்கையிலுள்ள பொருள்கள் தேச காலங்களில் உள்ளன. காரண-காரிய நியதியின்படி ஓயாத மாறுதலுக்கு உட்பட்டன. அவற்றிற்குப் பிறப்பு வளர்ச்சி இறப்பு இம்மூன்றும் உண்டு. அவை பகுதிகளால் ஆக்கப் பட்டுள்ளன; கண்டப் பொருள்கள் ஆதலின் அழிவடையும் இயல்பின. ஆனுல் பரம்பொருளான பிரம்மனே அகண்ட மான ஒரே முழுமை; தேசகால நிமித்தங்கட்கு அப்பாற் பட்டது. அவர் மாருதவர், நித்தியமானவர், என்றும் விடு பட்டவர், எல்லையற்றவர், நமது புலன்களின் எல்லையைக் கடந்தவர். எந்த உருவமோ குணமோ அவரை வரை யறைக்கு உட்படுத்த மாட்டாது (பிருஹ. உபநி 3–8–8); அவர் அனைத்திற்கும் அதீதமானவர். 'நேதி, நேதி' (இது வன்று, இதுவன்று) என்று மட்டும்தான் அவரைப்பற்றிக் கூறலாகும்.

இதுவே சாஸ்திரங்களாற் கூறப்படும் பரப்பிரம்மன் ஏன்பது; அது நமது அறிவுக்குட்பட்ட எதனையும்போன்ற தன்று எனினும், வெறும் சூன்யமுமன்று, சடப் பொருளு மன்று. அது ஸத் சித் ஆனந்தத்தின் ஸாரமேயாகும். இவ் வாறே இந்து சாஸ்திரங்கள் பரப்பிரம்மத்தைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. இப்பிரபஞ்சம் ஆரம்பத்தில் ஸத்தாக மட்டும் இருந்தது. இரண்டாவதற்ற ஏகப் பொருளாக மட்டும் இருந்தது. (சாந்தோ. உபநி. 6–2–1). பிரம்மன், ஸத்யம் ஞானம் அனந்தம் (தைத். உபநி. 2–1–3). பிரம்மன், ஞானம் ஆனந்தம் (பிருஹ. உபநி. 3–9–28). சூரியன் சந்தி

ரன் நக்ஷத்திரங்கள் மின்னல் தீ—இவற்றில் யாதொன்றின் ஒளியும் பரம்பொருளைக் கிட்டுவதில்லை; அப்பொருள் ஒளிரும் போது, ஒளிதரும் பொருள்களாகிய இவையாவும் ஒளிரும்; அப்பொருளின் ஒளியால் இப்பிரபஞ்சம் விளங்குகிறது (கட. உபநி. 2-2–15). அவரது சைதன்ய (அறிவு) ஒளியினால் நாம் ஒவ்வொன்றின் இருப்பையும் உணர்பவராகிறோம். அவர் நமது செவிகட்கும் செவியாவார், நமது மனத்திற்கு மனமாவார், இதே போன்று பிறவுமாவார் என்று கூறப்படுகிறார் (கட. உபநி. 1–2). உண்மையில் அவர் நம்முள் உள்ள எல்லாப் பொருள்கட்கும் உட்பொருளாவார்; அவரது சைதன்யத்தின் பரிசத்தாலே (அறிவொளி தொடுதலின் பயனாகவே) உடலும் மனமும் இந்திரியங்களும் ஆகியவற்றின் எண்ணிறந்த சிறுதொகுதிகள் ஜீவர்களாகவும் கருத்தாக்களாகவும் போக்தாக்களாகவும் ஒழுகி வருகின்றன (கட. உபநி. 1–3-4).

ஆயினும் சாஸ்திரங்களின் உரைகளாகிய இவை யாவும் பரப்பிரம்மத்தை உள்ளவாறு உரைப்பனவாகா, உரைக்கக் கூடியவையுமாகா. மிகுத்துக் கூறுவோமாயின், பரப்பிரம்மமென்னும் மகத்தான உண்மையை ஒருவாறு குறிப்பிடும் சாடைகளே யாகும். 'அலைகளின் முழக்கத்தை என்னென்பது!' என்னும் போது கடலைக் கண்டிராதவன் மனக்கண்ணால் அதனை அறியமுடியாதது போல், சாஸ்திரங்களிற் காணப்படும் இவ்வுரைகள் யாவும் பரப்பிரம்மத்தின் தன்மையினை இன்னதென அறியச் செய்ய மாட்டா. இவற்றினின்றும் நாம் அறியக் கிடப்பதெல்லாம் இதுவொன்றே; நிர்க்குணப் பிரம்மன் சூன்யமன்று, சடமும் அன்று; இயற்கையிலுள்ள ஒவ்வொரு பொருளுக்கும் அனுபவத்திற்கும் மூலமும் ஆதாரமும் அதுவே; அது இரண்டாவதற்ற ஏகப் பொருள். 'நான்' 'நீ' என்பவையும் இல்லை. அறிபவனும் இல்லை, அறியப்படு பொருளும் இல்லை. பரப்பிரம்மன் ஈசனின் நிர்க்குண வடிவம் ஆதலின், சாஸ்திரங்கள் அப்பொருளை 'அது' என்று கூறுவதல்லாது, 'அவன்' 'அவள்' என்று குறிப்பிடுவதில்லை.

அத்தகைய மெய்ப்பொருளே இப்படைப்புக்கு மூல மாகும் என்பது இந்து சாஸ்திரங்களின் கொள்கையாம். பிரபஞ்சம் பிரம்மனிடமிருந்து தோன்றி, அவரிடமே தங்கி, அவரிடமே லயமடைகின்றது. சிலந்தி தன்னுள்ளிருந்தே வலையை வெளிப்படுத்தித் தன்னுள்ளே இழுத்துக்கொள் வது போன்றே, ஈசரும் பிரபஞ்சத்தை அங்ஙனமே செய் கின்றார். மரங்களும் செடிகளும் பூமியினின்றும் வெளிக் கிளம்புவது போலும், ஒருவனது உடலிலிருந்து உரோமம் வெளியே முளைப்பது போலவும், பிரபஞ்சம் ஈசனிடமிருந்து வெளிவருகின்றது (முண்ட. உபநி. 1–1–7). அவர் இயற் கை முழுமையிலும் பரவியுள்ளார்; இயற்கையில் உள்ள ஒவ்வொன்றும் பிரம்மனிடத்தும் பிரம்மத்தின் வாயிலாகவும் தன் இருப்பைப் பெறுகிறது (ஈசா. உபநி. 1; பிருஹ. உபநி. 3–8–4, 11). ஈசர் சூன்யத்திலிருந்து உலகத்தைப் படைக்க வில்லை. அவர் தம்மிடமிருந்தே அதை வெளிப்படுத்தினார். இவர் இப்பிரபஞ்சத்திற்கு உபாதான காரணமும் நிமித்த காரணமும் ஆவர், (குடத்திற்கு மண் உபாதான காரணம். குயவன் நிமித்த காரணம்).

ஆனால் இப்பிரபஞ்சம் (பிரம்மாண்டம்) அவரது இருப்பு முழுவதையும் அடைத்துக் கொள்வதில்லை. அது அவரிடத்து உள்ளது என்பதில் ஐயமில்லை. ஆயினும் அவர் நித்தியமாக அதனின்றும் வேறாகவும் விலகியும் உள்ளார். அவரது இருப்பில் ஒரு கூற்றில் (பங்கில்) பிரபஞ்சம் தங்கி நிற்கின் றது என்று சாஸ்திரங்கள் உரைக்கும்போது, இப்பொருளே குறிக்கப்படுகிறது (ரிக் வேதம் 10–90–3; கீதை 10–42; பிருஹ. உபநி. 10–9–26).

ஆக நமது சாஸ்திரங்கள் ஈசனைப் பரப்பிரம்ம மாகவும் அந்தர்யாமியாகவும் இருவகையாகவும் கூறுகின்றன. அவர் அருவமானவர், விகாரமற்றவர்; ஆயினும் இயற்கையில் நிகழும் எண்ணற்ற ஓயாத விகாரங்கள் அனைத்திற்கும்

அவரே ஆதாரமானவர். அந்தர்யாமியான பொருளின் வல்லமையுற்ற ஆட்சிக்கு உட்பட்டே இயற்கையில் ஒவ்வொன்றும் அததற்குரிய இடத்தில் அமைந்துள்ளது, ஒவ்வொரு செயலும் ஒழுங்காகின்றது, எங்கும் முறையும் ஒற்றுமையும் குலையாது நிலவுகின்றன (பிருஹ. உபநி. 3-8-9). இந்திரியங்களாலும் மனத்தாலும் புத்தியாலும் ஒருகாலும் அறிய வொண்ணுத பரப்பிரம்மனே ஒவ்வொரு பொருளிலும் உள்ளுறைந்து, உண்ணின்று அதனை அடக்கி வருகின்றது. அவரே அந்தர்யாமியாயும், நமது ஆத்மாவாகவும் உள்ளார்.

பிரபஞ்சம் ஒருவனது உணர்வைவிட்டு நழுவும் போது—உதாரணமாக, நிர்விகற்ப சமாதிநிலையில் அவ்வாறு நிகழும் போது—அப்பரம்பொருள் நிர்க்குண நிராகாரப் பிரம்மனாக உணரப்படுகிறது. ஆனால் நாம் பிரபஞ்சத்தை உணரும் வரையும் அதே பிரம்மன் அதனைத் தோற்றுவிப்பவராகவும் ஆளுபவராகவும் தோன்றுகிறார்; அப்போது நாம் அவரைச் ‘சக்தி’ என்றும் ‘ஈசுவரன்’ என்றும் பெயரிட்டு அழைக்கிறோம். பிரம்மனும் சக்தியும் ஒன்றை விட்டொன்று பிரிக்க முடியாதன, இவை ஒரே உண்மைப் பொருளின் வெவ்வேறான பகுதிகள் ஆகும். எரியும் சக்தியைத் தீயினின்றும் பிரிக்க ஒண்ணுதவாறு போல, ஆகும் (மாறும்) திறமையாகிய சக்தியைப் பிரம்மனிடத்தினின்றும் பிரிக்கவொண்ணுது. அசையாப் பாம்புக்கும் அசையும் பாம்புக்கும் பொருள் வேறுபாடு இல்லாதது போல, பிரம்மனுக்கும் சக்திக்கும் வேறுபாடு இல்லை. ஒருவனது உடல் அமைந்திருக்கும் நிலை மாறுவதால் அவன் மாறுதிருப்பது போல், ஈசுவரனது நிலைவேறுபாடு பிரம்மன் என்னும் பொருளை மாற்றுவதில்லை.

பிரம்மனின் ஸகுண நிலையையே நாம் சக்தியென்றே ஈசுவரன் என்றே கூறுகிறோம். படைக்கும் முதல்வனான ஈசுவரன் ஸகுணப் பரம்பொருள், அவர் பிரபஞ்சம் எங்

கும் பரந்துள்ளவரும், அதற்குப் பரம தலைவரும் ஆவார். ஸகுணப்பிரம்மனின் உயர்வற உயர்ந்த நிலையே சாஸ்திரங்களில் நிர்க்குணப் பிரம்மன் எனக் கூறப் பட்டுள்ளது. (‘தத்விஷ்ணோ: பரமம் பதம்’). ஸ்ரீ கிருஷ்ணர் கீதையில் “அது எனது பரமமான உறைவிடம்” என்கிறார். (கீதை 15—6)

ஆயினும் மதங்களிற் பொரும்பாலன குறிக்கும் பரம் பொருள் ஸகுணப்பிரம்மமாகிய ஈசுவரரே. அவர் நிராகாரம் (அருவம்) ஆவார்; தமது எல்லாம் வல்ல சங்கற்பத்தால் இப்பிரபஞ்சமாகவும் அதிலுள்ள அனைத்துப் பொருள்களாகவும் தம்மை வெளித்தோற்றுவிக்கிறார். இது அவரது திருவிளையாடல் (லீலை). அவரே தந்தையும் தாயும் நியமிப்பவரும் படைப்பவரும் ஆவார்; அவரே நெறியும் குறியும் புகலிடமும் நலம் நினைப்பவரும்; அவரே அனைத்திற்கும் ஆதியும் அந்தமும் தங்கும் இடமும்: அவரே பிரபஞ்சத்தின் அழியாத வித்தாவார் (கீதை. 9—17, 18). அவர் மாறுவனவும் மாறாதனவும் ஆகிய அனைத்தையும் தாண்டி நிற்கின்றார்; அனைத்திற்குள்ளும் புகுந்து, கேடற்ற ஈசுவரனாகவும், புருஷோத்தமனாகவும் அனைத்தையும் தரிக்கிறார் (கீதை. 15—17, 18). ஈசனை வணங்குபவர் எவரும் அவரை மட்டுமே வணங்குகிறார்.

இந்து சாஸ்திரங்களின்படி, (அருவமான) நிராகார ஈசுவரர் தமது மாயையால் பல வகைப்பட்ட வடிவங்களைக் கொள்ளுகிறார். உண்மையுரைக்கின், எல்லா நாமங்களும் உருவங்களும் அவருடையனவேயாம். இது தவிரவும், அவர்க்குப் பல திவ்விய வடிவங்களும் உள; அவற்றில் யாதேனும் ஒன்றில் அவரைத் தூய ஆன்மாக்கள் தரிசிக்கலாம். இவ் வடிவங்கள் பற்பல உடைவரிசைகளைப் போன்றன; உடைகட்குள் விளங்கும் பரம்பொருள் எப்போதும் ஒன்றே. அவர் இவ்வடிவங்களை அணிந்து கொள்வது, அவர் தம்மை

யாரும் எளிதே அணுகலாம்படி ஆக்கிச் சொல்வதற்கே யாம். அதுபோன்ற அவர் பல அவதார வடிவங்களிலும் தோன்றுகிறார்.

ஆக இந்து சாஸ்திரங்களின்படி, ஈசுவரர் ஒருவராயினும் ஒருவர்மட்டுமே ஆயினும் அவர் பலவாகத் தோன்றுகிறார். அவர் முற்றும் நிராகாரமாயினும் (அருவமாயினும்), எண் ணிறந்த வடிவங்கள் வழியாகக் காட்சியளிக்கிறார். அவர் நிர்க்குணமாயினும், எல்லாக் குணங்கட்கும் மூலமும் ஆதார மும் ஆகிறார். அவர் நிர்குணமும், ஸகுணமும் ஆகிறார். ஸகுணமாக அவரை வணங்குவது போன்றே, நிராகாரப் பொருளாகவும், கணக்கற்ற பெயர்களோடும் வடிவங்களோ டும் (நாம ரூபங்களோடும்) அவர் வணங்கப்படுகிறார். இக் காரணத்தால் அல்லா, பகவான் எனும் இரு பெயர்களையும் கூட, பிரபஞ்சத்தின் ஒரே கருத்தாவாகிய ஈசுவரன் என்ப வரைக் குறிக்கும் இரு மொழிகளன்றி வேறல்ல என்று கருதுவது இந்துக்கட்கு இயல்பாகின்றது.

ஆயினும், இந்துக்களுக்குள் ஈசுவரனின் நிலைகள் பலவற் றில் யாதேனும் ஒன்றைத் தெரிந்தெடுத்துக்கொள்ளும் வசதி அமைந்துள்ளது. வெவ்வேறு மதப்பிரிவினர் (சம்பிரதாயத் தினர்) வெவ்வேறு கட்டுப்பாடான கொள்கைகளைப் பற்றி நிற்கின்றனர். சிலர் ஈசுவரரை நிராகாரமாகவும் நிர்க்குண ராகவும் கருதுகின்றனர்; சிலர் நிராகாரமாகவும் ஸகுணமாக வும் நம்புகின்றனர்; வேறு சிலர் அழிவற்ற உருவமும் குண மும் உடையவராக (ஸாகார ஸகுணமாக) நினைக்கின்றனர். கடைசி வகுப்பினர்க்குள்ளும் வெவ்வேறு வடிவங்களைத் தேர்ந்து வழிபடுவதற்கு ஏற்றவாறு பல உட்பிரிவுகள் காணப் படுகின்றன. உதாரணமாகச் சிலர் சைவராவார், சிலர் வைண வராவார், சிலர் சாக்தராவார், இன்னும் பிறவுமாவார்.

ஈசுவரரும் அவர்தம் மகிமைகளும் அனந்தமாதலின் அவரை அணுகும் வழிகளும் எண்ணிறந்தனவாகலாம்.

ஆதலின் இந்து ஸமூகம் ஈசுவரரின் நிலைகளில் யாதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுப்பதற்கு ஏற்ப, பலப்பல மதப்பிரிவு களாகவும் உட்பிரிவுகளாகவும் பகுக்கப்படுவது இயல்பே தான். மக்கட்கு அவரவரது சுவைகட்கும் இயல்புகட்கும் திறமைகட்கும் தக்கவாறு இறைவனை அணுகும் வழிகள் பலவற்றைத் திறந்து வைத்திருத்தல் இந்து மதத்தின் வளத் தையே காட்டுகிறது. ஆயினும் எந்தப் பிரிவும் தனது நோக்குநிலையொன்றே சரியானதென உரிமை கொண்டாடு தல் தகாது. இதனால் விளையும் சமயச் சண்டைகள் இந்து ஸமூகத்தாரின் வலிமையையும் ஒற்றுமையையும் அழித்து விடுவன. அதனால் பகையும் பொறாமையும் விளைகின்றன. அவை ஞானத்திற்கு முற்றும் மாறானவையல்லவா?

ஈசுவரர் உண்மையில் இன்னவாறு உள்ளனர் என்பதை மனத்தாலோ வாக்காலோ ஒருகாலும் வகுத்துரைக்க ஒண்ணாது என்னும் பேருண்மையினை வேத இருடியர் உணர்ந் திருந்தனர். பல்வேறு மதப்பிரிவுகளும் மதங்களும் அவரைப் பற்றிக் கூறியன யாவும் அவரது இயல்பை உரைத்து முடி வாக்கி விட்டன என்பதன்று. அவர் இவையனைத்தும் ஆவ தன்றி இன்னும் அதிகமாயும் உளர். ஒவ்வொரு மதமோ மதப்பிரிவோ, யாதோ ஒரு குறிப்பிட்ட நிலையிலிருந்து அதே மெய்ப்பொருளை நோக்கிப் பெற்ற காட்சியைப் பற்றி நிற்கி றது. ஒவ்வொரு காட்சியும் அதற்குக் கிட்டியமட்டில் சரி யானதே; ஆனால், மனம் வாக்குகளைத் தாண்டிநிற்கும் அவரைப் பற்றிய முழு உண்மையையும் உரைக்க இயலாது என்பது உறுதி. ரிக்வேதம் கூறுவதாவது: "உள்ளது ஒன்றே, உரவோர் அதனைப் பல பெயர்களால் அழைப்பர்" (ரிக்வேதம். *1—164–46*)

ஸ்ரீ ராமகிருஷ்ணர் இப்பொருளைப் பின்வரும் இனிய உவமைக் கதைகளால் தெளிய வைப்பதுண்டு.

'நான்கு குருடர்கள் ஒரு யானையை அறிவதற்காகப் புறப்பட்டார்கள். ஒருவன் யானையின் காலைத் தொட்டுப்

பார்த்து, "யானை ஒரு தூண் போன்றது" என்றான். இரண்டாமவன் யானையின் துதிக்கையைத் தடவிப் பார்த்து "யானை ஒரு கனத்த தடி போன்றது" என்றான். மூன்றும வன் அதன் வயிற்றைத் தடவி "யானை ஒரு பெரும் ஜாடி போன்றது என்றான். நாலாமவன் அதன் காதுகளைத் தட விப் பார்த்து "யானை ஒரு பெருமுறம் போன்றது" என்றான். இவ்வாறு அவர்கள் தமக்குள்ளே அதைப்பற்றி வழக்கிடத் தொடங்கினர்கள். ஒரு வழிப்போக்கன் அவ்வாறு அவர்கள் சண்டையிடுவதைக் கண்டு "நீங்கள் எதைப்பற்றி வழக்காடு கின்றீர்கள்?" என்றான். அப்போது அவர்கள் விஷயத் தைக் கூறி, அவனை மத்யஸ்தனுயிருந்து வழக்கைத் தீர்க்கு மாறு வேண்டினர். அம்மனிதனும், "உங்களில் எவரும் யானையைக் கண்டவரல்லர். யானை ஒரு தூண் போன்ற தன்று, அதன் கால்கள் தூண்களைப் பேரன்றன. அது ஒரு முறம் போன்றதன்று, அதன் காதுகள் முறம் போன்றன. அது ஒரு கனத்த தடி போன்றதன்று, அதன் துதிக்கை ஒரு தடி போன்றது. யானை, அதன் கால்கள், வயிறு, துதிக்கை ஆகிய இவையனைத்தும் ஒன்றாய் இணைந்த ஒன்று" என்று கூறினன். இம்மாதிரியே தெய்வத்தின் ஒரு பகுதியை மட் டும் கண்டவர் யாரும் தமக்குள்ளே சண்டையிடுகின்றனர். (ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேச மொழிகள். பக்கம் 287).

இரண்டு மனிதர் ஓர் ஓந்தியின் நிறத்தைப் பற்றிச் சூடாக வாதம் புரிந்து கொண்டிருந்தனர். ஒருவன் "அப் பனை மரத்திலுள்ள ஓந்தி அழகிய சிவந்த வண்ணமுடை யது" என்றான். மற்ரெருவன் அவனை மறுத்து "நீ சொல் வது தவறு. அந்த ஓந்தி சிவப்பன்று, நீலமானது" என்று கூறினன். இருவரும் தமக்குள்ளே வழக்காடி முடிவு செய்ய இயலாமையால், அம்மரத்தடியே எப்போதும் வாழ்ந்துவந்தவரும், அந்த ஓந்தியின் எல்லா நிறமாறுதல் களையும் கவனித்து வந்தவருமான ஒருவரிடம் சென்றனர். வழக்காடியவரில் ஒருவன் "ஐயா! அம்மரத்திலுள்ள ஓந்தி

யின் நிறம் சிவப்பன்றோ?'' என்று வினவினான். ''ஆம், ஐய'' என்று மறுமொழியளித்தார். மற்றொரு வழக்காளி, ''நீர் என்ன சொல்லுகிறீர்? அது எப்படி? நிச்சயமாகவே அது சிவப்பன்று, நீலமானது'' என்றான். அம்மனிதர் மறுபடியும் தாழ்மையாக ''ஆம் ஐய'' என்று பதிலுரைத்தார். அம்மனிதர்க்கு ஓந்தியின் நிறம் அடிக்கடி மாறும் என்பது தெரியும். அதனால் அவர் மாறுபடக் கூடிய இருவர்க்கும் ''ஆம்'' என்று மறுமொழி கூறினர். சச்சிதாநந்தப் பரம்பொருள் இம்மாதிரியே பல வடிவங்களை உடையது. ஈசுவரரை ஒரு நிலையில் மட்டும் கண்டிருப்பவன் அதுவொன்றையே அறிவான். பலவித நிலைகளிலும் அவரைக் கண்டிருப்பவன் மட்டும் ''இவ்வெல்லா வடிவங்களும் ஒரே ஈசுவரனுக்குரியன; ஏனெனில் இறைவன் பலப்பல வடிவங்களையுடையவன்'' என்று சொல்லக்கூடும். அவர் உருவுடையவர், அருவமுமாவார். அவருடைய வடிவங்கள் அநேகம். அவற்றை யாரறிவார்?'' (ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேச மொழிகள். பக்கம் 207).

இவ்வுபமானங்கள் மூலமாக, ஸ்ரீ ராமகிருஷ்ணர், பற்பல மதப்பிரிவினர் கூறும் பலப்பல கருத்துகளும் ஈசுவரரைப் பற்றியவரை உண்மையானவை யெனினும், அவரது தனித்தனிப் பகுதியைச் சார்ந்தனவாம் என்பதை எடுத்துக் காட்டியுள்ளார்.

இந்துக்கள் கோடிக்கணக்கான தெய்வங்களை வழிபடும் காரணத்தையும் இதுவே விளக்கிக் காட்டுகின்றது. இத்தெய்வங்களிற் பல ஒரே ஈசுவரனின் பற்பல வடிவங்களே யாவன. மற்றவைகளிற் பல அவரது எல்லையற்ற விபூதிகளில் (சக்திகளில்) ஒன்றையோ வேறொன்றையோ குறிப்பன. இவற்றில் எதையும் வணங்குவதால் அதே ஈசுவரன் வணங்கப்படுகிறான்.

ஏனையவை தேவதைகள், உயர்ந்த பதவிகளை வகிக்கும் படைக்கப்பட்ட உயிர்களே அவர்கள். அவர்கள் இப்பூமி

யில் இயற்றிய புண்ணியச் செயல்களின் பயனாக அந்நிலைக்கு உயர்த்தப்பட்டவர். அவர்கட்குள் உயர்ந்தவர் முதன் முதற் படைக்கப்பட்ட உயிராகிய இரணிய கர்ப்பரேயாவார். அவர் அண்டம் முழுதும் நிறைந்துள்ள அறிவாவார். அவர்க்கு விபூதிகள் (சக்திகள்) எல்லையற்றன; ஏனெனில் தோன்றி யுள்ள அனைத்தும் அவரிடம் அடங்கியுள்ளன. அக்னி, ஆதித்யன் முதலான மற்ற தேவதைகளும் அவரது சக்தி களில் ஒன்றையோ வேறொன்றையோ குறிக்கின்றனர். இச் சக்திகள் வரம்பற்றனவாதலின், தேவதைகளும் அளவற்ற வராவர். ஆனால் அவர் யாவரும் இரணியகர்ப்பர் எனும் ஒரே தேவரிடத்தில் அடங்கிவிடுகின்றனர். (பிருஹ. உபநி. 3-9-9 ஓடு ஒப்பிக). இத்தேவர்களில் ஒருவரை வணங்குவ தனால் அவர்கள் எல்லோரும் வணங்கப்படுபவராவர். இந்த இரணியகர்ப்பர் அண்டத்தின் தலைவராயினும், மகிமை பெற்ற ஜீவரே யாவர். ஆதலால் இத்தேவதைகளையும், அழி வற்றவரும் அனைத்திற்கும் எஜமானரும் ஆகிய ஈசுவரரை யும் ஒன்றாக எண்ணி ஒருகாலும், மயக்கமடையக் கூடாது. ஒரு மனிதனை அவரது அறிகுறியாக வழிபடுதல்போல், அவர்களையும் ஈசுவரனின் குறிகளாக (பிரதிகைகளாக) உப யோகித்துக் கொள்ளலாம்.

ஆக, ஈசுவரனுக்கும் தேவர்களுக்கும் உள்ள எண்ணி றந்த பலவகைப்பட்ட வடிவங்கட்கு மத்தியிலும் இந்துமதம் அடிப்படையான ஏகபரம்பொருளின் காட்சியை ஊட்டி வருகின்றது.

# 16

# பிரம்மாண்டம்

## இயற்கை

### சூக்குமம்

பிரம்மாண்டம் (பிரபஞ்சம்) ஒரு குறிப்பிட்ட காலத்தில் தொடங்கினதன்று, அது அநாதி என்பது இந்து மதக் கொள்கை. அது மாறி மாறி ஒழுங்காகத் தோன்றியும் மறைந்தும் வந்துகொண்டிருக்கின்றது. அது உண்டாகிறது, சிறிது காலம் இருக்கின்றது, பின்பு மறைந்து விடுகின்றது. இம்மூன்று நிலைகளும் சிருஷ்டி (தோற்றம்) ஸ்திதி (இருப்பு) பிரளயம் (ஒடுக்கம்) என முறையே பெயர் பெறும். இம் மூன்று செயல்களும் நித்தியமாக மாறிமாறி நிகழ்ந்து கொண்டேயிருப்பனவாம்.

முற்கூறியதைப் போன்ற ஒரு நிகழ்ச்சி நம்மனைவராலும் ஏறக்குறைய நித்தமும் அனுபவிக்கப்பட்டு வருகின்றது. நாம் விழிப்பு உறக்கம் எனும் நிலைகள் வழியாகச் செல்லும்போது, பிரம்மாண்டமும் மாறி மாறித் தோன்றவும் மறையவும் செய்கிறது. சுழுத்தியில் (ஆழ்ந்த உறக்கத்தில்) தனி மனிதன் ஒருவனது மனத்திற்கு அது இல்லாது ஒழிகிறது. இதுவும் பிரளயம் எனப்படும். ஆனால் உறங்கும் நிலையிலுள்ள மனிதரின் உணர்வால் இது வரையறுக்கப்பட்டிருப்பது கருதத் தக்கது. உறக்கத்தில் நிகழும் இந்தத் தாற்காலிக ஒடுக்கம் நித்திரை எனப்படும்.

இனி, படைப்புக்குட்பட்ட தனி மனிதர்கள் அனைவரும் ஒரே சமயம் உறங்கிவிடுவாராயின் என்ன நிகழும் என்பதைக் கவனிப்போம். அப்போது ஒருவரும் உலகினைப்பற்றிய உணர்ச்சியை உடையவராகார். அது முற்றும் இல்லாதொழியும். அத்தகைய நிகழ்ச்சி உண்மையாகவே நிகழ்கின்றது என்று இந்துமதம் கருதுகிறது. எல்லா மனங்களின்

தொகுதியே அண்டமுழுதும் பரந்த மனமாகும்; இம்மனம் ஒரு தேவதைக்குரியது. இத்தேவதையே எல்லையற்ற சக்திகளோடு முதல் முதலாகத் தோன்றிய புருடராவார். அவரை இரண்யகர்ப்பர், ஸூத்திராத்மா, அபரப்பிரம்மன், மஹத்பிரம்மன், பிராணன் என்னும் பல பெயர்களால் உபநிடதங்கள் குறிப்பிடுகின்றன. அவர் சில சமயம் ஒருவகையான ஈசுவர வடிவமாகும் நிலைக்கு உயர்த்தப்படுவர்; அப்போது புராணங்கள் அவரைப் பிரம்மாவென்றழைக்கும். எல்லா மனங்களையும் தொகுதியாகக் கொண்ட பிரம்மா உறங்கும்போது, நைமித்திகப் பிரளயம் உண்டாகிறது. அவர் விழிக்கும்போது, பிரம்மாண்டம் வெளித்தோன்றுகிறது; இது சிருஷ்டி எனப்படும். சிருஷ்டி ஸ்திதி என்பவற்றின் காலங்கள் பிரம்மாவின் பகற்காலத்திற்கும், பிரளயம் அவரது இரவுக்காலத்துக்கும் நேராகும் (ஒப்பிடுக: கீதை. 8, 17—19)

நாம் உறங்கச் செல்லும்போது உண்மையாகவே நடப்பது யாது? அதை நாம் கண்டு பிடிக்கக்கூடுமாயின், பிரளயத்தில் நிகழ்வதைப்பற்றிய ஒரு குறிப்பை நமக்குத்தரும். அயர்ந்த உறக்கத்தில் நாம ரூபங்களோடு கூடிய எதன் இருப்பையும் நாம் உணராதவர் ஆகிறோம். புற உலகத்தைப் பற்றியோ நம் தனி இருப்பைப்பற்றிய விவரங்களைப் பற்றியோ யாதொரு அறிகுறியும் மிஞ்சுவதில்லை. செயலோ அனுபவமோ நினைவோ ஆசையோ யாதொன்றும் அங்கில்லை. அது கிட்டத்தட்டப் பூரண சூனியமாயிருக்கிறது. அப்போது நம் நாமங்களையும் உருவங்களையும் வீடுகளையும் தொழில்களையும்—அனைத்தையும் நாம் மறந்து விடுகிறோம். ஆனால் நாம் விழித்ததும் இவையனைத்தும் மீண்டும் நமது உணர்விற்கு வந்து விடுகிறது. அவ்வளவு காலமும் அவை எங்கே சென்றிருந்தன? உறக்கத்தில் அவை முழுதும் அழிவடையவில்லை என்பது வெளிப்படை. நினைவுகள்

ஆசைகள் ஆகிய யாவும் மனதிலே உள்ளடங்கிய நிலையிலே ஸம்ஸ்காரங்கள் (சூக்குமப் பதிவுகளாக) வடிவமாக நிச்சய மாக அங்கு உள்ளன என்பது இந்துமதக் கொள்கை; அங்ஙனம் இல்லையாயின், விழித்ததும் அவை மறுபடியும் தோன்றமாட்டா. உறங்கும்போது எவ்வண்ணமோ அவை வெளித் தோன்றாத ஒரு நிலைக்குக் கொண்டுவரப்பட்டு,உறக் கம் தீர்ந்த பின் மறுபடியும் வெளித் தோன்றுகின்றன.

ஒரு பெரு மரத்தின் இயல்புகள் உள்ளொடுங்கிய நிலை யில் ஒரு சிறிய விதைக்குள் காணமுடியாத யாதோ ஒரு சக்தி வடிவமாக அடங்கியுள்ளன. இச்சக்தியே சரியான காலத்தில் மரமாகத் தானே வெளிப் படுகிறது. அதுவே உண்மையாக மரத்தை உண்டாக்கும் காரணமாகிறது. மரம் விதைக்குள்ளே வெளித் தோன்றாத காரண நிலையிலே விதைக்குள் குடியிருப்பதாகவும் நன்கு கூறலாம். அம் மாதிரியே ஆழ்ந்த உறக்கத்திலே நமது தனியிருப்புக்கு உறுப்புகளான யாவும்—அதாவது, நமது நினைவுகள், ஆசை கள், சார்புகள், தீர்ப்பு, ஞாபக சக்தி முதலிய யாவும்—ஒரு காரண நிலையிலே, காணப்படாத ஏதோ · ஒரு சக்தி வடிவ மாக நமக்குள்ளே குடியிருப்பனவாகும். உண்மையைக் கூறுவோமாயின், நமது புத்தியும் மனமும் இந்திரியங்களும் அப்போது காரண நிலைக்கு ஒடுங்கி விடுகின்றன; அக்கார ணம் பற்றியே அவை தொழிற்படாது போகின்றன; நாமும் ஆழ்ந்த உறக்கத்தில் ஒருவகையிலும் திசையறியாது மயங்கிக்கிடக்கிறோம். வெளித் தோன்றாத இக்காரண சரீ ரமே நமது காரண சரீரம் எனப்படுகிறது; ஆழ்ந்த உறக் கத்தில் நமது உணர்வு தூல உடல்களினின்றும் மன உடல் களினின்றும் உட்சென்று அங்கேதான் ஒடுங்கி நிற்கின்றது.

உறக்கமெனும் நிகழ்ச்சியை நம் சாத்திரங்கள் விளக் கும் முறை இதுவே. அண்ட முழுதும் பரவும் உணர்வு (இரணிய கர்ப்பர்) உறங்கும்போதும் அதுவே நிகழ்கிறது.

அவரது உணர்வு தமது காரண சரீரத்திற்குள் உட்சென்று ஒடுங்கும் போதே, படைப்புக்குட்பட்ட எல்லா மனங்களும், அண்டமுழுதும் பரந்துள்ள மனதின் (சமஷ்டி மனதின்) பகுதிகளாதலின், அவற்ருல் அனுபவிக்கப்படும் எல்லாப் பொருள்களோடும் கூட, காரண நிலைக்கு மீள்கின்றன. இயற்கையிலுள்ள ஒவ்வொன்றும், தூலமாயினும் சூக்குமமாயினும் சரி, இரணிய கர்ப்பரது காரண சரீரமாகிறது, வெளித் தோன்ருத காரண நிலைக்கு ஒடுங்கிவிடுகிறது. ஆக, இரணிய கர்ப்பரது அண்ட–முழுதும்–பரவும்–மனம் உறங்கச் செல்லும் போது பிரம்மாண்டத்திற்குப் பிரளயம் உண்டாகிறது; இதுதான் நைமித்திகப் பிரளயம் எனப்படும்; அது விழிக்கும்போது சிருஷ்டி தொடங்குகிறது. இவை ஒன்றன்பின் ஒன்ருக மாறிமாறி வருகின்றன.

ஒரு கல்பத்தின் முடிவில், அதாவது பிரம்மாவின் ஆயுட்காலத்திற்குப்பின் (இக்காலம் பிரம்மாவுக்கு ஆயுளான நூருண்டும் முடியும்போதுதான்; பிரம்மாவின் நாள் 4,320,000 மனித ஆண்டுகளாகும்) அதே மாதிரியான பிரளயம் நிகழ்கிறது; அவ்வமயம் அவர் முற்றும் உடல் வாசனையற்றவராய், பரப்பிரம்மத்தோடு ஐக்கியம் அடைகிருர். இயற்கையில் உள்ள ஒவ்வொன்றும் அப்போது அவ்வியக்தம் என்றும் பிரகிருதி என்றும் கூறப்படுகின்ற, வெளித் தோன்ருத எல்லையற்ற சக்தியினிடமே மீண்டும் செல்லுகிறது. இரணிய கர்ப்பரது முத்திப்பேற்ருல் இவ்வண்ணம் உண்டாகும் பிரம்மாண்டப் பிரளயம் பிராகிருத பிரளயம் எனப்படும். அடுத்த கல்பத்தின் ஆரம்பத்திலே வேருெரு ஜீவர் முந்திய கல்பத்திலே தாம் தேடி வைத்திருந்த சிறந்த புண்ணியத்தின் பயனுக இரணியகர்ப்பராகத் தோன்றுகிருர். (இன்னுெரு பிரளயமும் உள்ளது. பிரம்மாண்டம் பரப்பிரம்மத்தைப் பற்றிய முழு ஞானம் பெற்றதும், அது தன் மூலகாரணமாகிய அவித்தையோடு முற்றும் மறைந்து

விடுகிறது. இக்காரணத்தால் இது ஆத்யந்திகப் பிரளயம்—அகண்ட பிரளயம்—எனப்படும். மற்றவகைப் பிரளயம் ஒவ்வொன்றிலும், வெளித் தோன்ருத காரண நிலையான அவ்வியக்தம்—அதாவது, காரணம்—எஞ்சுகிறது.)

ஜீவராயினும், ஒரு கல்பத்தின் ஆதியில் தோன்றும் முதல் ஜீவராகிய இரணியகர்ப்பர் இச்சை ஞானம் கிருபை என்னும் சக்திகளை எல்லையற்ற அளவுக்குப் பெறுகிருர். ஏனைய படைப்புமுழுவதும் அவரது செயலே. இக்காரணத்தால் பிரம்மாவைப் புராணங்கள், படைக்கும் கடவுளாகப் பேசுகின்றன.

பிரம்மா எவ்வாறு படைக்கிருர்? அவர் சூனியத்தினின்றும் எதனையும் படைப்பதில்லை. அவர் தம்மிடமிருந்தே பிரம்மாண்டத்தை வெளியிலே தோற்றுவிக்கிருர். அவரே பிரபஞ்சமாகிருர். அவர் எப்படியெப்படி சங்கற்பிக்கிருரோ அப்படியே ஆகிருர். அவர் சங்கற்பிப்பதும் ஒரு குறிப்பிட்ட முறைப்படிக்கே; முந்திய கற்பத்தில் நிகழ்ந்ததை வரையறுத்து அறிந்து தியானிப்பதால் அவர் அம்முறையைக் கண்டுபிடிக்கிருர். காரண நிலையிற் கிடந்து, வெளித்தோன்றுவதற்கெனக் காத்திருக்கும் அனைத்தையும் தியானத்தால் அவர் காண்கிருர். முன்னைய கல்பத்தின் முறைக்கும் வெளித்தோன்றவேண்டிய அவசரத்திற்கும் ஏற்றவாறு, அவர் தம்மிடமிருந்தே தூலமும் சூக்குமமுமான கணக்கற்ற பொருள்களையும் வெளித் தோற்றுவிக்க (படைக்க)த் தொடங்குகிருர்.

பிரம்மாவின் சமஷ்டிமனத்தின் சங்கற்ப மாத்திரத்தாலே இவையாவும் எவ்வாறு உண்டாகின்றன என்பதை ஒருவாறு அறிதற்காக அந்நிகழ்ச்சியைக் கனவுநிலையில் நமக்கு நிகழும் அனுபவங்களோடு ஒப்பிட்டுப்பார்த்தல் நன்று. நமது கனவுகளை உண்டாக்குபவர் யார்? நமது மனங்களே என்பது வெளிப்படை. எப்பொருளினின்றும் அவை உண்டாக்கப் படுகின்றன? மனமெனும் பொருளினிடம் இருந்தே என்பதும் வெளிப்படை. நம் மனங்கள் விரும்பின

வற்றையெல்லாம், அவை கனவில் வெளியே காண்கின்றன. மனங்களே தாம் விரும்பியவாறெல்லாம் வடிவுகொள்கின்றன என்பது மிகப் பொருத்தம். அற்பத் தூக்கத்தில் மனம் புறவுலகத்தின் பிடிப்பினின்றும் நழுவும்போது, தன்னைத் தன் இச்சை மாத்திரத்தாலே எதுவாகவும் ஒவ்வொரு பொருளாகவும் மாற்றிக்கொள்ளக்கூடிய ஆச்சரிய சக்தி அதனிடம் நிகழ்கிறது. உண்மையாகவே அது ஒரு மந்திரவாதியையும் தோற்கடித்து விடுகிறது!

இது ஒரு தனி மனிதனது மனத்திற்கு இயலுமானால், சமஷ்டிமனம் (பிரம்மாவின் மனம்) பிரம்மாண்டத்தைத் தன் இச்சையால் தன்னிடமிருந்தே எளிதாகத் தோற்றுவிக்கலாகும் என்பது தானே விளங்கும். பிரம்மா இதனைத் தன் சங்கற்பத்தாலே ஒரு முறைக்கு இணங்கச் செய்கிறார்; ஆனால் நாமோ அறியாத நிலையிலே நமது கனவுகளை உண்டாக்குகிறோம். இது ஒரு பெரும் வேறுபாடு என்பதில் ஐயமில்லை. ஆயினும் இவ்விரு நிகழ்ச்சிகளும் ஒன்றையொன்று பெரிதும் ஒத்துள்ளன. பிரம்மா தியானத்தால் கண்டு பிடிப்பதை அவர் சங்கற்பிக்கிறார். அவர் சங்கற்பிப்பதைக் காண்கிறார். அவர் காண்பதை, நம் மனங்களும் சமஷ்டி மனத்தின் பகுதிகளாதலின், தமது திறமையின் எல்லைக்குத் தக்கவாறு காண்கின்றன.

சரி, பிரம்மாவே எவ்வாறு உண்டாகின்றனர்? அவரைப் படைப்பவர் யார்? மேலும், ஜீவரானமையின் அவரும் நம் ஒவ்வொருவரையும்போல் உடலோடு கூடியவராதல் வேண்டும். அவ்வாறாயின் அவரது உடல் யாது, அவரது உயிர் யாது?

இக்கேள்விகள் நம்மை முன்னினும் ஆழ்ந்து சிந்திக்கச் செய்யும் இயல்பினவாகின்றன. கடைசி இரண்டிற்கும் வேண்டிய விடையை முதலிலே தந்து விடலாம். சமஷ்டி மனமே அவரது உடல்; ஈசுவரனே அதனுள் இருக்கும் உயிர்.

எல்லா சூக்கும உடல்களும் (லிங்க சரீரங்களும்) சேர்ந்த முழுத்தொகுதியே அவரது உடல். அதில் ஒன்றுக் குள் ஒன்ருக அமைந்த மூன்று கோசங்கள் (உறைகள்) உள்ளன; அவையாவன: விஞ்ஞானமய கோசமும், மனோ மய கோசமும், பிராணமய கோசமும். விஞ்ஞானமய கோசத்துள் புத்தியும் ஐந்து சூக்கும ஞானேந்திரியங்களும் அடங்கியுள்ளன; அறியும் திறமை பெற்றுள்ள இக்கோசம் அனுபவத்திற்கும் செயலுக்கும் கருத்தாவான பொருளின் உறைவிடம். மனோமய கோசத்தில் மனமும் ஐந்து சூக்கும ஞானேந்திரியங்களும் அடங்கியுள்ளன; இதற்குச் சங்கற் பிற்கும் திறமை அளிக்கப்பட்டுள்ளது. பிராணமய கோசத் தில் ஐந்து பிராணன்களும் ஐந்து சூக்கும கருமேந்திரியங் களும் அடங்கியுள்ளன; கருமஞ்செய்யும் திறமையை இது பெற்றுள்ளது. [பிராணன் (உயிர்ச்சக்தி) என்பது அது உடலிற் செய்யும் பற்பல தொழில்கட்கேற்ப ஐவகைப்படும் என்பர். ஐந்து பிராணன்களாவன: பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன் என்பன.]

இரணிய கர்ப்பரது உடலில் அடங்கியுள்ள இக்கோசங் கள் யாவும் ஐந்து அடிப்படையான சூக்கும பூதங்களால் ஆயவை; இவை மிக நுண்ணியவாயுள்ளன, 'தன்மாத்தி ரைகள்' என்றும் அழைக்கப்படுவன. 'பூதம்' என்ற மொழிக்கு 'வெளித்தோன்றியுள்ளது' என்பது தாதுப் பொருளாகும்; (அவ்வியக்தத்திற்கு) வெளித்தோன்ருத நிலைக்கு மாறுபட்ட நிலையிலுள்ள ஒரு பொருளை அது குறிக் கின்றது. 'தன்மாத்திரை' என்பதன் பொருள் 'அது மாத் திரம்' என்பது; இக்காரணத்தால் பிறவற்ருேடு கலவாத நிலையிலுள்ள அடிப்படையான பூதம் ஒன்றை அது குறிக் கின்றது. (அத்தியாயம் 17-ல் கீழே காண்க.)

ஐந்து அடிப்படைப் பூதங்களாவன: ஆகாசமும், வாயு வும், தேஜசும், அப்புவும், பிருதிவியும் (வான், வளி, தீ, நீர்

நிலன் என்பன). நாம் அம்மொழிகளாற் கொள்ளும் பொருள்களைக் கருதி அவற்றைப்பற்றிப் புத்திக்குழப்பம் அடைதல் சரியன்று. தன்மாத்திரைகள் இவைகளினும் மிக மிக நுண்மை வாய்ந்தன. அவற்றினும் வேருய ஓர் இனத்தைச் சேர்ந்தன. இந்துமத இருடியரின் பகுமுறை ஆராய்ச்சிக்கு முற்றிலும் வேறுபட்டது.

எனினும், இத் தன்மாத்திரைகள் அவியக்தத்தினின்றும் ஒரே சமயம் வெளிவருவனல்ல. ஆகாசம் முதலில் தோன்றுகிறது, அதன் ஒரு பகுதி வாயுவாக மாறுகிறது; அதன் ஒரு பகுதி மீண்டும் தேஜஸாக மாறுகிறது; தேஜஸ னின்றும் இவ்வாறே அப்புவும், அப்புவினின்றும் பிருதிவியும் தோன்றுகின்றன.

இது சம்பந்தமாகக் குறிப்பிடத்தக்கது இன்னென்றும் உள்ளது. தன்மாத்திரைகள் எதனின்றும் வெளி வருகின்றனவோ அந்த அவியக்தம் திரிகுணுத்மிகம் (முக்குண மயம்) எனப்படும். அதன் வெவ்வேறு உட்பகுதிகளான சத்துவம், இரஜசு, தமசு எனும் மூன்றையும் பொறுத்தெழும் முக்குண முடைமை அதன் சிறப்பியலாகும். பொருள்களை விளங்கச் செய்யும் இயற்கைத் தத்துவம் யாதோ, அதாவது, நமது உணர்வுக்கு அவற்றை இலக்காக்கும் தத்துவமே, சத்துவம் எனப்படும். எல்லாவகை விகாரங்களையும் உண்டாக்குவது இரஜசு எனும் பெயர் பெறும்; இயற்கையிலுள்ள சுறுசுறுப்பை விளக்கும் தத்துவமே அது. அறியாமையையும் அசக்தியையும் தரும் பொருளே தமசு எனப்படும். அவியக்தத்தினின்றும் வெளித்தோன்றும் அனைத்திலும் இம்மூன்று உட்பகுதிகளின் முத்திரை பொறிக்கப்பட்டிருக்கும். அடிப்படைப் பூதங்களான தன்மாத்திரைகளிடத்தும் அப்பதிவு உண்டு. ஒவ்வொன்றும் சாத்விகப் (விளக்கந்தரும்) பகுதியொன்றையும் இராஜசிகப்

(இயக்கந்தரும்) பகுதியொன்றையும் தாமசிகப் (சோம்பலைத் தரும்) பகுதியொன்றையும் உடையதென்பர்.

இவ்வைந்து அடிப்படைப் பூதங்களான ஆகாசம், வாயு, தீ, நீர், நிலம் எனும் ஒவ்வொன்றின் சாத்துவிகப் பகுதிகளும் செவி, தோல், கண், நாக்கு, மூக்கு என்பனவற்றிற்கு இணையான சூக்கும ஞானேந்திரியங்களை முறையே உண்டாக்குகின்றன. அவையனைத்தின் சாத்துவிகப் பகுதிகளும் ஒன்ருகக்கூடி, யுக்தியாகவும் மனமாகவும் ஆகின்றன. அது போன்றே ஐம்பூதங்களின் ராஜசிகப் பகுதிகளும் தனித் தனியே ஐந்து கருமேந்திரியங்களாகவும் ஒன்றுகூடி ஐந்து பிராணன்களாகவும் ஆகின்றன. பிரம்மாவின் உடலில் அடங்கிய மூன்று கோசங்களும் இவ்வாறே தன்மாத்திரைகளின் சாத்துவிக இராஜசிகப் பகுதிகளால் ஆக்கப்படுகின்றன. இவ்வண்ணம் அமைந்த சூக்கும சரீரத்தையே பிரம்மா பெற்றுள்ளார். அதில் எல்லா உயிர்ப்பிராணிகளின் சூக்கும உடல்களும் அடங்கியுள்ளன.

## 17

## பிரம்மாண்டம் (தொடர்ச்சி)

தன்மாத்திரைகளின் தாமசிகப் பகுதிகள் 'பஞ்சீகரணம்' எனும் முறைப்படி ஒன்ருேடொன்று சேர்ந்து கொண்டு, தூல பூதங்களாகின்றன. (வேதாந்த பரிபாஷை –அத்யாயம் 7). ஒவ்வொரு தூல பூதமும் ஐந்து வகைப்பட்ட தன்மாத்திரைகள் எனும் சூக்கும பூதங்கள் அனைத்தையும் ஒரு குறிப்பிட்ட அளவிலே கொண்டுள்ளது. உதாரணமாக, தூல ஆகாசத்தின் அமைப்பில் பாதியளவு சூக்கும ஆகாசமும், மிஞ்சிய நான்கு சூக்கும பூதங்கள் ஒவ்வொன்றிலும் அரைக்கால் பாகமும் உள்ளனவாகும். தூலவாயு பூதம் சூக்கும வாயு பூதத்தில் பாதி அளவும், மிஞ்சிய சூக்கும பூதங்களில் ஒவ்வொன்றிலும் அரைக்கால் பாகமும் கூடி அமைந்ததாகும்; இம்மாதிரியே பிறவும்.

ஜீவர்களின் தூல உடல்களும், பல உலகங்களின் வடிவ மாயுள்ள அவர்களின் உறைவிடங்களும், அவர்கள் பயன் படுத்தும் எல்லாப்பண்டங்களும் இந்தத் தூல பூதங்களாலே ஆக்கப்பட்டுள்ளன. தூல பூதங்களால் ஆக்கப்பட்டுள்ள இப் பொருள்கள் மிகப் பரும்படியாகவும் ஒளியற்றவையா யும் உள்ள நிலை தொடங்கி, மிக நுண்ணியதாயும் ஒளிமிக்க தாயும் உள்ள நிலைவரை பலவகையாயுள்ளன. ஆயினும் இவையெல்லாம் இரணிய கர்ப்பரது சங்கற்பத்தால் நிகழ் கின்றன. அவர் தாமே சுருங்கிச் செறிந்து இத்தூல உலக மாகத் தோற்றமளிக்கின்ருர் என்னலாம். இம்முறையினுல் இன்னெரு அண்ட முதல்வர்—விராட் புருஷர் எனும் நாம முடையவர்—பிறக்கின்றனர்; தூல உலக முழுமையும் அவர்க்கு உடலாக, ஈசன் அவர்க்கு ஆன்மாவாகிருன்.

முன்னர்க் கூறியுள்ளபடி, சிருஷ்டிக்கு அது தொடங் கிய ஆதிகாலம் என்பது இல்லை என்பது இந்து மதக் கொள்கை. ஒவ்வொரு சிருஷ்டிக்கு முன்னும் பிரளயமும், ஒவ்வொரு பிரளயத்துக்கு முன்னும் சிருஷ்டியும் நிகழ, இவ்விரண்டும் மாறி மாறி நித்தியமாக நடைபெற்று வந்துள் ளன. இவ்வாறு நிகழ்வதேன்? பிரளயத்திற்கும் சிருஷ் டிக்கும் இடையே ஒரு காரண காரியத் தொடர்பு உள்ளது என இந்து சாஸ்திரங்கள் கூறுகின்றன. விலக்கவொண் ணுத கரும நியதியாய் இத்தொடர்பு உண்டாக்கப்படுகிறது. இந்துமதப்படி இந்நியதியே ஒவ்வொரு சிருஷ்டியையும் அதற் குள் அடங்கிய ஒவ்வொன்றையும் தீர்மானிப்பதாகின்றது. முன்னைய கல்பத்தில் வாழ்ந்த ஜீவர்களின் செயல்களும், அனுபவங்களும், ஆசைகளும் பிரளய நிலையிலே காரண வடிவாக அடங்கியுள்ளன. இவை பயனளிக்கும் பொரு ட்டே சிருஷ்டி நிலையில் இரணிய கர்ப்பர் தொடக்கமான எல்லா ஜீவன்களும், அவர்கட்குரிய பல உறைவிடங்களாய உலகங்களோடும் அவர்கட்குப் பயன்படும் உணவு, பானம்

முதலிய பண்டங்கள் பலவற்ருேடும் சேர்ந்து தோன்று கின்றன. முன்னைய கல்பத்தில் அவர்கள் இயற்றியிருந்த நல்லவையும் தீயவையுமாய செயல்கட்கு ஏற்றவாறு இன்ப துன்பங்களை அனுபவிப்பவராகின்றனர். இது கருதியே அவர்கள் பிறப்பதும், போகப் பொருள்கள் பலவற்ருல் சூழப்பட்டிருப்பதும். ஆக பிரளயத்தில் அடங்கியுள்ள விதையினின்றே பிரம்மாண்டம் ஒரு மரத்தைப்போல முளைத்தெழுகின்றது. மரத்துக்கு முன் விதையும், விதைக்குமுன் மரமும் உள்ளதுபோல், சிருஷ்டிக்கு முன் பிரளயமும், பிரளயத்திற்கு முன் சிருஷ்டியும் உள்ளன.

ஜீவர்களே இந்நாடக அரங்கத்தின் நடுவே அமைகின் றனர். அவர்கள் தம் கருமங்களின் பயன்களைப் போக நுகர்ச்சி வாயிலாகப் பெறவேண்டியவராகின்றனர்; இக் காரணம் பற்றியே முழு அண்டமும் தோன்றுகிறது. இத ஞல் இவ் அண்டம் இரு தொகுதிகளாகப் பிரிவுபடுகின்றது; அவையாவன: அனுபவிப்போரும் (போக்தாக்களும்), அனு பவிக்கப்படும் பொருள்களும் (போகப்பொருள்களும்). ஜீவர்கள் முன்னைய தொகுதியைச் சார்ந்தவராக, ஏனைய பொருள்கள் யாவும் பின்னைய தொகுதியைச் சார்வனவா கும். இந்நிலையிலிருந்து நோக்குங்கால், பிரம்மாண்டம் என் னும் இந்த ஜகத் (உலகத்) திற்கு அறிவுள்ளன, அறிவற் றன எனும் இருவகைப் பொருள்களுடைமையே இலக்கண மாகின்றது.

ஜீவர்கள் ஞானேந்திரியங்கள் வாயிலாக உலகை அனு பவிக்கின்றன; அவ்விந்திரியங்கள் போகத்திற்குரிய அத் தனை கருவிகளாகின்றன. இவற்றில் ஒவ்வொன்றும் போ கத்திற்குரிய உலகத்தின் ஒரு குறிப்பிட்ட பகுதியை அவர் கட்குக் கொணர்ந்தளிக்கின்றது; இப்பகுதி அதன் 'விஷயம்' (காணப்படும் பொருள்) எனப்படும். மெய், வாய் (நாக்கு) கண், மூக்கு, செவி எனும் ஐந்து ஞானேந்திரியங்களும் முறையே ஊறு (தொடுதல்) சுவை, ஒளி, நாற்றம், ஓசை எனும் ஐந்தையும் தமக்கு விஷயங்களாக உடையன.

ஜீவர்கட்கு வெளியுலகில் ஏற்படும் சம்பந்த முழுவதும் இவ் ஐவகைப் புலனுணர்ச்சிகளை ஒட்டியேயாம், இவையே அனுபவிக்கப்படும் உலகம் (போக்யம்) முழுமையும் ஆகும்.

இவ்விடத்து ஒன்று கருதத்தக்கது. புற உலகத்தினின்றும் எழும் தூண்டுதல்களால் இந்திரியங்கள் கிளர்ச்சியடையும்பொழுது மட்டும் புலனுணர்ச்சியலைகள் கண்களிலே ஒரு கிளர்ச்சியை உண்டுபண்ணும்போது, ஒளி (ரூபம்) எனும் புலனுணர்ச்சி நிகழ்கின்றது. ஆதலால், இந்நிலையினின்று நோக்கும் போது, இம்மாதிரியான இந்திரியக் கிளர்ச்சிகளின் மயமாகவே யுள்ளது புறவுலகம் என்பதாகிறது.

தூல ஆகாசம் (சப்தம்) ஒலியுணர்ச்சியை மட்டும் கிளப்புகின்றது; வாயு ஒலியுணர்ச்சியையும், (பரிசம்) தொடுதலுணர்ச்சியையும் எழுப்புகின்றது; ஒலியுணர்ச்சி, தொடுதலுணர்ச்சி, ஒளி (ரூபம்) உணர்ச்சியெனும் மூன்றையும் தேஜஸ் உண்டாக்குகின்றது; அப்பு அவை யனைத்தோடும் சுவை (ரசம்) உணர்ச்சியையும், பிருதிவி நாற்றம் உள்பட விஷயங்கள் ஐந்தையும் தூண்டுகின்றது. இவ் வரிசையில் பின்னுள்ள ஒவ்வொன்றும் முன்னுள்ள பூதத்தினும் அதிகமாக இன்னுமொரு விஷய உணர்ச்சியைத் தூண்டி உண்டாக்குகிறது என்பது கவனிக்கத்தக்கது; அதிகமாகும் இவ்விஷய உணர்ச்சியே அதன் சிறப்பான குணம் எனப்படுகின்றது. ஆக, ஆகாசத்திற்கு ஒலியும், வாயுவுக்குப் பரிசமும் (தொடுதலும்), நெருப்பிற்கு ஒளியும், நீருக்குச் சுவையும், நிலத்திற்கு மணமும் சிறப்பான குணங்களாகும்.

இத்தூல பூதங்கள் இவ்வாறு வெவ்வேறான புலனுணர்ச்சித் தூண்டுதல்களின் தொகுதிகளாகக் கருதப்படுகின்றன. இவை தமது இயல்பால் சக்திமயமாய் உள்ளன, சடமயமல்ல. இவற்றின் பெயர்கள் வான், வளி, தீ, நீர்,

நிலம், (ஆகாசம், வாயு, அக்கினி, ஜலம், பிருதிவி) என்பவை போன்ற தூலப் பொருள்களைக் குறிப்பதாகத் தோன்றினும், அவை அகண்டமான சக்தியெனும் பிரகிருதியின் வடிவங்க ளன்றி வேறல்ல. நாம் தூல தத்துவங்களாகக் கூறுவன, இந்துக்களின் கொள்கைப்படி, பிரகிருதியின் பற்பல வடி வங்கள் வழியாக நோக்கப்படும் பரப்பிரம்மமேயாகும். இந் நிலையினின்று நோக்குங்கால், தூல உலக இருப்பு முற்றி லும் சடத்தன்மையற்ற ஒன்றே யாகும். சடப்பொருளின் தோற்றம் உண்மையிலே ஏமாற்றந் தருவதாகும்.

ஆக, பகுப்புத்திறன் பெற்றிருந்த இந்துமத இருடி யரது காட்சிக்கு முன் பிரபஞ்ச முழுவதும், போக்தாக்கள் (அனுபவிக்கும் உயிர்கள்) போக்கியப் பொருள்கள் (அனு பவிக்கப்படும் பொருள்கள்) என இரு கூருகப் பிரிந்து நின் றன; புறப் பொருள்களின் அனுபவம் மீண்டும் ஐந்து வகைப் புலனுணர்ச்சி விஷயங்களாகவும், புறவுலகம் தூல பூதங்களெனப்படும் ஐந்து வகையான புலனுணர்ச்சித் தூண்டுதல்களின் தொகுதியாகவும் பிரிந்து நின்றன. ஆத லால் இப்பகுப்பு முற்றிலும் மன நூலையொட்டியதாவ தன்றி சட நூலைச் சார்ந்ததேயன்று. இக்காரணத்தால், தற்கால விஞ்ஞான நூலார் தூல உலகின் சடப் பகுதி களாக நெடுங்காலம் கருதி வந்த மூலப் பொருள்களும் முற் கூறிய தூல பூதங்களும் ஒரே வகையின எனல் மயக்க வுணர்ச்சியின் பாற் படுவதாகும். இப் பூதங்கள் அவற்றி னின்றும் முற்றிலும் வேறுபட்ட ஓர் இனத்தைச் சார்ந்தன வாகும். அவை மிக நுண்ணிய புலனுணர்ச்சித் தூண்டு தல்களேயாம்; இவை குறிப்பதெல்லாம் ஏறக்குறைய இவ் வளவேதான்.

ஆகாசம் வாயு முதலிய தூலப் பொருள்களேயன்றி, அதற்கு மேலே இப் பூதங்கள் வேறொன்றும் அல்ல என்றே கொள்வதானாலும், தூல உலகை அவ்வாறு பகுத்துரைத் தற்கு ஆதரவாகப் பின்வரும் விளக்கம் கருதற்குரியதாகும்.

அப்பெயர்களில் ஒவ்வொன்றும் குறிப்புப் பொருளுடையதாகவும், ஒன்றேடொன்று தொடர்புற்ற பல பொருள்களின் தொகுதியொன்றைக் குறிப்பதாகவும் கொள்ளலாகும். உதாரணமாக, நிலம் (பிருதிவி) என்பது எல்லாத் திடப் பொருள்களையும், நீர் (அப்பு) என்பது எல்லாத் திரவப் பொருள்களையும், வாயு என்பது எல்லா வாயுப் பொருள்களையும் குறிப்பதாகவும் கருதலாம். ஆதலால் இம்மூன்றும் திடநிலை, திரவநிலை, வாயுநிலை எனும் மூன்று வெவ்வேறு நிலைகளிலும் உள்ள எல்லாச் சடப்பொருள்களையும் அடக்குவனவாகும். அனலும், விளங்கும் ஒளியும் ஆகிய நிகழ்ச்சிகளை அக்கினியும், ஒளியலைகள் முதலியன புகுந்து செல்லுதற்குரிய எங்கும் பரந்துள்ள நுண்ணிய ஊடுபொருளை ஆகாசமும் குறிப்பதாகக் கருதலாம். இந்த ஐந்து வகைப்பட்ட பொருள்—தொகுதிகளும் ஐம்புலன்களின் வழியாக நம்மால் உணரப்படும் தூலப் பொருள்களின் வரிசைகள் அனைத்தையும் உள்ளடக்குவனவன்றே? உண்மையுரைக்கின், இப்பகுப்பு ஒன்றையும் விடாத முழுமையதாகின்றது.

ஆனல் விஞ்ஞான நூலார் உலகத்தை மூலப் பொருள்களாகவும் அவற்றின் உட்பகுதிகளான அணுக்களாகவும் ஆனதாகக் கூறல் பொருளற்ற ஒன்ருக ஆகிவிட்டது. அணுக்களே சடப்பொருளின் அறுதிப் பகுதிகள் என்ற கொள்கை மாறிவிட்டது. அவை சக்தியலகுகளாக (மின் சக்திப் பகுதிகளாக)ப் பின்னும் பகுக்கப்பட்டுள்ளன. பௌதிக நூலாரது பகுத்தறியும் ஆராய்ச்சி சடப்பொருளின் ஏமாற்றும் தோற்றத்தையும் துளைத்துவிட்டது. சடப்பொருள் சடத்தன்மையை இழந்துவிட்டது. தற்கால விஞ்ஞானியர் கண்ட இதுபற்றிய முடிவினல், இந்துக்கள் இயற்கையைப் பற்றிக் கொண்டுள்ள கருத்தை உறுதிப்படுத்தும் நெறியில் அவர்கள் ஒரு படி முன்வந்துள்ளனர் என்பது இங்கு கவனிக்கத்தக்கது.

வெவ்வேறு பூதங்கள் வெவ்வேறான புலனுணர்ச்சித் தொகுதிகளைத் தூண்டுகின்றன என்பதை யாம் முன்னரே கண்டோம். வாயு, தீ, நீர், நிலம் என்பவை சம்பந்தப்பட்ட மட்டில், அவற்றில் ஒவ்வொன்றோடும் தொடர்புற்ற புலனுணர்ச்சித் தொகுதி பொருத்தமுள்ளதாகின்றது. ஆனால் ஆகாசம் ஒலியுணர்ச்சியை எவ்வாறு உண்டாக்கும் என்னலாம். விஞ்ஞானிகளது ஆகாசம் நமது புலன்களில் எதற்கும் புலப்படாது கடந்து நிற்கின்றது. வீசிப் பரவுஞ் சக்தியின் அலைகள் செல்லுதற்கு வேண்டிய, சுமார் ஒரு கற்பனைப் பொருளென்றே கூறத் தக்கதாகின்றது அது. அவர்களுடைய கொள்கைப்படி ஒலி யென்பது, திடப்பொருள், திரவப்பொருள், வாயுப்பொருள் என்பவற்றில் உண்டாகும் அதிர்வினால் மட்டும் உண்டாகின்றது; ஒலித் தூண்டுதல்கள் காற்றுக்கு வந்து சேரும்வரை அந்த சடப்பொருளின் வழியாகவே செல்லுதல் கட்டாயம். அதிர்வு செல்லும் வழியிலே ஒரு வெற்றிடம் குறுக்கிடுமாயின், அது ஒலியுணர்ச்சி உண்டாவதைத் தடைசெய்கிறது என்பதும் சோதனையால் நிரூபிக்கப்பட்டுள்ளது. கற்பனைப் பொருளான ஆகாசம் வெற்றிடத்திலும் உள்ளது; எனினும் ஒலி தடைபட்டு நின்றுவிடுகிறது. ஆகாசம் ஒலியின் பரவலுக்குத் துணை செய்வதில்லை. இந்நிலையில் ஆகாசத்தை ஒலியுணர்ச்சிக்கு மூலம் என்னல் எவ்வாறு ஒப்புக்கொள்ளத் தகும் என்னலாம்.

ஒலியுணர்ச்சி திடப்பொருள்களாலும் திரவப்பொருள்களாலும் வாயுப்பொருள்களாலும், அப்பொருள்கள் வழியாகவும் தூண்டப்படுகின்றன என்னும் உண்மையை இந்து மத சாஸ்திரங்கள் மறுப்பதில்லை; இவை ஆகாசத்தின் விகாரங்களாதலின், அதன் பண்பை இழக்காது கொண்டுள்ளன என்கின்றன. அதுவரை இந்துமத சாஸ்திரங்களின் முடிபுகள் தற்கால விஞ்ஞான நூலாரின் கருத்துகட்கு ஒத்துச் செல்கின்றன. ஆகாசத்தைப் பற்றித்தான் நமது சாஸ்தி

ரங்கள் வேறுபாடான கருத்துடையன. ஆகாசத்தைப்பற்றி அவை கண்ட முடிபுகள் உண்மையிலே தற்கால விஞ்ஞான நூலாருடைய கருத்துகட்கு மறுதலையாகாது, அதைப்பற்றி இன்னும் மிக்க அறிவைத் தருகின்றன என்பது ஒரு சிறிது ஆராய்ச்சி செய்வார்க்கு விளங்கும்.

சாதாரணமாக நமது காதுக்குப் புலப்படும் ஒலி தூல மான சடப்பொருள்களால் உண்டாக்கப்படுகின்றது; அது ஒலியின் தூலவகையில் ஒன்று என்னலாம். ஏனெனில், சாதாரணமாகக் காதுக்குப் புலப்படாத மிக நுண்ணிய ஒரு வகையொலி உண்டென்று இந்துக்கள் கருதுகின்றனர். ஆதலின், இந்துமதக் கருத்தின் படியும், தூல ஒலி சம்பந்தப் பட்டமட்டில், (ஆகாசம் பரவியுள்ள) ஒரு வெற்றிடம் அத னைக் கடத்துதற்கு இடையூறுகலாம் (ஒலியை வாயுவோ, திரவமோ, திடமோ ஆகிய ஒரு பொருளின் உட்பகுதியாகிய ஆகாசமே உண்டாக்க, ஏனைய உட்பகுதிகள் அவ்வொலி யைப் பெருக்குகின்றன என்பதும், அங்ஙனம் பெருக்கப் பட்டபின் அது சாதாரணமாகக் காதுக்குப் புலப்படுகிறது என்பதும் பொருத்தமாகலாம்).

மிக நுண்ணிய ஒருவகை ஒலியுணர்ச்சியை ஆகாசம் தூண்டுகிறது என்னும் முடிபுக்கு வருவதற்கு ஏதுவாக அனுபவத்தே கண்ட சில உண்மைகளை இந்துமத இருடியர் பெற்றுள்ளனர். ஆழ்ந்த தியான நிலையில் 'அனுஹதத் தொனி' எனப்படும் ஓர் ஒலி ஒருவர்க்குக் கேட்கின்றது. இவ் வொலி மிக நுண்ணியது; மனம் மிக அமைதியாயும் ஒரு முகப்பட்டும் உள்ள போது புலப்படுகிறது. அதற்கும் தூலப் பொருளின் அதிர்ச்சிக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. அனுஹதத்தொனியை உண்டுபண்ணும் தூண்டு தல்கள் எப்போதும் உள்ளன; ஏனெனில், உள்ளம் ஆழ்ந்த ஒருமுகப்பட்ட நிலையிலிருக்கும் போதெல்லாம் கூரிய பக்குவ மான செவிப்புலனுக்கு எப்போதும் அது எட்டுவதாகும். இவ்வுணர்ச்சியைத் தூண்டுவதற்குரிய ஒரே ஊடுபொருளா

வது ஆகாசமே. (ஆகாச வாணி, தைவ வாணி, அசரீரி வாக்கு எனப்படும் நிகழ்ச்சியும் இதற்கு வேறோர் உதாரண மாகலாம்). கிரேக்கருடைய புராணத்தில் கேள்விப்படும் 'அண்ட கீத'மும் இம்மாதிரியான ஓர் அனுபவத்தை ஆதார மாகக் கொண்டிருக்கலாம். இந்துக்கள் 'ஸ்போடம்' என் றழைக்கும்—படைப்புக்கு ஆதியான—நாதப்பிரம்மம் எனும் கருத்தும், அனைத்தினும் மிக நுண்ணிய எங்கும் பரந்த ஊடுபொருளான ஆகாசமே அந்த ஒலிக்கு மூலமும், அதைக் கடத்தும் பொருளும் என்பதைக் குறிக்கின்றது. ஏனெ னில் தூலப் பொருள் அந்நிலையில் இருப்பதில்லை.

இன்னும், ஆகாசத்தினின்றும் பூமி பிறக்கும் கிரமமும் விஞ்ஞான நூலாருடைய முடிபுகளில் எதற்கும் மறுதலையா காது. விஞ்ஞான நூலார் இதுவரை அக் கிரயத்தைக் கண்டபடி, பிரபஞ்சத்தின் பரிணமம் புகை நக்ஷத்திரத்தி னின்றும் தொடங்குகிறது ; இப்புகை நக்ஷத்திரமும் அனலை யும் ஒளியையும் வீசும் ஒரு வாயுப்பொருள் என்று வருணிக் கப்படுகின்றது. ஆதலின் விஞ்ஞானிகள் தொடங்கும் இடம், இந்துமதக் கொள்கைப்படி, வாயுவும் தீயும் முன் னரே உண்டாயுள்ள ஒரு நிலையே.

கோள்கள் உண்டாகும் முறை, புகை நக்ஷத்திரத்தி னின்றும் தொகுதிகள் பிரிவதிலிருந்து தொடங்கி, அதன் பின் இவ்வாறு பிரிவுபட்டவை படிப்படியாகக் குளிர்ந்து திர வப் பொருள்கள் (நீர்) ஆகி, பின்னர் கட்டியாக (நிலம்) உறைகின்றன என்பது கவனிக்கத் தக்கது. இந்துக்கள் கூறும் பரிணம (விரிவு) முறையில் அடங்கிய கருத்தும் இக் கிரமத்தை ஆதரிக்கின்றது.

இந்துமத சாஸ்திரங்கள் ஆகாசத்தினின்றும் தொடங்கு கின்றன ; அதுவே முதல் முதலாகத் தோன்றிய சடப் பொருளாகின்றது. அதினின்று வாயுவும் (வாயுப் பொருள்

களும்), வாயுவினின்றும் அக்கினியும் (சூடும் ஒளியும்) உண்டாகின்றன. படைப்பில் புகை நக்ஷத்திர நிலைக்கு முந்திய நிலைக்கே இப்பகுதி உரியதென்பது வெளிப்படை; ஆனால் இதைப்பற்றி விஞ்ஞான நூல் மோனமாயுள்ளது. புகை நக்ஷத்திரம் உண்டாகு முன், வாயுப் பொருள் சூடும் ஒளியுமாய பொருளுக்கு (அக்கினிக்கு) முன் உண்டானதா பின் உண்டானதா என்னும் வினா எழுகின்றது. ஆகாசமே அதனினும் அதிகத் தூலமான வாயுப் பொருளாகத் பரிணமித்திருக்கலாம்; அது உரசுதலினால் சூட்டையும் ஒளியையும் உண்டாக்கியிருக்கலாம். இது யுக்திக்கு மாறானதன்று. அவ்வாறு நிகழ்ந்திருத்தல் கூடும் என்றும் தோன்றுகின்றது.

தூல ஆகாசமே முதன் முதலாக வெளித் தோன்றிய சடப் பொருளானதுபோல், தூலப் பிராணனே முதன் முதலாக வெளித் தோன்றிய சட சக்தியாகின்றது. இச்சக்தி ஆகாசத்தின்மீது தாக்குதலால் வாயுப் பொருள் (வாயு) உண்டாகின்றது; இன்னும் மேலே மேலே இவ்வாறு நிகழ, முடிவில், இத்தூலப் பிரபஞ்ச முழுமையும் உண்டாகின்றது. இப்பிராணன் எனும் சக்தி தாக்குதலாலே, மிக நுண்ணிய ஒரு படித்தான பொருளாகிய ஆகாசம் நுண் கூறுகளைக் கொண்ட மிகத் தூலமான வாயுப் பொருளாகப் பரிணமித்திருக்கலாம். அதன்பின் பிராணன் வாயுவின்மீது தாக்குதலாலே, அதன் நுண்கூறுகள் அதிர்ச்சியடையத் தொடங்கியிருக்கலாம்; அதன் பயனாகச் சூடும் ஒளியும் (அக்கினி) உண்டாயிருக்கலாம். ஆதலால் வாயுவினின்றும் அக்கினி உண்டானது எனும் கருத்தில் யுக்திக்கு ஒவ்வாதது யாதொன்றும் இருப்பதாக இல்லை.

மேலும் தன்மாத்திரைகளின் தாமசிகப் பகுதிகளிலிருந்து தூல பூதங்கள் உண்டான வகையும் கவனிக்கத் தகுந்தது. தூல பூதங்கள் சடவுலக வாழ்க்கைக்கு ஆதாரமாதலின் தம்மிடத்தே சடத்துவம் எனும் பண்பு தலை எடுக்கப்

பெற்றுள்ளன. இவ்வித உற்பத்தி மிகப் பொருத்தமான தாகவே தோன்றுகிறது. பிரகிருதியிலுள்ள தாமசிகப் பகுதியின் வாயிலாகச் சக்தி சடப் பொருளென்னும் தோற்றத்தைப் புனைந்து கொள்கிறது. அணுவை 'அடைத்து வைக்கப்பட்டுள்ள கதிர் வீசுஞ் சக்தி' யென்று விஞ்ஞானியர் கொள்ளும் கருத்திற்கு இது இணங்கியிருக்கின்றதன்றோ?

இந்துமத இருடியர்க்கு நாம் 'விகாசம்' என்றழைக்கும் முறையைப்பற்றித் தெளிவான கருத்து இருந்தது என்பதும் இங்கே குறிக்கத்தக்கது. யோக சூத்திர நூலாசிரியராகிய பதஞ்சலியார் இதனை 'ஜாத்யந்தரப் பரிணும:' என்னும் மொழிகளாற் குறிப்பித்தார்; அதாவது ஓர் இனமோ ஜாதியோ மற்றொன்ருக மாற்றமடைதல். (ஜாத்யந்தரப் பரிணும: பிரகிருதி ஆபூராத்-யோக சூத்திரம், 4.2) இவ் விகாச முறையின் காரணத்தை இருடியர் வரையறுத்துக் கூறியுள்ளார்; தற்கால விஞ்ஞானியர் அதனைக் கண்டறிதற்காக இன்னும் தடவிக் கொண்டிருக்கிருர் என்னலாம். ஓர் இனமோ ஜாதியோ அதனின்றும் வெளிவருவதை யெல்லாம் முன்னரே உள்ளடக்கி வைத்துக் கொண்டுள்ளது என்று கருதினர். ஒரு குறிப்பிட்ட இனமோ ஜாதியோ அதன் பிரகிருதியில் (காரண நிலையில்) முன்னரே உள்ளது; அது வெளியே வருவதற்கு ஏற்றவாறு சந்தர்ப்பங்கள் ஒன்றுசேரும் போது, உள்ளிருப்பது வெளியே பாய்ந்து ஓடியது போன்று புதுப் புது வடிவங்களோடு தோன்றுகிறது. (யோக சூத்திரம்-4-3). உயர்ந்த மேட்டிலே தேக்கி வைக்கப்பட்டிருக்கும் நீரைத் தக்க மடைகளைத் திறப்பதினல் மட்டுமே பள்ளத்திலே வெவ்வேறு மட்டங்களிலுள்ள நிலங்கட்கு வந்து பாயும்படிச் செய்யலாகும். இம்மாதிரியான செயல்களைப் பயிரிடுவோர் செய்கின்றனர். இம்முறையிலே தக்க சந்தர்ப்பங்கள் வாய்க்கும்போது ஒரு தொளை உண்டாவதாகவும், அதன் வழியாக ஓர் இனத்திலோ ஜாதியிலோ

உள்ளடங்கிய சக்தி (பிரகிருதி) வெளியே பாய்வது போன்று புது வடிவங்களை உண்டாக்கி, ஒரு புது இனத்தையோ ஜாதியையோ அமைக்கின்றது. (சுவாமி விவேகாநந்தரின் முழுத்தொகுதி நூல்கள் பகுதி 1–5ம் பதிப்பு, பக்கங்கள் 291 முதல் 293 வரை).

அவியக்தத்தினின்றும் தோன்றிய சிருஷ்டி முழுவதும், பிரம்மா முதலாக மிகத் தூலமான அனைத்தினும் சிறிய பொருள் ஈறுகவுள்ள படைப்பு முறை முழுதும், விகாச முறையேயாம் என்பதும், பிரளய காலத்தில் உள்ளடங்குதலான 'ஒடுக்க' முறையால் (அதாவது மீண்டும் காரண நிலைக்குச் செல்லல்) அது இயலுமாறு ஆக்கப்படுகிறது என்பதும் இந்து மதத்தின் கருத்தாகும். இந்துமதப்படி, இவ் விகாச முறைக்குப் பின்னின்று அதன் பரமகாரணமாயமைவது இறைவனது சங்கற்பமே என்பதும் இங்கு கருதத்தக்கது. (இந்நூல் அத்யாயம் 18-ஐக் காண்க).

# 18

# பிரம்மாண்டம் (தொடர்ச்சி)

## காரண நிலை

விதையினின்றும் முளை கிளம்புதல் போன்று, அவியக்தத்தினின்றும் ஆகாச தன்மாத்திரை உண்டாவதிலிருந்து படைப்பு (சிருஷ்டி) தொடங்குகிறது என்பதை முன்னர்க் கண்டோம். அவியக்தம் ஆகாசமாக மாறுகின்ற ஒரு பொருளா? அன்று, அது சக்திவடிவமாயுள்ளது. ஒரே பொருள் ஒரே மெய்ப்பொருள் ஈசனே; அவியக்தமோ பிரகிருதியோ அவனது சக்தியாகும்.

பிரளய காலத்தில் பெயரும் வடிவும் கொண்ட யாதொன்றும் இருந்ததில்லை; காலமோ தேசமோ நிமித்தமோ அப்போது இருந்ததில்லை. ஆனாலும் அப்போது வெறும் பாழாகவும் அது இருக்கவில்லை. ஏனெனில் ஏக

மான பொருளொன்று தனது அற்புதச் சக்தியோடு தனியே இருந்தது. (ரிக் வேதம் 10–129–1, 2). சிருஷ்டிக்கு முன் ஈதனைத்தும் தூய சத்தாகவே இருந்து இரண்டாவதற்ற ஏகப்பொருளாய் இருந்தது. (சாந்—உபநி. 6—2—1). அது நினைப்பதாயிற்று: 'நான் பலவாக ஆவேனாக! என்னையே யான் பலப் பலவாக வெளித்தோற்றுவிப்பேனாக' என்று. (சாந். உபநி. 6–2–3 ; தைத். உபநி–2-6). "நான் உலகங்களை சிருஷ்டிக்கட்டும்" என்று அவர் சங்கற்பித்தார். அவர் இவ்வுலகங்களை வெளித் தோற்றுவித்தார். (ஒப்பிடுக—ஐதரே. உபநி. 1-1-1,2).

ஈசன் தானே சங்கற்பிக்கிறான் ; தனது அற்புதச் சக்தியால் இப்பிரபஞ்சத்தை வெளித் தோற்றுவிக்கிறான். அவியக்தத்திலே இயற்கையிலுள்ள எல்லையற்ற வடிவங்களை வெளிக்கொணரும் சக்தி உள்ளடங்கியிருக்கின்றது. ஆனால் ஒவ்வொரு வடிவத்திற்கும் பின்னாலே உள்ள பொருள் ஈசனைத் தவிர வேறில்லை. எனினும் அவியக்தம் அவனது சக்தியாதலின், அவன் பிரபஞ்சத்தின் நிமித்த காரணம் உபதான காரணம் எனும் இரண்டுமாகிறான். இந்துக்கட்குள் தலைசிறந்து நிற்கும் கொள்கையாகிய வேதாந்தத்தின் கருத்து இதுவே. சாங்கியம் நியாயம் வைசேஷிகம் சார்வாகம் பௌத்தம் ஜைனம் எனும் மதத்தினரோ சிருஷ்டியைப்பற்றி வெவ்வேறான கொள்கைகளையுடையவராவார். இந்நாளைய இந்து மத சித்தாந்தங்கள் பலவும் ஏறக்குறைய வேதாந்தக் கொள்கையை ஒப்புக் கொள்கின்றன.

என்றாலும் ஈசன் இப்பிரபஞ்சத்திற்கு நிமித்த காரணம் உபாதான காரணம் எனும் இரண்டாகவும் இருத்தலின், தனது சுய சங்கற்பத்தினாலும் தனது அற்புதச் சக்தியாலும் ஈதனைத்தும் ஆகிறான். அவன் முதலில் ஆகாசமாகத் தோன்றுகிறான், பின் இன்னும் விகாரமடைந்து வாயுவாகிறான் ; இம்மாதிரியே இம்முறை நிகழ்ந்துவர, இறுதியில் தன்னை இரணிய கர்ப்பனாகத் தோற்றுவிக்கிறான் ; பின்

இரணிய கர்ப்பன் வாயிலாகத் தூலமும் சூக்குமமும் ஆகிய பலப்பல உலகங்களாகவும், அவற்றிலுள்ள சடம் (அறிவற்றன) சைதன்யம் (அறிவுள்ளன) எனும் இருவகைப்படும் பலவகைப் பொருள்களாகவும் தன்னைத் தோற்றுவிக்கத் தொடங்குகிறான். ஆதலின், பிரம்மா முதல் துரும்பு வரையுள்ள, அறிவுள்ள அறிவற்ற தூல சூக்குமப் பொருள்களில் ஒவ்வொன்றும், பிரம்மலோக முதல் இப்பூமிவரையுள்ள ஒவ்வொன்றும் தன்னால் தனது அற்புதச் சக்தியைக் கொண்டு வெளியே தோற்றுவிக்கப்பட்ட ஒரு குறிப்பிட்ட பெயரும் வடிவமுமாய ஓர் உடையைப் போர்த்துக் கொண்டுள்ள ஈசனேயாம்.

அவன் உண்மையாகவே இவ்வெல்லாப் பொருள்களாகவும் விகாரமடைகின்றானா? சில வேதாந்தியர் 'ஆம்' என்கின்றனர். மட்குடங்களெல்லாம் மண்ணால் செய்யப்பட்டிருப்பது போன்றும், தங்க நகைகள் எல்லாம் தங்கத்தாலும், உருக்கு ஆயுதங்கள் எல்லாம் இரும்பினாலும் ஆக்கப்பட்டிருப்பதுபோல், ஈசனால் ஆக்கப்பட்ட இப்பிரபஞ்சத்திலுள்ள பற்பல பொருள்களும் அவனையே உபாதான (முதற் காரண) மாகக் கொண்டு ஆக்கப்பட்டுள்ளன. நுரையும் சிற்றலைகளும் பேரலைகளும் கடல் நீரின் பரிணாமங்களாவதுபோல (மாறுபாடுகளாவது போல), இவை அனைத்தும் அவனாலே ஆக்கப்பட்டுள்ளன. இந்து சித்தாந்தத்தின்படி, ஈசன் தானே தனது சங்கற்பத்தால் இப்பிரபஞ்சமாகி யுள்ளனன், அந்தர்யாமி நிலையில் அதன் உள்ளிருந்து அதனை ஆண்டு வருகின்றனன்; இதுதான் விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தினரால் போற்றப்படும் பரிணாம வாதம் என்பது. இந்நாளைய பக்தி சித்தாந்தங்கள் யாவும், முக்கியமாக வைஷ்ணவ சித்தாந்தங்களும், ஏறக்குறைய இக்கொள்கையை அனுசரிக்கின்றன.

ஆனால் வேதாந்தத்தின் பிரிவான அத்வைத சித்தாந்தமோ அதனை உண்மையான மாறுபாடன்று எனக் கருதுகிறது. பிரம்மன் மாறுபடாதது, ஒழிவிலாக் காலமெல்லாம்

அது அவ்வாறே யுள்ளது. பிரபஞ்சம் உண்மையான சிருஷ்டியன்று, வெளித் தோற்றமட்டுமே (விவர்த்தமே). பகவான் இப்பொருள்கள் அனைத்துமாகத் தோன்றமட்டும் செய்கிறார். அவரை வெவ்வேறு பொருள்களாகத் தோன்றச் செய்யும் பெயர்களும் உருவங்களும் பொய்ம்மை யானவை. அவை உண்மையை நோக்குமிடத்து இல்லவே யில்லை. பொய்க் காட்சி (மித்தை)யால் ஒரு கயிற்றைப் பாம்பாகக் கொள்ளுமிடத்து, நமது காட்சியால் கயிறு எவ்விதத்திலும் மாறுபடுவதில்லை; அதுபோல பிரபஞ்சத்தைப் பற்றிய நமது மித்தைக் காட்சியால் பிரம்மன் சிறிதும் மாறுபாடடையாது. ஒருவகை மயக்கத்திற்குள்ளாகும் போது தான் நாம் பிரபஞ்சத்தைக் காண்கிறோம். நிர்விகற்ப சமாதி நிலையில் நிகழ்வதுபோல, இம்மயக்கம் தீரும்போது, ஓர் உப்புக்கட்டி கடல் நீரில் தனது இருப்பினை இழத்தல்போல ஒவ்வொன்றும் விகாரமற்ற பிரம்மனிடம் கரைந்து விடுகிறது.

மித்தையான இப்பெயர்களையும் வடிவங்களையும் வெளிக்கொணர்வது, 'அவியக்தம்' 'பிரகிருதி' 'மாயை' என்னும் பல பெயர் கொண்ட ஈசனது அற்புதமான சக்தியே. இச்சக்தி அவித்தை வடிவமானது. அதனிடத்து ஆவரண சக்தி (மறைக்கும் சக்தி) விக்ஷேப சக்தி (தோற்றுவிக்கும் சக்தி) எனும் இருபகுதிகள் உள்ளன. முன்னது மெய்ப் பொருளை மறைக்க, பின்னது மித்தையான பெயர்களையும் வடிவங்களையும் (நாம ரூபங்களையும்) வெளிக்கொணர்வதால் அதன் உண்மை நிலையினின்றும் வேறுபட்ட ஒன்றாக அதைத் தோன்றச் செய்கிறது. ஒரு சிறு விதையுள் பல்கிளையதான அரச மரத்தின் பலப் பல பகுதிகளையும் தோற்றுவிக்கும் இயல்பினை உள்ளடக்கி வைத்திருப்பது போல் பிரபஞ்சத்தின் எல்லையற்ற வடிவங்களையும் வெளித் தோற்றுவிக்கும் வழிகளைத் தன்னகத்தே அந்த அற்புதச் சக்தி அடக்கி வைத்துள்ளது. இந்த அவியக்தத்தில்தான்

முந்திய கல்பத்திருந்த எல்லா ஜீவர்களின் ஆசைகளும் அனுபவங்களும் வினைப்பயன்களும் பிரளய காலத்தில் உருக்கரந்து கிடக்கின்றன. அடுத்த கல்பத்தில் அவியக்தத்தின் மூலம் வெளித்தோற்றும் வடிவங்கட்குக் காரணமாகின்றவை இவையே.

ஆக, இந்த சித்தாந்தத்தின்படி, பிரபஞ்சத்திற்கு இருப்பு வியாவஹாரிகமேயன்றிப் பாரமார்த்திகமன்று. நாம் அவித்தையின் மயக்கத்திற்கு ஆளாகியிருக்கும்வரை அதுவும் உள்ளது. அம்மயக்கத்தினின்றும் வெளிவந்து, பரம்பொருளைப்பற்றிய முழு அறிவைப் பெற்றதும், அதாவது அதனோடு ஒன்றுனதும், அதன் இருப்பும் ஒழிந்துவிடுகிறது. இவ்வுண்மையே சாஸ்திரங்களாற் கூறப்படுகின்றது. இருடியரின் அனுபூதியினுல் உறுதிப்படுகின்றது. கனவில் ஒருவன் காணும் நிகழ்ச்சிகளும் பொருள்களும், அவன் விழிக்கும்போது முற்றும் மறைந்து பொருளற்றனவாகின்றன; அதுபோன்றே பிரபஞ்சமும் அதனிடத்துள்ள அனைத்தும் மெய்யுணர்வைப் பெற்றவுடனே மறைகின்றன. அப்போது உண்மையாக இருப்பது எதுவோ, அந்தப் பரப்பிரம்மத்திற்கு அவன் விழிப்புடையவனுகிறுன். அதனோடு ஒப்பிடுங்கால் பிரபஞ்சம் ஒரு கனவிற்கு மேலாவதில்லை.

ஒருவன் கனுக்காணுமளவும், கனுப்பொருள்கள் நன்கு உண்மையாகின்றன. அதுபோன்றே அவித்தையின் மயக்கத்திற்கு உட்பட்ட ஒருவனுக்குப் பிரபஞ்சமும் அதனிடத்துள்ள யாவும் நன்கு உண்மையாகின்றன. ஆயினும் பரப்பிரம்மனை உணரும் விழிப்பு நிலையைப் பெற்றபின் இவையனைத்தும் பயனையும் பொருளையும் இருப்பையும் இழந்துவிடுகின்றன. ஆக, இப்பிரபஞ்சத்தின் இருப்பு புறத்தோற்றமான மித்தையான வியாவஹாரிக அளவிலேதான்; அதே சமயம் பாரமார்த்திக அளவிலே அதற்கு இருப்பு இல்லை. இது பழுதையிற் பாம்பையும், பாலைவனத்திற் கானலையும், கனவில் மாளிகையையும் காண்பது போன்ற ஒன்றேயாம்.

இது இவ்வாருதலின், பிரம்மத்தின்மீது தோன்றும் பெயர்களும் உருவங்களும் மித்தையாதலின், இப்பெயர்களே யும் உருவங்களையும் வெளித் தோற்றுவிக்கும் அவியக் தமோ மாயையோ அதுவும் மித்தையாம். பிரபஞ்சத்தைப் போன்றே அதனே வெளித்தோற்றுவிக்கும் சக்தியும் அதா வது மாயையும் முற்றும் உள்ளதுமன்று. இல்லாதது மன்று. அது வரையறுத்து உரைக்கத்தகாத ஒன்றே ('ஸத் அஸத் அநிர்வசனிய ரூப:'). அத்தகைய அறிதற்கரிய ஒரு சக்தியின் துணை கொண்டு பிரபஞ்சம் சிருஷ்டிக்கப்படுகிறது. யாரால்? மாயையை ஆளுபவனுன, எல்லாம் அறிந்த, எல் லாம் வல்ல ஈசுவரனுல். அவன் மாயாவி, மாயை அவனது மாயமந்திரம், தன்னேயே ஆதார உண்மைப் பொருளாகக் கொண்டு அவன் தன்மீது தானே தோற்றுவித்த பொய்க் காட்சியே பிரபஞ்சம்.

அசையும் படத்திரையின் மீது காணப்படும் பற்பல பொருள்களும் எதனுல் ஆக்கப்பட்டுள்ளன? அவையனேத் தும் ஒளியால் ஆக்கப்பட்டுள்ளன. படத்திரையின்மீது நாம் காணும் நீர், தீ, நிலம், செடிகள், ஓடுங் கருவிகள், உயி ருள்ள பொருள்கள் முதலிய யாவும் ஒளியால், ஒளியொன் ருலே ஆக்கப்பட்டுள்ளன. ஒளியும் அதனின்றும் வேறு பட்ட இருளும், அதாவது ஒளியின்மையும், முழு மாயத்தை யும் தோற்றுவிக்கின்றன. அசையும் படக்கருவியில் பட ஏட்டிற்கும் பின்னுள்ள ஒளியோ வடிவற்ற ஒரே பிரகாசப் பெருக்கேயாகும். பட ஏடு அங்கு இல்லாவிடின், ஒரே தன் மையான பிரகாசம் வாய்ந்த திரையையன்றி வேருென்றைக் காணமாட்டோம்; பட ஏட்டை நீக்கிவிடும்போது நாம் உண்மையாகப் பார்ப்பதும் அதுவன்ருே? ஒளி தாராளமாகச் செல்வதற்குப் பட ஏடு இடந்தருவதில்லே; சில பகுதிகட்குச் செல்ல இடந்தந்து, மற்றப் பகுதிகளேத் தடுத்துவிடுகிறது. பட ஏட்டில் ஏற்படும் இத்தடையே இருட்டுப் பகுதிகட்குக் காரணமாகிறது; இவ் இருட் பகுதிகளின் வரையறைக்கு உட்பட்டுத் திரையின்மீது விழும் ஒளி ஏராளமான பல

வகைப்பட்ட பொருள்களாகத் தோன்றுகிறது. மேலும், திரையின்மீது விழும் படங்களின் அசைவாகிய மாயம் ஒளியின் அசைவு காரணமாக எழுவதேயன்று. பட ஏட்டின் அசைவால் உண்டாகும் இருட்பகுதிகளின் புதிய ஒழுங்கு வகையால் மட்டும் அது ஏற்படுகின்றது. பட ஏடு அசையும் போது, அதன் வழியாகப் பாயும் ஒளிக்குப் புதுப் புது வழிகளில் தடை ஏற்படுகின்றது. ஒளி ஒரே மாதிரியாய் உள்ளது, இருட்பகுதிகள் காணுந்தோறும் மாறி வருகின்றன; படத்திரையின்மீது காட்சிகள் அசைவதாகத் தோன்றும் பொய்க்காட்சிக்கு ஏது இவ்வளவேயன்றி, வேறில்லை.

இவ்வுலகப் பொய்க்காட்சியும் கிட்டத்தட்ட இது போன்றே உண்டாக்கப்படுகிறது. ஈசன் அசையும் படக் கருவியின் ஒளியைப் போன்றுளான். மாயை அசையும் பட ஏட்டைப் போன்றது. மாயை வழியாக நோக்கும்போது, ஈசன் நாம உருவங்களாகிய எண்ணிறந்த இருட் பகுதிகளால் பல்வகைப்படுவது போலவும் தூலப் பொருளாவது போலவும் தோன்றுகிறுன்; ஆனால் உண்மையில் ஈசன் யாதொரு மாறுபாடும் அடைவதில்லை. அசையும் பட உவமையில் படத்திரையே ஒளி மயமாயிருந்திருப்பின், அதற்குள்ளேயே இருட்பகுதிகளால் தன்னைப் பலவாருக் வேறுபடுத்திக் கொள்ளும் திறமை இருந்திருப்பின், உவமை முற்றும் பொருத்தமானதாகும். ஏனெனில் ஈசன் தன்னையே ஆதாரப் பொருளாகக் கொண்டு, தனது சக்தியாகிய மாயையால் தன் மீதே பிரபஞ்சமெனும் பொய்க் காட்சியைத் தோற்றுவிக்கிறுன். மாயை ஈசனது உண்மையை மறைத்து, ஈசனையே இவ்வுலகமாகத் தோற்றுவிக்கிறது; நாம உருவங்களில் வரம்பு கடந்த பலவகைகளை உண்டாக்குவதனுலே இது எளிதாக நிகழ்கின்றது, படத்திரையிலுள்ள இருட் பகுதிகளைப் போன்றே நாம உருவங்களும் பொருள்களல்ல.

அதே உவமையை இன்னும் சிறிது தூரம்வரை விவரிப் போம். படம் பார்க்க வருபவர்களில் யாரேனும் திரை மீதுள்ள பொய்க்காட்சியின் மூலத்தைத் தேடியறிய விரும்பு வராயின், அவர் யாது செய்கின்றனர்? அவர் அக்காட்சி யைக் காண்பதைவிட்டுத் திரும்பி, திரைக்கு முதுகைக் காட்டி, படத்தை வீழ்த்தும் கருவியினை நோக்கிச் செல்வர். அதை யடைந்ததும், பின்னுள்ள படஏடும் ஒளியுமாகிய சேர்க்கையே அப்பொய்த் தோற்றத்திற்குக் காரணமாவதை உணர்வார். அதுபோன்றே எண்ணற்ற இருடியரும் பொய்த் தோற்றமான பிரபஞ்சத்தைப் பின்புறமாக்கித் திரும்பி, அதற்கு மூலமாவது எல்லாம் உணர்ந்த எல்லாம்வல்ல பர மேசுவரர் தமது அற்புதச் சக்தியாகிய மாயையுடன் சேர்ந்திருக்கும் நிலையே என்பதைத் தேடிக் கண்டுள்ளனர்.

சிலர் இன்னும் ஒருபடி முன்சென்றனர்; அப்போது மாயையும், அதனால் உண்டாக்கப்படும் நாம உருவங்களின் அளவற்ற வகைகளும் முற்றும் மறைந்துவிட, பெயரோ வடிவோ குணமோ இலாத மெய்ப்பொருளன்றி மற்றொன் றும் இல்லாது ஒழிகிறது. இதுவே பரம்பொருள், அதீத மெய்ப்பொருள், இரண்டற்ற ஏகப்பொருள்; இதுவே மாயையொடு இணைந்து பரமேசுவரனைக் காட்சியளிக்கின் றது. அதாவது, நாம் அவித்தை நிலையிலுள்ள வரைக்கும், அதன் பயனாக உலகத்தைக் காணும்வரைக்கும், பரப்பிரம்மம் பரமேச்வர வடிவமாகவும், மாயையெனும் ஆச்சரியமான சக்தியோடுகூடி அப்பரமேசுவரன் இப்பிரபஞ்சமெனும் மித் தைக் காட்சியை உண்டாக்கியும் நடத்தியும் அடக்கியும் வரு வதாகவும் தோற்றமளிக்கும்.

சுருங்கக்கூறின், இதுவே அத்வைதவேதாந்த மதத்தில் ஸிருஷ்டியைப் பற்றிய விவரணமாகும். பிரம்மத்தின் மாற்ற மும் மாற்றமின்மையும் கனவு கானல் நீர் என்னும் உவமை களால் விளக்கப்படுகின்றன. ஆனால் இதனை விளக்கும்

மாயையோ மெய்யுமன்று (ஸத் அன்று) பொய்யுமன்று (அஸத்தும் அன்று) இன்னதென்று வரையறுத்துக்கூற வொண்ணாதது (அநிர்வசனீயம்) எனப்படுகின்றது. அது சற்றும் அறிய முடியாததாகின்றது. ஒன்றுக்கொன்று எதிரான இரு தன்மைகள் அவ்வாறு ஒன்றுயிணைந்திருத்தலைச் சிந்தித்தலும் நமக்கு இயலாததேயாம்; பிரம்மத்தினிடத்து மாற்றத்தையும் மாற்ற மின்மையையும் ஒரே சமயத்தில் இருப்பதாகக் கருதுதல் இயலாதுபோல, ஒரு முரண்பாட்டின் பொருத்தத்தை எடுத்துக்காட்டுதற்காக நாம் வேறொரு முரண்பாட்டைப் பயன் படுத்துவதாகிறதன்றோ? சிருஷ்டியைப் பற்றிய இரகசியம் இன்னும் நமது அறிவுக்கு எட்டாததாகின்றதல்லவா?

ஆம்; பேசப்படும் பொருளின் இயல்பினுலே அது என்றென்றும் அங்ஙனம் ஆதல் வேண்டும் என்பதாகின்றது. சிருஷ்டிக்குக் காரணமாகும் தெய்விகத் தூண்டுதலும், அது குறித்து நிகழும் முதல் முயற்சியும் எப்போதும் மறை பொருள்களாகவே இருத்தல்வேண்டும். இவை இயற்கை நிகழ்ச்சிகளைப் போன்ற செயல்களல்ல; காரணம் யாதெனின், அந்நிலையில் காலமோ தேசமோ காரணகாரிய நியதியோ இருப்பதில்லை; அவை அப்போது தோன்றியபாடில்லை. ஆதலின் இத்தகைய நிகழ்ச்சிகளைப் பற்றி 'ஏன்? எவ்வாறு?' என்று வினுக்கள் எழ வழியில்லை. பரப்பிரம்மமோ மனவாக்குகட்கு அதீதமானது; அதைப் போன்றே சிருஷ்டிக்குக் காரணமாகும் ஆரம்பத் தூண்டுதல்களும் அவ்வண்ணமாதல் அவசியமே.

சிருஷ்டியின் இரகசியம் அறிய வொண்ணாதது என்பதை ரிக்வேதம் எடுத்துக்காட்டுகிறது; அது கூறுவதாவது: "இப் பலவகையான படைப்பு (சிருஷ்டி) எங்கிருந்து கிளம்பிற்று என்பதை முற்றும் அறியவல்லார் யாரே? அதனைப் பொருத்தமாகக் கூறவல்லார் யாரே? தேவரும் படைப்பின்

பின்னரே தோன்றினர். ஆதலின் எங்கிருந்து அது உண்டா யிற்று என்பதை யார் அறிவார்?'' ஒருவரும் இலர் என்பது வெளிப்படை; ஈசனுர் தமது சங்கற்பத்தால் ஈதனைத்தை யும் தம்மிடத்திருந்தே தோற்றுவித்தனர் என்பது சாஸ்திரங் களால் வெளியிடப்பட்டுள்ள உண்மை, இருடியர் நேரில் உணர்ந்த உண்மையுமாகும். இவ்வுண்மை நமது அறிவினை விஞ்சியிருப்பதனுலே, வெறும் தருக்கமுறை ஆராய்ச்சியால் நாம் ஒன்றும் முடிவு கட்ட இயலாது. நித்தியமாக மாறுத லற்ற பரம்பொருள் எப்போதும் மாறிக்கொண்டிருக்கும் பலதிறப்பட்ட பிரபஞ்சத்திற்கு ஆதாரமாகின்றது என்னும் கருத்தைக் கேட்டு நமது மனம் திகைக்கலாம்; ஆயினும் அது அவ்வாறுதான் உள்ளது. அதை ஓர் உண்மையாக நாம் ஒப்புக் கொள்ள வேண்டியதாகிறது. அதை மனித னது தருக்கமுறை அறிவால் ஒருகாலும் விளக்க இயலாது. சிருஷ்டி ஏன் நிகழ்கிறது, எவ்வாறு நிகழ்கிறது என்றதை மனித அறிவால் ஒருநாளும் காணமுடியாது. ஒன்றுக் கொன்று எதிரான பொருள்களை எடுத்துக்காட்டி நமது அறிவைக் குழம்பச் செய்யும் உண்மை எதுவோ, அதுவே மாயையென்று சுவாமி விவேகாநந்தர் விளக்குகின்றனர். நித்தியமான பூரணத் தன்மையையும் மாருத இயல்பையும் பெற்றிருத்தலும், அதே சமயம் தமது இச்சையால் பிரபஞ் சத்தை ஆக்கலும் காத்தலும் அழித்தலும் ஈசர்க்கு இயலும். அவரது அறியவொண்ணு இயல்பு (பிரகிருதி) அத்தன்மைய தாகும். அவரது அற்புதச் சக்தியும் அத்தன்மையதாகும். 'ஏன்? எவ்வாறு?' என்னும் வினக்களைப் பற்றிய அல்லல் நமக்கு வேண்டாம்.

ஆயினும் சிருஷ்டியைப் பற்றிய உண்மை ஈசரை அடைந் தோரால் உணரப்படலாம். அவரை அறிவதால் படைப்பி லுள்ள யாவும் அறியப்படுகின்றன, எல்லாப் புதிர்களும் தீர்ந்துவிடுகின்றன. இந்து சமயத்திற்குள் அடங்கிய பற் பல மத சித்தாந்தங்களின் நோக்கமும் யாதெனில், அவற்

றைப் பின்பற்றுவாரை அத்தகைய உணர்வு நிலைக்கு நடத்திச் செல்வதே. சிருஷ்டியென்னும் உரைத்தற்கரிய இரகசியத்தைப் பற்றிச் சித்தாந்தங்கள் அளிக்கும் பற்பல முடிபுகளும், அவை அத்தகைய உணர்வு நிலையைச் சார்தற்கென வகுத்துள்ள பற்பல நெறிகட்கு ஏற்றவாறு அமைந்துள்ளன. சிருஷ்டியைப்பற்றிய அதீத மறை பொருள்களைப் பற்றிய முழு உண்மையையும் இவற்றில் எதுவும் எடுத்துக் கூற இயலாது. ஆயினும் ஒரு குறிப்பிட்ட ருசியும் அறிவுத் திறமையும் வாய்ந்த மக்கட் பகுதி யொன்றினை மெய்ப் பொருட் காட்சியெனும் நிலைக்கு இழுத்துச் செல்லப் பயன் படும் மதிப்பு ஒவ்வொன்றுக்கும் உள்ளதே. இம்முறையில் எதுவும் பிழையுற்றதாகாது, பயனற்றதுமாகாது.

# 19

# ஜீவன் (ஆன்மா)

## ஓர் உயிர்

முந்திய அத்தியாயங்களில் வேறு பொருள்களைப் பற்றிப் பேசும்போது பலமுறை 'ஜீவன்' என்ற மொழியைச் சந்தித்துள்ளோம். அம்மொழி இன்னதைக் குறிக்கின்றது என்பதை ஓர் அளவிற்கு முன்னரே நாம் அறிந்துள்ளோம். இனி முன்னினும் விவரமாக ஆராய்வோம்.

'ஜீவன்' என்பதன் பதப்பொருள் 'ஓர் உயிருடைய பொருள்' என்பது. இயற்கையிலேயே உயிரைப் பெற்றுள்ள பொருள் யாதும், விரிந்த பொருள் கொள்ளுமிடத்து 'ஜீவன்' என்று அழைக்கப்படும். உயிருடைய பொருள் கட்கு உறைவிடமாவது இயற்கை என்னும் இந்துமதக் கருத்து ஒருவாறு விரிவுடையதேயாகும். ஜீவர்கள் உயிரோடு வாழ்வதற்காகத் தூலமும் சூக்குமமுமான பல உலகங்கள் உள்ளன. உதாரணமாக ஒரு ஜீவன் மிகச் சிறு

நுண்ணுயிராகவோ, செடியாகவோ, விலங்காகவோ, மனிதனுகவோ தேவதையாகவோ இருக்கலாம். மிகவுயர்ந்த தேவதையாகிய இரணியகர்ப்பரும், யான் முன் கூறியுள்ள படியே ஒரு ஜீவராவார். படைப்பிலுள்ள எல்லா ஜீவர்களை யும் குறிப்பிடும்போது, இந்து சாஸ்திரங்கள் உபயோகிக் கும் ஒரு சாதாரண சொற்ருெடராவது "பிரம்மா முதலாகப் புல் ஈருக" என்பது (ஆப்பிரம்ம ஸ்தம்ப பரியந்தம்). உண் மையாகவே, பற்பல உலகங்கள் அடங்கிய பிரம்மாண்டம் எண்ணற்ற வகைப்பட்ட உயிர்கட்கு உறைவிடமாகவே கரு தப்படுகிறது.

ஜீவர்கள் 'சரம்' (இயங்குவன) ஆகவோ அசரம் (நிலை யாயிருப்பன) ஆகவோ இருக்கலாகும். இந்து இருடியரது முடிபின்படி சரமோ, அசரமோ, செடியோ, விலங்கோ, தேவதையோ எதுவாயினும், ஒவ்வொரு ஜீவனும் அறிவு டைய பொருளேயாகும். உயிருள்ள பொருள் எதுவும் அறி வையும் பெற்றுள்ளதேயாகும். ஒரு செடிக்கும் ஒரு விலங் கிற்கும் உள்ள வேறுபாடிருப்பது அவை பெற்றுள்ள அறி வின் அளவிலேயாகும். ஒவ்வொரு ஜீவனும் ஓர் அறிவு டைய (உணர்வுடைய) பொருளே, சுகதுக்க வேதனைகட்கு உட்பட்டதாகும். அது போக்தாவும் கருத்தாவும் ஆகும். இவையே ஒரு ஜீவனின் சிறப்பான இயல்புகளாம்; இவற் ருேடு இப்பிரபஞ்சம் எனும் முழுயந்திரமும் உயிர் வாழ்க் கைக்கு இன்றியமையாத முறையிலே தொடர்புற்றுள்ளது.

ஒரு ஜீவனது செயல் அதன் அனுபவத்தோடு கரும மென்னும் கடுமையான நியதியினுல் பிணைக்கப்பட்டிருப்பதை நாம் கண்டுள்ளோம், சுக வடிவமாகவோ, துக்க வடிவமா கவோ ஒரு ஜீவன் அனுபவிக்கவேண்டியிருப்பது, முன்னைய பிறவிகளில் அது செய்துள்ள சொந்தச் செயல்கள் சிலவற் றின் நிச்சயமான பயனேயாகும். தம் வினைகளின் பயன் களை நுகர்வதற்கே அவை மீண்டும் மீண்டும் பிறக்கின்றன. பிரளய காலத்தும் ஜீவர்கள் ஒடுங்கிய நிலையிலே இருப்பன;

அவற்றின் பழைய வினைகளின் பயன் விளைவதற்காகவே ஒரு புதிய சிருஷ்டி நிகழ்வதும், பிரபஞ்சமும் படைக்கப்படுவதும். ஜீவர்களே நடன அரங்கத்தின் நடுவே உண்மையாக வீற்றிருக்கின்றனர்; இயற்கையிலுள்ள ஏனைய யாவும் அவற்றின் செயலுக்கும் அனுபவத்திற்கும் என்றே அமைந்துள்ளன.

ஜீவர்கள் ஒருவர்க்கொருவர் வேறுபடுவது பெயர்களிலும் உருவங்களிலும் மட்டுமல்ல; அறிவாற்றலிலும் செயலையாற்றும் திறனிலும் அவர்கள் வேறுபடுவர். அவர்கட்குள் வேறு உயர்வற உயர்ந்த ஜீவராகிய இரணிய கர்ப்பர்க்குரிய இத்திறனே எல்லையற்றதாகின்றது; ஆனால் மிகச் சிறு நுண்ணுயிரின் திறனே அணுவளவானது என்று நன்கு கூறலாகும். வரையறைக்குட்பட்ட அறிவுத்திறனைப் பெற்றுள்ள மனிதனும் மிகச்சிறு நுண்ணுயிரோடு ஒப்பிடும் போது அத்திறன்களைப் பற்றிய வரையில், அதனினும் அளவு கடந்த மேன்மையுள்ளவனாகவே தோன்றுகிறான். இந்நிலவுலகிலே ஒரு மனிதனுக்கும் ஒரு மிகச் சிறிய நுண்ணுயிர்க்கும் இடையேயுள்ள அளத்தற்கரிய தூரத்தைக் கணக்கற்ற பலவகை ஜீவர்கள் நிரப்பி வருவதாக உண்மையிற் காணப்படுகின்றனர். அதுபோன்றே ஒரு மனிதனுக்கும் இரணியகர்ப்பர்க்கும் (பிரம்மாவிற்கும்) இடையிலுள்ள தொலையும் அளவற்றதாதலின், அதனையும் கணக்கற்ற பலவகை ஜீவர்கள் நிரப்பி வருதலும் நிகழக் கூடிய ஒன்றுதானே. உண்மை அதுவே என்பது இந்து சாஸ்திரங்களின் கொள்கை; இவ்வுலகிற்கு வெளியே மனிதரை விஞ்சிய உயிர்கள் பலப்பல படிகளில் வாழ்கின்றனர்.

இதிலே அறிவிற்குப் பொருத்தமற்றது யாதொன்றுமில்லை. சாஸ்திரங்களின் முடிபுகள் உண்மையாகவே உற்று நோக்கிக் கண்டவற்றையே ஆதாரமாகக் கொண்டுள்ளன. நாம் அத்தகைய உயிர்களைச் சாதாரணமாகக் காண்பதில்லை என்பது அவற்றின் இருப்பைப் பொய்யாக்கும்

சான்றுகாது. நச்சுயிரையும் (நோயை உண்டாக்கும் நுண்ணிய சிற்றுயிரையும்) நாம் கண்ணுற் காண்பதில்லை; ஆனாலும் அந்த நச்சுயிரின் இருப்பு கதையன்று. ஏனெனில் வடிவை நூற்றுக் கணக்காகப் பெருக்கிக்காட்டும் ஒரு கண்ணுடி வழியாக நோக்கி அதைக் காணல் நமக்கு இயலும். அதுபோன்றே மனிதர்க்கு மேற்படிகளிலுள்ள இவ்வுயிர்களையும் யோகக் காட்சியால் நாம் நேரே காணக்கூடும். அக்கண்ணுடியைத் தயாரித்தற்காகப் பாடுபடுதல் நமக்கு அவசியமாதல்போல, திறமை வாய்ந்த தெளிந்த யோகக்காட்சியை உண்டு பண்ணுதற்கும் முயற்சியை நாம் கைக்கொள்ள வேண்டும். ஆயினும், இவ்வுயிர்களின் இருப்பைப் பற்றிய உண்மை, அத்தகைய காட்சியைப் பொறுத்து நிற்பதாதலின் கட்டுக் கதையன்று.

மனிதனுக்கும் பிரம்மாவுக்கும் இடையே பல படிகளிலே வாழும் இந்த ஜீவர்கள் இந்நிலவுலக மல்லாத பல வகைப்பட்ட உலகங்களை உறைவிடமாகக் கொண்டுள்ளனர். இவ்வுலகங்கள் ஒவ்வொன்றிலும் உறைபவர் தமக்கெனத் தனியாக ஒரு பொதுப்பெயர் கொண்ட ஒரு வகுப்பினராவார். இந்துமத சாஸ்திரங்களிற் கூறப்படும் சில வகுப்பினர் ஆவார், யக்ஷரும், ஸாத்யரும், கின்னரரும், கந்தருவரும், தேவரும்; கடைசி இரண்டு வகுப்பினர்க்குச் சிறப்பாக (மற்ற வகுப்பினர்க்குப் பொதுவாகவும்) தனித்தனி உலகிலே வாழும் வெவ்வேறு உட்பிரிவினரும் உளர் என்று கூறப்படுகின்றது. ஆயினும் மனிதரை விஞ்சிய ஜீவர்களைப்பற்றிய அட்டவணை சில பெயர்களை மட்டும் குறிப்பதன்றி எல்லாப் பிரிவினரின் பெயர்களையும் குறிப்பதன்று என்றே தோன்றுகிறது.

இந்த ஜீவர்கட்கு உறைவிடமாகும் பற்பல உலகங்களைப் பற்றிய அட்டவணையிலும் இதுவே உண்மையெனத் தோன்றுகிறது. பிருத்வி யென்னும் இவ்வுலகம் நடுவேயிருப்பதாகவும், இதற்கு மேலும் கீழும் இன்னும் பல உலகங்கள் இருப்பதாகவும் கூறப்படுகின்றது. முறையே சுவர்க்

கம், மத்தியம், பாதாளம் எனும் பெயர்பெறும் மேல், நடு, கீழ் எனும் மூவகை யுலகங்களும் அடங்கிய பிரம்மாண்டமும் திரிபுவனம் (மூவுலகம்) எனும் பெயராற் குறிப்பிடப்படுகின்றது. ஆயினும், இன்னும் விவரமாகக் கூறும் அட்டவணையில் பதினன்கு உலகங்கள் (சதுர்தச புவனனி) கூறப்படுகின்றன. நாம் வாழும் உலகிலிருந்து மேலே பூ, புவர், சுவர், சன, மஹ, தப, ஸத்ய எனும் ஏழுவகை உலகங்களும் அதற்குக்கீழே அதல, விதல, சுதல, ரசாதல, தராதல, மஹாதல, பாதாள உலகங்களாகிய ஏழும் உள்ளன (ஒப்பிடுக: வேதாந்த ஸாரம் 104). ஓர் உபநிடதத்தில் அக்கினி லோகம், வாயு லோகம், வருணலோகம், ஆதித்திய லோகம், இந்திரலோகம், பிரஜாபதி லோகம், பிரம்மலோகம் என்பவை மேல் ஏழு உலகங்களாகக் கூறப்பட்டுள்ளன. (ஒப்பிடுக: கௌஷீதகி உபநிஷத் 1-3). முந்திய அட்டவணையிற் கூறப்பட்டுள்ளவையும் இவையும் பொருந்தவில்லையாதலின் வேருனபிற உலகங்களைக் குறிப்பதாகக் கொள்ளல் வேண்டும். இது எவ்வாருயினும் இரண்டு அட்டவணைகளிலுமுள்ள உயர்ந்த உலகங்களாகிய சத்திய லோகமும் பிரம்மலோகமும் ஒன்றேயாம். சில சமயங்களில் மேலுலகங்கள் எல்லாம் பிதுர்லோகம் தேவலோகம் பிரம்மலோகம் எனும் முப்பிரிவுகளுள் அடக்கப்படும். இந்த அட்டவணைகளில் எதுவும் முடிவாகக் கூறுவதாகத் தோன்றவில்லை; பிரம்மாண்டத்தில் பலப்பல உட்பிரிவுகள் இருப்பதையும் அவற்றுள் முக்கியமான சிலவே கூறப்பட்டுள்ளன என்பதையும் ஒவ்வொன்றும் குறிப்பாகக் காட்டுவதாகத் தெரிகின்றது.

இது சம்பந்தமாக இன்னெரு இந்துமதக் கருத்தும் கூற வேண்டியதேயாகும். ஒவ்வோர் உலகமும் ஒவ்வோர் 'அதிஷ்டான தேவதை'க்கு உட்பட்டிருப்பதாகக் கூறுவர்; அவ்வுலகம் அத்தேவதையின் பெயரைக் கொண்டே பன்முறையும் அழைக்கப்படுவதுண்டு. இம்முறைப்படி இரண்

டாவது அட்டவணையிலுள்ள மேல் ஏழு உலகங்களும், முறையே அக்கினி, வாயு, வருணன், ஆதித்தியன், இந்திரன், பிரஜாபதி, பிரம்மன், எனும் தேவதைகளின் ஆட்சிக்கு உட்பட்டிருத்தலைக் குறிப்பிடுகின்றன. அதுபோன்றே ஏனைய உலகங்கள் யாவும் வெவ்வேறு அதிஷ்டான தேவதைகட்கு உட்பட்டுள்ளன.

இந்துமதப்படி, சைதன்யமே (அறிவொளியே) பிரபஞ்ச முழுதும் பரவியுள்ள அழிவற்ற தத்துவமாகும். அக இயற்கையிலே அதைத் தன் வாயிலாக வெளிப்படுத்தும் நுண்ணிய கருவியாவது சூக்கும பூதங்களால் (தன்மாத்திரைகளால்) ஆக்கப்பட்டுள்ள அந்தக்கரணமே. இதுவும், முதன் முதலாக உண்டான அண்ட புருடனாகிய இரணிய கருப்பனின் உடலன்றி வேறில்லையாதலின் எங்கும் வியாபக முடையதேயாம். செயல்களை இயற்றுதற்கு உதவும் தூலமான சடக்கருவியும் விராட் புருஷனின் உடல் வடிவாகி ஒரே முழுமையாகத் தொழிலாற்றி வருகின்றது; அதுவும் தூலசடப் பிரபஞ்சம் முழுமையிலும் வியாபக முடையது.

ஈசன் முதலில் இரணியகருப்பனாகவும், பின் விராட் ஆகவும் தோன்றுகிறான்; பின்பு பற்பல மற்ற தேவதைகளாகவும் மற்றெல்லா ஜீவர்களாகவும் தன்னைத்தானே பிரித்துக் கொள்ளுகிறான். ஈசன் தனது மாயையால் பலவாகின்ற வகை இதுவே. ஒவ்வொரு ஜீவனும் தனக்கென வேறான ஓர் அகங்காரத்தைத் கொண்டவனாயினும் விராட் புருஷனின் ஒரு பகுதியேயாகும். ஒரு மனிதனுடைய தூல உடலிலே எண்ணிறந்த நுண்ணிய உயிர்க்கூடுகள் உறைவது போல, விராட் புருஷனது எங்கும் பரந்த உடலிலும் எண்ணிறந்த ஜீவர்கள் உறைகின்றனர். இதுவே இந்துக்களின் துணிகரமான கருத்தாகும். சைதன்யமும் (உணர்வும்), உயிரும் மனமும் எனப்படும் சூக்குமக் கருவியும், செயலிற்கு வேண்டிய தூல, சடக்கருவியும்—இம்மூன்றும் எங்கும் வியாபக முள்ளனவாகக் கருதப்படுதலின், இயற்

கையின் எந்தப் பகுதியிலும் ஒரு ஜீவன் தோன்றுவதற்கு அவசியமான யாவும் அடங்கியுள்ளன என்பது உண்மையே.

ஆன்மா

ஓர் உயிருள்ள பொருள் அறிவுற்றனவும் அறிவற்றனவுமான பகுதிகளின் தொகுதியேயாகும். அவ்வுயிர்ப் பொருளில் உள்ள அறிவெனும் பொருளே சாஸ்திரங்களால் ஜீவனெனும் பெயரால் குறிப்பிட்டு அழைக்கப்படுகிறது.

மனம், இந்திரியங்கள், தூலவுடல் இம்மூன்றினும் வேருகவுள்ளது ஆன்மா ; அது ஓர் உயிர்ப் பொருளின் தனியான சுதந்திரமான பகுதியாகும். அதுவே வீட்டின் உடையவன். அதுவே இரதத்தின் மீதுள்ள சாரதி (ஒப்பிடுக: கட. உபநி. 1–3–3). அது (அந்தர் ஜோதி) சுயஞ் ஜோதி வடிவமானது (ஒப்பிடுக : பிருஹ. உபநி. 4-3-7). உணர்வே அதன் இருப்பின் ஸாரமாகும். ஓர் உயிருள்ள பொருளின் அமைப்பில் அடங்கியுள்ள உணர்வு மயமான பொருள் அது ஒன்றே. ஆதலின் இதுவே தாஞன தன்மையில் ஜீவஞவது.

இந்த ஆன்மாவுக்கு மூன்று உடல்கள் மிகத் தூல நிலையிலிருந்து மிக நுண்ணிய நிலைவரை உறைகளாக அமைந்துள்ளன ; அவைபாவன : தூல உடல், சூக்கும உடல், காரண உடல் எனும் மூன்றும். தூலவுடல் தூல பூதங்களாலும், சூக்குமவுடல் சூக்கும பூதங்களாகிய தன்மாத்திரைகளாலும் ஆக்கப்பட்டுள்ளன. இக்காரணம் பற்றியே இவை பௌதிகங்கள்—அதாவது, பூதங்களால் ஆக்கப்பட்டவைகள்—எனப்படும். காரண உடல் அவியக்தத்தின் வெளிப்படையாக விளங்காத அகண்டாகார சக்தியின் ஒரு சிறு பகுதியே யாகும் ; பூதங்களும் பௌதிகங்களும், விளங்கக் காணப்படும் அதன் விதங்களேயாம் (பிரகாரங்களாம்). அவியக்தமும் அதன் விதங்களும் உணர்வற்றனவாம்: ஆதலால் தூல சூக்கும காரண உடல்கள் மூன்றும் அவ்வண்ணமேயாம்.

காரண உடலிலே ஓருயிரின் சிறப்பியல்புகளும் சார்பு களும் விதை நிலையிலே அடங்கியுள்ளன. விதைக்கும் மரத் திற்கும் காரண காரிய சம்பந்தம் இருப்பதுபோல, இந்த உடல் அவ்வுயிரின் வாழ்விற்கும் முன்னேற்றத்திற்கும் காரணமாய் அமைகின்றது. இக்காரணம் பற்றியே அது அப்பெயர் பெறுவதாயிற்று.

சூக்கும உடலிலே, நாம் முந்தியதோர் அத்தியாயத்திற் கூறியபடி, விஞ்ஞானமய மனோமய பிராணமய கோசங் களாகிற மூன்று அறைகளும் அடங்கியுள்ளன. இவை முறையே அறிதல், கருதுதல், உயிர்ப்பு எனும் மூன்று தொழில்கட்கும் நிலைக்களமாகின்றன. விஞ்ஞான மய கோசத்தில் புத்தியும் ஐந்து ஞானேந்திரியங்களும் அடங்கி யுள்ளன ; மனோமய கோசத்தில் மனமும் ஐந்து ஞானேந்திரி யங்களும், பிராணமய கோசத்தில் ஐந்து பிராணன்களும் ஐந்து கருமேந்திரியங்களும் அடங்கியுள்ளன. இவையனைத் தும் ஜீவனது சுவாதீனத்தில் அமைந்துள்ள நுண்ணிய கரு மேந்திரியங்களும் ஞானேந்திரியங்களும் ஆகும்.

தூல உடலை ஜீவன் தன் கருமங்கட்கும், முற்பிறவி களிற் பெற்றுள்ள அறிவின் தொகுதிக்கும் ஏற்றவாறு அமைத்துக் கொள்கிறான் ; இது பற்றியே அது, காரணம் (கருவி) எனப்படும் தூல உடலினும் வேறான காரியம் (பயன்) எனப்படுகிறது. இவ்விரண்டின் சேர்க்கையே 'காரிய காரண சங்கதம்' என்று உரைக்கப்படுகின்றது. ஆயினும், உடலைக் கட்டுதற்குப் பயன்படுத்தப்படும் முக்கிய கருவியாவது பிராணனே (உயிர்ச் சக்தியே); இப்பிராணன், வெவ்வேறு தொழில்களை இயற்றுதலினால் ஐந்தெனச் சாதாரணமாகக் கணக்கிடப்படினும், உண்மையில் ஒன்றே யாம். முற்பிறவிகளிலே உள்ளத்திலே தொகுத்து வைக்கப் பட்டுள்ள ஸம்ஸ்காரங்கட்குத் (பதிவுகட்குத்) தக்கவாறு ஜீவன் பிராணனை ஆட்டி வைத்து வருகிறது. தூல உடலை

ஆக்குவதற்கு வேண்டிய பொருள்கள், ஜீவன் அச்சமயம் எந்த உலகிற்குச் சொந்தமோ அவ்வுலகினின்றும் உணவின் மூலமாகச் சேகரிக்கப்படுகின்றன. இத்தூல சட உடலின் மூலமாகவும் அதன் உறுப்புகள் மூலமாகவும் ஜீவன் சடப் பிரபஞ்சத்தோடு சம்பந்தப்பட்டு, அதன்மீது செயல் புரிந்து அதன் செயலுக்கு எதிர் வினையையும் இயற்றுகிறது.

ஜீவனுக்கு உறைகளாக அமையும் இம்மூன்று வெவ்வேறான உடல்களும் உணர்வற்றன (அறிவற்றன). ஜீவன் மட்டும் அறிவுடையது. தனியாக இயங்கும், சோதி வீசும் அகண்டப் பொருளென அதனைச் சாஸ்திரங்கள் குறிக்கின்றன. (ஒப்பிடுக: பிருஹ-உபநி. 4-3-11). பூதங்களையும் பௌதிகங்களையும் போல அது படைக்கப்பட்ட ஒரு பொருளன்று, இறைவனே ஓர் உயிரின் ஜீவனாகத் தோன்றுகிறான். சாஸ்திரங்கள் நமக்கு அறிவிப்பதாவது: இப்பிரபஞ்சத்தில் இருப்பது எது எதுவோ, அவையனைத்தையும் அவர் படைத்துள்ளார். படைத்துவிட்டு, அவர் உண்மையாகவே அதற்குட் புகுந்தார்" (தைத்தி-உபநி. 2-6-17). பெரியனவும் சிறியனவுமான, எல்லாப் பிராணிகளின் காரண சூக்கும தூல உடல்களையும் படைத்தபின் ஈசுவரர் அவையனைத்திற்குள்ளும் அவற்றின் ஆன்மாவாக (ஜீவனாக)ப் புகுந்தனரெனச் சொல்லப்படுகின்றது. கீதையிலே பகவான் "ஜீவலோகத்திலே எப்போதுமுள்ள எனது அம்சமே ஜீவனாகத் தோன்றியுள்ளது" என்கிறார் (கீதை 15–7). இக்காரணம் பற்றியே ஜீவாத்மா (ஜீவன்) பிறப்பற்றது, இறப்பற்றது, அழியாதது என்பதும் பிறவும் கூறப்படுகின்றன. (ஒப்பிடுக; கட-உபநி. 1-2-18). ஜீவான்மா உண்மையாகவே பரமான்மாவாகும், அதனின்றும் வேறன்று. "பிறப்பிற்கோ, தேய்விற்கோ, மரணத்திற்கோ உட்படாத இப்பெரிய ஆன்மா உண்மையாகவே, எவ்வித பயங்களுமற்ற பிரம்மமேயாம்" (பிருஹ, உபநி. 4–4–25).

சாஸ்திரங்களிற் காணப்படும் இம்மாதிரியான உரைகள் அனைத்திலுமிருந்து விசிஷ்டாத்வைத வேதாந்தம் நிலை நாட்டும் முடிவாவது: ஆன்மா பகவானின் மெய்யான சாஸ்வதமான தனியான ஒரு கூறு (அம்சம்) போன்றது என்பது. ஒரு பொறி நெருப்புக்கு எப்படியோ, அதே சம்பந்தமுடையது ஜீவன் ஈசனுக்கு; அது தன்னியல்பால் தெய்வ மயமானது; எல்லாம் அறிந்த, எல்லாம் வல்ல, எங்கும் உள்ள இறைவனின் அணுவனைய கூறேயாம் அது. தீச் செயல்களின் பயனாக, அது மாசுற்றதாகிறது; அப்போது அது சுருங்குவதாகக் கூறப்படும். அதன் தெய்வமயத் தன்மை சிறிது பொழுதிற்கு அடக்கி வைக்கப்படுகிறது. ஆனால் அது தக்க ஞான சாதனப் பழக்கத்தால் படிப்படியாக விரிவடைந்து, தனது தெய்வமயத் தன்மையை முற்றிலும் வெளிப்படுத்துகிறது. பின்னர் கட்டு நீங்கி, பகவானது முன்னிலையிலும் அவரோடும் யாண்டும் இன்பந் துய்த்துக் கொண்டிருக்கிறது. ஆன்மாவைப் பற்றியும் அதன் பந்த நிலை முக்தி நிலைகளைப் பற்றியும் பக்தி சித்தாந்தத்தினர் கொள்ளும் கருத்து ஏறக்குறைய இதுவே.

ஆனால் அத்வைத வேதாந்திகளோ வேறுபட்ட ஒரு கருத்துடையராவார். ஒரு தனி மனிதனின் ஜீவன் பரப்பிரம்மத்தின் அம்சமாகத் தோன்றினும், "எவ்விதப் பயன்களும் நீங்கிய, எங்கும் நிறைந்த அறிவற்ற பிரம்மனே" யன்றி வேறில்லை என்பர். ஜீவனும் பிரம்மனும் ஒன்றே என்ற ஐக்கிய உண்மையை எல்லா உபநிடதங்களும் போதிக்கின்றன. ஆத்மாவின் உண்மையான இயல்பை அறிவதனால் ஒருவன் முத்தியெய்துகிறான் என்பதன் காரணம் இதுவே. ஜீவன் அவித்தையின் (அறியாமையின்) வசப்பட்டு ஈசனினின்றும் மற்ற பிரபஞ்சத்தினின்றும் வேறுபட்ட ஓர் அற்ப தனி மனிதனாகத் தன்னைக் கருதும் வரை, அது கட்டுப்பட்டே இருக்கின்றது. தகுந்த ஞான சாதனப் பழக்கத்தால் அது பரமாத்மாவினின்றும் வேறுபடாத ஒன்றாகத் தன்னை உணருமாயின், அப்போதுதான் அது ஸம்

ஸாரத்தினின்றும் (பிறவிக் கடலினின்றும்) விடுபட்ட நிலையினை அடைகிறது. இதனால் சாஸ்திரங்கள் விதிக்கும் கட்டளையாவது: ''ஆத்மாவைத் தரிசிக்கவேண்டும்; அதைப் பற்றிக் கேட்கவும் சிந்திக்கவும் தெளியவும் வேண்டும்'' (பிருஹ. உபநி. 2–4–5.)

அகண்ட சச்சிதாநந்தக் கடலாக எந்நாளும் இருக்கும் ஒரே பொருளான பரப்பிரம்மத்தினின்றும் வேறானதன்று ஆன்மா. அவியக்தத்தினின்றும் தொடங்கி கீழேயுள்ள அனைத்துப் பொருள்களும் வியாவகாரிக நிலையிலே மட்டும் உள்ளனவாகும். அவித்தையின் வசமாக இருக்குமளவும் மட்டும் அவை உள்ளன. ஆத்ம ஞானம் உதயமானதும், அவை கனவைப் போன்று மறைகின்றன. அவை உள்ளனவாகக் காணப்படும் அளவும் தூலமும் சூக்குமமான, சடக் கருவித்திரைகளின் எண்ணிறந்த ஒரு வரிசையாக மட்டும் அவை தொழிற்படுகின்றன; இத்திரைகளின் வழியாக நோக்கும்போது ஒரே பரமாத்மா கணக்கற்ற தனித்தனி ஜீவர்களாகத் தோற்றமளிக்கின்றது. ஒவ்வொரு திரையும் அதனதன் அமைப்புக்குத் தக்கவாறு, ஒரே எல்லையற்ற உருவமற்ற மெய்ப்பொருளைப்பற்றி ஒரு வரையறையுற்ற தனி நிறங்கொண்ட காட்சியை அளிக்கின்றது. இக்காரணம் பற்றியே இத்திரைகள் 'உபாதிகள்' எனப்படுகின்றன.

(காரணம் எனப்படும்) அவியக்தம் முழுதும் உபாதியாக அமைய அதன் வழியாக நோக்கும் போது, பரப்பிரம்மம், ஆக்கல் அளித்தல் அழித்தல் எனும் முத்தொழில்களையும் இயற்றும், எல்லாம் அறிந்த எல்லாம் வல்ல, ஈசனாகக் காட்சியளிக்கின்றது. ஈசனது சங்கற்பமும் கட்டளையும் பிறந்ததும், அவியக்தம் தன்னுள்ளே பிரளய காலத்து உருக்கரந்த நிலையில் இருந்த சூக்கும உபாதிகளை வெளிப்படுத்துகின்றது; அவை வாயிலாக ஈசுவரரே வெவ்வேறு ஜீவர்களாகத் தோன்றுகிறார்.

ஸமஷ்டிபுத்தி (உலகத்தாருடைய மொத்த புத்தி) யென்னும் உபாதி (திரை) வழியாக நோக்குங்கால், அவர் இரணிய கருப்பராகத் தோன்றுகிருர்; வியஷ்டிபுத்தி (தனிமனிதனது புத்தி) யென்னும் உபாதி வழியாக நோக்குங்கால் அவர் வேறெந்த ஜீவனுகவும் தோன்றுகிருர். ஒரே சூரியனைப் பலவித வண்ணங்களையுடைய வெவ்வேறு கண்ணுடித்துண்டுகளின் வழியாகப் பார்க்குபோது பலவாகத் தோன்றுவது போலவே, ஒரே ஈசர் தனித்தனி புத்தியென்னும் வெவ்வேறு திரைகள் வழியாக நோக்குங்கால் எண்ணிறந்த தனித்தனி ஜீவர்களாகத் தோன்றுகிருர்.

புத்தியென்பது ஞானத்திற்கும் கருமத்திற்கும் உரிய மிக நுண்ணிய சடக் கருவியாகும். அது சூக்கும சரீரத்திலுள்ள விஞ்ஞானமய கோசத்தில் உறைகின்றது; அக் கோசம் இருதயப் பிரதேசத்தில் அமைக்கப்பட்டிருப்பதாகக் கூறப்படுகின்றது; ஒரு முதியோனது கட்டை விரற் பருமன் பெற்றிருப்பதாகவும், தோற்றத்தில் தூல உடலைப் போன்றிருப்பதாகவும் அறிவிக்கப்படுகிறது.

புத்தி தன்னளவிலே அறிவற்றதாயினும், எங்கும் பரந்த ஈசுவர அறிவால் (சைதன்யத்தால்) விளக்கம் பெறும் இயல்பையுடையது. சூரியனுல் ஒளியுடையதாக (விளங்கும்படி) ஆக்கப்படும் சந்திரன் தானே ஒளிரும் பொருளெனத் தோன்றுவதுபோல, புத்தியும் எங்கும் பரந்த ஈசுவர அறிவொளியின் பரிசத்தால் தனக்கென அஹங்காரம் கொண்ட தனிப்பட்ட அறிவுடைய ஜீவனுகத் தோன்றுகிறது. அறிவுக்கு மூலம் ஈசனேயன்றி வேருென்றில்லை. புத்தி வேருென்றினின்றும் பெற்ற அறிவால் ஒளிர்கின்றது. அது ஈசுவரனைப் பிரதிபலிப்பதால் உண்டாகும் ஒரு பிரதிபிம்பத்தைப் பற்றிக் கொள்கிறது என்னலாம்.

ஒரு பிரதிபிம்பம் என்பது, ஒளி ஒரு பொருளின் மீது பட்டு மீள்வதால் உண்டாக்கப்படும் ஒரு பொய்த் தோற்றமேயாம். ஒளியை வீசும் மூலப் பொருளினைப் போன்ற ஓர்

உருவம் பிரதிபலிக்கும் பொருளுக்குள்ளே காணப்படுகின்றது. உதாரணமாக, ஒரு நீர்ப் பரப்பு சூரியனின் கதிர்களைப் பிரதிபலிக்கிறது; அதாவது அக்கதிர்கள் செல்லும் திசையை மாற்றிவிடுகின்றது. இதனுல் அக்கதிர்கள் நீருக்குள்ளின்றும் நேரே வெளிவருவதான தோற்றம் ஏற்படுகின்றது. அந்நீர்ப் பரப்புக்குள்ளே அதே திசையிலே சூரியனைப் போன்ற ஓர் உருவத்தை நாம் காண்கிருேம். சூரியனைப் போன்ற இப்பொய்யுருவமே அதன் பிரதிபிம்பம் எனப் பெயர் பெறுகின்றது. புத்தியில் தோன்றும் ஈசனது உருவம் அம்மாதிரியான ஒரு பொய்த் தோற்றமேயாகும்.

பிரம்மம் என்பது எங்கும் பரந்துள்ளதும், எப்போதும் ஒருபடித்தா யுள்ளதும் சற்றும் மாருததும் ஆன சைதன்யமே. முற்றிலும் அறிவற்றதாயுள்ள புத்தி பிரம்ம சைதன்யத்தின் ஒரு பகுதியைப் பரதிபலிக்கின்றதுபோல் உள்ளது. இதனுல் உண்டாக்கப்படுவது ஒரு பொய்க் கருத்தே; புத்திக்குள்ளே ஒரு தனியான மிகச் சிறிய சைதன்ய மூலம் இருப்பதான ஒரு தோற்றமே. புத்தியிலுள்ள அப் பொய்யான மிகச் சிறிய சைதன்ய மூலமே ஈசனின் பிரதிபிம்பம் எனப்படுகிறது. உண்மை யாதெனில், சாஸ்திரங்கள் அதனை அணுப்போன்ற பருமனை யுடையது என அறிவிக்கின்றன. (ஏஷோ அணுர் ஆத்மா—முண்ட. உபநி. 3–1–9). அகண்டமான ஈசுவரர் தம்மை எண்ணிறந்த அணுவனைய ஆன்மாக்களாகத் துண்டித்துக்கொண்டு, ஒவ்வொரு ஜீவனின் நுண்ணிய விஞ்ஞானமய கோசத்துக்குள்ளேயும் தனித்தனியாய்த் தாம் புகுந்திருக்கிருர் என்பது மெய்யன்று. ஒரே சூரியன் பற்பல நீர்ப்பரப்புகளின் மீது பிரகாசிக்கும்போது உண்டாகும் பல பிம்பங்களினுல் பல சூரியர்களாகத் தோற்றமளிப்பது போன்றே, ஈசுவரரும் வெவ்வேருன (வியஷ்டி புத்தி) தனித்தனிப் புத்திகளின் வழியாகப் பார்க்கப்படும்போது அத்தனை சிறிய வெவ்வேருன ஆன்மாக்களாகத் தோற்றமளிக்கிருர்.

புத்தி வெளியே யிருந்து பெற்ற, இச் சைதன்யமாகிய ஈசுவர பிரதிபிம்பமே ஒரு ஜீவனின் அமைப்பிலுள்ள ஒரே அறிவுத் தத்துவமாகும். அதுவே ஜீவாத்மன், ஜீவன் எனப்படும். ஒரு ஜீவனின் ஆணவத்தால் நேரே குறிக்கப் படுவது இந்த ஈசுவர பிரதிபிம்பமே, 'நான்' என்னும்போது ஒரு மனிதன் இதையே குறிக்கிறான். "எந்த அகண்டமான ஏகப் பொருள் புத்தியோடு தன்னை ஒன்றுபடுத்திக் கொண்டு, இந்திரியங்கட்கு நடுவே சுயஞ் சோதிப்பொருளாய் நெஞ்சிற் குள்ளே வாழ்கின்றதோ", அந்த ஆன்மாவே இது (பிருஹ. உபநி. 4–3–7). ஒரு ஜீவனின் அமைப்பிலே, புத்தியிலிருந்து அதற்குப் புறத்தேயுள்ள ஏனைய பொருள்கள்யாவும் அதன் கருவிகளே. அவை தம்மளவிலே அறிவற்றனவாகும். அவை அறிவுடைய பொருள்களாகத் தோன்றுவதன் காரணம், ஆன்மாவை அவை தொட்டுக்கொண்டிருத்தலேயாம். நெருப்பிலே யிடப்படும் ஓர் இரும்புத்துண்டு செந்தழலாகிச் சூட்டையும் ஒளியையும் வீசத் தொடங்கும்போது நெருப் பைப் போன்று தோற்றமளிக்கின்றது ; அதுபோல, புத்தி யும் மனமும் இந்திரியங்களும் தூல உடலும் ஜீவான்மா வைத் தொட்டுக் கொண்டிருத்தலின், அறிவுடைய பொருள் களைப் போலத் தோன்றுகின்றன.

கருவிகளை இவ்வாறு ஜீவான்மா தனது ஒளியால் விளங் கச் செய்யும்போது, அவை தொழிற்படத் தொடங்குகின் றன. புத்தி அந்தக்கரணங்கட்குள்ளே மிக நுண்ணியதாத லின், எங்கும் பரவும் ஈசுவர சைதன்யத்தால், அதுவே முதன்முதலாக விளக்கம் பெறுகின்றது. இதுபற்றியே அது ஈசுவர பிரதிபிம்பத்தைத் தன்னுள் வைத்திருப்பதாகக் கூறப்படுகின்றது. எனினும் இவ்வாறு விளக்கம் பெற்ற தும் அது கருத்தாவாகவும் போக்தாவாகவும் வேலை செய் யத் தொடங்குகிறது. ஆனால், பொய்த் தோற்றத்தால் சைதன்யமே புத்தியாற் பிரதிபலிக்கப்பட்ட நிலையில்

இவ்வாறு தொழிலியற்றுவதாகத் தோன்றுகிறது. சூரியன் அசையாதிருந்தும் ஒரு நீர்ப் பரப்பிற்குள் தோன்றும் அதன் பிரதிபிம்பம் மேற்பரப்பிலுள்ள நீரலைகளோடு தானும் கூத்தாடுவதாகத் தோன்றுமன்றோ? அதுபோல, எங்கும் பரந்த சைதன்யமான பிரம்மம் எப்போதும் நிலையாக இருப்பினும், புத்தியில் தோன்றும் அதன் பொய்யான பிரதிபிம்பமாகிய ஜீவான்மா அசைவது போலவும் தொழிலியற்றுவது போலவும் தோற்றமளிக்கின்றது; உண்மை யாதெனின், புத்தியே அவ்வாறு செய்கின்றது. அது கருமஞ் செய்வதுமில்லை, ஒன்றையும் அனுபவிப்பது மில்லை. அது தன்னைப் பொய்யாகப் புத்தியோடு ஒன்றுபடுத்திக் கொண்டிருத்தலின், அவ்வாறு செய்வதாகத் தோன்றுகிறது. இக்காரணம் பற்றியே ஜீவான்மா விஞ்ஞானமயம் எனப்படுகிறது. ஆயினும் தன்னளவிலே அவ்வான்மா சைதன்யமாய நிலையில் ஈசுவரனேயன்றி வேறில்லை; அதுவே புத்திக்கு உயிரளித்து சாக்கிரம் சொப்பனம் சுழுத்தியெனும் (நனவு, கனவு, உறக்கம் எனும்) மூன்று நிலைகளிலும் அனைத்திற்கும் நித்திய சாக்ஷியாகப் பிரிந்து நிற்கின்றது.

ஆக, ஒரே உடலில் இரு பொருள்கள் இருப்பதாகத் தோன்றுகின்றன. ஒன்று, ஜீவான்மாவால் உயிருடையதாக்கப்பட்டும். கருத்தாவாகவும் போக்தாவாகவும் ஆகும் நிலையில் அதனோடு ஒன்றுபடுத்தப்பட்டும் உள்ள புத்தி; மற்றொன்று, சாக்ஷியாக மட்டும் உள்ள ஜீவான்மா. கருத்தாவும் போக்தாவுமான ஜீவனும் சாக்ஷியாக நிற்கும் ஆன்மாவாகிய ஈசுவரனும் ஆகிய இரண்டையும் உபநிடதங்கள் ஓர் அழகிய உவமையின் வாயிலாக விளக்குகின்றன. ஒரே பெயருடைய இரு பறவைகள் ஒரே மரத்தில் ஒன்றோடொன்று நெருங்கியிணைந்து அமர்த்திருப்பதாகவும், அவற்றில் ஒன்று சுவையுள்ள கனிகளை உண்ணுவதாகவும், மற்றொன்று உதாசீனமாகப் பார்த்துக் கொண்டிருப்பதாகவும்

அவை வருணிக்கப்பட்டுள்ளன. (முண்ட. உபநி. 3-1-1; சுவேதா. உபநி. 4–6.) ஒரே புத்தியில் உறையும் இருளும் ஒளியும் போலும் அவை கூறப்பட்டுள்ளன. (கட உபநி. 1-3–1.)

எனினும், புத்தியோடு ஒன்றுபடுத்தப்பட்டுள்ள ஆன்மாவே ஜீவனாகும். மரத்தின் மீதுள்ள சுறுசுறுப்பான பறவையைப்போல் அவன் தனது செயல்களின் தீய பலன்களையும் இனிய பலன்களையும் துன்ப வடிவமாகவும் இன்ப வடிவமாகவும் நுகர்கிறான். அவன் ஏனைய அந்தக்கரணங்களாகிய மனம் பிராணன்கள் கரும ஞானேந்திரியங்கள் ஆகியவற்றையும் இன்னும் முழுத் தூல உடலையும் உயிருள்ளதாக்குகிறான்.

தூல உடல் வாயிலாகவும் இந்திரியங்கள் வாயிலாகவும் ஒரு மனிதனின் ஆன்மா புற உலகத்தைத் தீண்டுகின்றது. ஆசைகளால் தூண்டப்பட்டு, அது நல்லனவும் தீயனவுமாகிய பலவகைச் செயல்களையும் இயற்றுகிறது; அவ்வழியாகப் புண்ணிய பாவங்களை ஈட்டுகிறது; அவை இனிவரும் பிறவி யாதேனும் ஒன்றில் இன்பதுன்ப வடிவிலே அதனை மீண்டும் சார்வது உறுதி. இவ்வாறு பிறவிச் சுழலிலே அதன் வாழ்வு நீடித்துக்கொண்டே போய், அதனை அடுக்கி வரும் பிறவிகளின் வழியாக இழுத்துச் செல்கிறது. ஒவ்வொரு ஜீவனது அனுதியாக வரும் வரலாற்றிலும் நித்தியமாக இது நடந்துகொண்டே வருகிறது. புத்தி தன்னுள்ளிருக்கும் ஈசுவர பிரதிபிம்பத்தை ஜீவாத்மனாகக் கருதும்வரை இது தொடர்ச்சியாக நிகழ்ந்து வரும். ஆத்ம ஞானம் உதயமாகும்போதுதான் புத்தி மறைகின்றது. அதுவரை ஜீவன் பிறவிச் சுழலினின்றும் தப்பவொண்ணாது. இக்காரணத்தால், அது தனக்கு இயல்பாக உரிய ஒளிவடிவமாகிய ஈசுவர நிலையோடு ஒப்பிடப்படும்போது, இருளெனக் குறிக்கப்படுகிறது. இதே காரணத்தால்தான், ஜீவனைப் புற உலகத்தோடு சம்பந்தப்படுத்திக் கருமங்கட்கும் அவற்றின் விளைவு

கட்கும் உட்படுத்தும் தூல உடலும் இந்திரியங்களும் சாஸ்திரங்களிலே தீமைகளாகவும் (பாப்மான :—பிருஹ. உபநி. 4-3-8) மரண உருவங்களாகவும் (மிருத்யோ ரூபாணி—பிருஹ. உபநி. 4-3-7) உரைக்கப்பட்டுள்ளன.

ஆயினும், உடலும் இந்திரியங்களும் விழிப்பு நிலையில் (ஜாக்கிரத்தில்) மட்டுந்தான் சுறுசுறுப்புள்ளனவாகின்றன. அப்போதுதான் ஜீவன் புற உலகத்தோடு சம்பந்த முறுகின்றது. ஆகையால் இந்நிலை ஜீவனது வாழ்வின் ஒரு தனிப் பகுதியை எடுத்துக் காட்டுகிறது. அந்நிலையில் மனமும் உடலும் ஆய கரணங்களனைத்தோடும் அது தன்னை ஒன்றுபடுத்திக்கொள்கிறது. சைதன்யம் (பிரம்மன்) இந்நிலையில் காரணம் சூக்குமம் தூலம் எனும் மூன்று உடல்களாலும் மறைக்கப்படுவதாகவும், நிறம் ஊட்டப் பெறுவதாகவும் தோன்றுகிறது. விழிப்பு நிலைக்குரிய ஜீவனது வாழ்வுப் பகுதியாகிய இது சாஸ்திரங்களில் 'வீச்வம்' என்னும் சிறப்புப் பெயரைப் பெறுகிறது. இது 'வைச்வானரம்' என்றோ 'விராட்' என்றோ அழைக்கப்படும் ஸமஷ்டி வாழ்வின் ஓர் அணுப் பகுதியே யாகும்.

கனவு நிலையிலே அது தூல உடலும் இந்திரியங்களும் ஆகிய இரண்டின் பிடிப்பினின்றும் தன்னை விடுவித்துக் கொண்டு, அவ்வழியே புற உலகத்தின் தொடர்பை நீக்கிக் கொள்கிறது. விழிப்பு நிலையிலே தான் பெற்ற அனுபவங்களினின்றும் சேகரிக்கப்பட்ட சில மனப் பதிவுகளை (உள்ளச் சார்புகளை—ஸம்ஸ்காரங்களைப்) பண்டங்களாகக் கொண்டு, அது தனது ஒளியால் ஒரு கனவு உடலையும், தனக்கென ஒரு மன உலகத்தையும் படைக்கிறது ; அவ்வுலகிலே பின் கருத்தா வாகவும் போக்தாவாகவும் ஒழுகுகிறது. இக் கனவு நிலையிலே சைதன்யத்தை மறைத்து அதற்கு நிறத்தை ஊட்டுவன, காரணமும் சூக்குமமுமாகிய ஈருடல்கள் மட்டுமே ; இந்நிலை 'தைஜஸம்' எனப் பெயர் பெறும் இன்னொரு

ஜீவ வாழ்க்கைப் பகுதியை எடுத்துக்காட்டுகிறது. இது ஸமஷ்டியிலே இரணியகருப்பருக்கு ஒத்தது.

சுழுத்தி நிலையிலே (உறக்கத்திலே) புத்தி யென்பது தன்னளவிலே இருப்பும் தொழிலும் அற்றதாகின்றது. அது காரண நிலை அளவாகக் குறுகியதாகிறது. ஆயினும் ஜீவனுக்கும் அதற்கும் உள்ள சம்பந்தம் உள்ளடங்கிய நிலையிலே தொடர்ந்துவருகிறது. காரண சரீரம் மட்டுமே சைதன்யத்தை மறைக்கும் உறையாகிறது. நாம் முன்னரே கூறியுள்ளபடி, அவியக்தத்தைச் சார்ந்தது; மரம் முழுதையும் விதையில் ஒடுக்கி வைப்பதுபோல் தனக்குள்ளே ஜீவனுடைய முழு வளர்ச்சியையும் அடக்கிக்கொண்டுள்ளது. அதற்கு இயக்கமுமில்லை, செயலுமில்லை. சஞ்சலமுள்ள இந்திரியங்களும் மனமும் புத்தியும் இவ்வுடலிலே காரண நிலையிலே அமைதியாக அமர்கின்றன. இவ்வுடலிலே ஒரே தொழிலாவது, பூரண பிரம்மஞானத்தை மறைத்தலேயாம்.

ஆயினும் ஆனந்தமயகோசம் என்னும் பெயர் பெறும் காரண சரீரத்தால் மட்டும் மறைக்கப்பட்டுள்ள மெய்ப் பொருள் சுழுத்தி நிலையிலே சின்மயமாயும் ஆனந்தமயமாயும் உள்ள தனது சொந்த சொரூபத்தைப் பெரிதும் ஒத்திருப்பதாய்த் தோன்றுகிறது. இந்நிலையிலே ஆன்மா தான் உண்மையாகவே எப்போதும் இருப்பதுபோலவே அசைவற்று இருக்கின்றது. அது உடல் மனங்களின் அசைவால் ஆட்டி வைக்கப்படுவதில்லை. அது அந்நிலைக்கு வெறும் சாக்ஷியாக இருந்து, தனது சொந்த இன்பத்தால் அதில் அமைதியை நிரப்புகின்றது. "ஒரு வல்லூறு ஆகாயத்திலே பறந்தமையாற் களைப்படையும்போது தன் சிறகுகளை விரித்து, தன் கூட்டை நோக்கிச் செல்லத் தலைப்படுவதுபோல் அகண்டப் பொருளும் இந்நிலையை நோக்கி ஓடி, ஆங்கே உறக்கத்தில் அழுந்தி, ஆசையும் கனவும் அற்றதாகின்றது" (பிருஹ. உபநி. 4-3-19). விழிப்பு நிலையிலும் கனவு நிலையிலும் நிகழ்ந்த கருமங்களாலும் அனுபவங்களாலும் களைப்

படைந்த ஆன்மா இங்ஙனம் சுழுத்தியில் தனக்குரிய அமைதி நிலையினை எய்துகின்றது. இக்காரணம் பற்றியே இந்நிலையில் ஜீவன் மெய்ப்பொருளோடு ஒன்றித்து விடுவதாகக் கூறப்படுகின்றது. (ஒப்பிடுக: சாந்தோ. உபநி. 6-8-1) 'உறங்கு' எனும் வினையடியாகப் பிறந்த படர்க்கை ஒருமையாகிற 'உறங்குகிறுன்' என்பதற்குச் சரியான வடமொழிப் பதம் 'ஸ்வபதி' என்பது, ஒருவன் இந்நிலையில் தனது மெய்யான ஆன்ம நிலையினை எய்துகிறுன் என்பதையே (ஸ்வம் அபீதோபவதி-சாந்தோ. உடநி. 6-8–1) குறிப்பதாகக் கூறப்படுகிறது.

என்றுலும் சுழுத்தி நிலையிலே ஆன்மா ஒன்றையும் காண்பதாகவோ அறிவதாகவோ தோன்றுவதில்லை. இத் தோற்றத்தின் காரணம், அந்நிலையிலே அதனைத் தவிர வேருெரு பொருள் காண்பதற்கோ அறிவதற்கோ இல்லாமையேதான். (ஒப்பிடுக: பிருஹ. உபநி. 4-3-23). அதன் உணர்வு (சைதன்யம்) அழிய வொண்ணுததாதலின், அக் கால முழுவதும் மாறுபாடின்றி யுள்ளது. விழித்ததும் தனது உறக்கத்திற்கு யாதொரு தொந்தரவும் இல்லாதிருந்ததை நினைவிற் கொள்ளுகின்றது. சுழுத்தி நிலையிலே ஆன்மாவின் சாக்ஷியாயிருக்கும் தொழில் தொடர்ந்து நிகழ்ந்து வருவதற்கும் இது ஒரு சான்ருகின்றது.

ஆயினும், காரண சரீரத்தால் மட்டும் மறைபட்டும் நிறம்பெற்றும் உள்ள இந்நிலைய சைதன்யம் ஜீவனின் வாழ்விலும் அனுபவத்திலும் காணப்படும் ஒரு தனிப்பட்ட வகையினைக் குறிக்கின்றது. இவ்வுண்மையை இந்துமத சாஸ்திரங்கள் வற்புறுத்துகின்றன. அந்நிலையிலுள்ள ஜீவனுக்குப் 'பிராக்ஞன்' எனும் சிறப்புப் பெயரையும் இடுகின்றன. பரப்பிரம்மம் (தனிப்பட்ட மனிதனது) வியஷ்டி காரண உடலால் மறைபட்டு நிறம் பெறும்போது ஈசுவரனுகத் தோன்றுகிறது.

ஆக, ஜீவன் மாறிமாறி நனவு கனவு உறக்கம் (விழிப்பு கனவு சுழுத்தி) எனும் மூன்று வெவ்வேறு நிலைகள் வழியாகச் செல்லுகிறது. ஒவ்வொரு நிலையும் அதன் வாழ்வு வகைகளில் ஒன்றைக் காட்டுகிறது. விழிப்பு நிலையில் அதன் செயலும் அனுபவமும் தூல உலகத்தோடும், கனவு நிலையில் அது தானே படைத்துக்கொள்ளும் ஓர் உலகோடும் சம்பந்தப்படுகின்றன; சுழுத்தி நிலையிலோ அது பூரண அமைதி நிலைக்கும் சாக்ஷியாக நின்று, ஆனந்தத்தை அனுபவிக்கின்றது. விஞ்ஞான மயமான ஜீவன் (புத்தியோடு ஒன்றித்து நிற்கும் ஜீவன்) முதலிரண்டு நிலைகளாகிய விச்வன் தைஜசன் எனும் இரண்டிலும் மட்டும் தொழிலியற்றுகின்றது என்பதும் இங்கே கருதத் தக்கது. மூன்ருவது நிலையில் அதன் ஜீவத்தன்மை அடங்கி மறைந்திருக்கின்றது; (காரண நிலையிலுள்ள) புத்தியினின்றும் விடுபடும் ஆன்மா ஈசனேடு ஒன்றித்துப் பிராக்ஞனுகத் தோற்றமளித்து, சாக்ஷியாக மட்டும் அமைகின்றது.

இக்காரணம் பற்றியே சாஸ்திரங்கள் பின்வருமாறு கூறுகின்றன: புத்தியோடு ஒன்றித்து நிற்கும் சுயம் ஜோதியான ஜீவாத்மா தூல உடலையும் இந்திரியங்களையும் தீண்டியும் தீண்டாமலும் விழிப்பு நிலைக்கும் கனவு நிலைக்கும் இடையே மீண்டும் மீண்டும் ஊசலாடிக் கொண்டிருக்கின்றது. ஓர் ஆற்றின் இரு கரைகட்கும் இடையே, அதன் நீரோட்டத்தால் தடைப்படாது மாறி மாறிச் செல்லும் ஒரு மிகப் பெரும் மீனைப்போல ஜீவாத்மா இவ்விரண்டு நிலைகட்கும் இடையே தங்குதடையின்றிச் சஞ்சரிக்கின்றது. (ஒப்பிடுக: பிருஹ. உபநி. 4–3–18).

இம்மாதிரியே ஜீவன் ஒரு குறிப்பிட்ட தூல உடலிற்குட் புகுந்தும் அதைவிட்டு வெளியேகியும் இவ்வுலகிற்கும் அடுத்த உலகிற்கும் இடையே மாறி மாறிச் சென்று வருகின்றது. (பிருஹ. உபநி. 4-3-9). எந்தத் தூல உடலிலும் ஆன்மா

தான் முன்பு இயற்றிய கருமங்களின் பயனில் ஒரு பகுதிக்கு ஏற்றவாறு சிறிது காலம் வாழ்கிறது. அதன் தற்கால வாழ்வைத் தீர்மானிக்கும் இக்கரும பலனின் (பழவினையின்) பகுதி 'பிராரப்தம்' எனப்படும். அது ஊட்டிக்கழிந்த பின், ஆன்மா காரண சூக்கும உடல்களோடு கூடித் தூல உடலை விட்டுவிடுகிறது. இந் நிகழ்ச்சியே இறப்பு எனப்படும். உண்மையிலே தூல உடலே இறக்கின்றது. ஆன்மா அன்று. 'ஆன்மாவை இழந்து இவ்வுடல் இறக்கின்றது. ஆன்மா இறப்பதன்று." (சாந்தோ. உபநி. 6-1-13) ஆன்மா ஒரு தூல உடலைப் பெறும் போது பிறந்ததாகச் சொல்வதும், அதனை விடும்போது இறந்ததாகச் சொல்வதும் உபசார வழக்கே யன்றி வேறல்ல (ஒப்பிடுக: 4-3-8). உண்மை யாதெனில், ஆன்மா பிறப்பிற்கோ வளர்ச்சிக்கோ அழிவிற்கோ ஆளாவதில்லை; இம்மாறுபாடுகள் யாவும் தூல உடலிற்கே உண்டாகின்றன.

உள்ளதை உரைப்போமாயின், சூக்கும உடலே ஈசனது பிம்பத்தைத் தனது ஆன்மாவாகக் கொண்டு, தூல உடலை விட்டு வெளியேறுகின்றது. ஈசன் சைதன்யமேயாதலின் எங்கும் வியாபகமுள்ளவன்; ஆதலின் அவனுக்குச் செல்லும் இடம் ஏது? புத்தியிலே தெரியும் ஈசனது பொய்ப் பிம்பமே புத்தியோடு அசைவதாகத் தோன்றுகிறது. புத்தி ஆன்மாவின் பிரகாசத்தால் விளக்கம் பெற்று ஏனைய அந்தக் கரணங்களோடு ஒரு தூல உடலுட் புகும்போது ஆன்மா பிறந்ததாகச் சொல்லப்படுவதும், அது அவ்வுடலை விட்டு வெளியேறும்போது இறப்பதாகச் சொல்லப்படுவதும், இப் பொருளிலேதான் என்க.

இவ்வாறு ஜீவன் இவ்வுலகிற்கும் அடுத்த உலகிற்கும் இடையே உலவிக் கொண்டிருக்கின்றது. பிறப்பு இறப்புகட்கு இடையே மாறிமாறி உழலும் அதன் சஞ்சாரம் அனாதி காலந் தொட்டே நிகழ்கின்றது என்பர். காரண சூக்கும உடல்கள் கல்ப காலங்களிலும் (சிருஷ்டி பிரளய காலங்களி

லும்) அழியாது நிற்கும். இயற்கையிலுள்ள எதுவும் அவற்றை அழிக்கமாட்டா. நாம் முற்கூறியபடியே பிரம்ம ஞான உதயத்தால் மட்டும் அழிவடையும். ஆன்மா புத்தியைப் போலும், புத்தி ஆன்மாவைப் போலும் தோற்றமளிக்கும்வரை, இவ்விரு உடல்களும் நிலையாயிருக்கும். அவித்தையே (மூல அஞ்ஞானமே) இப் பொய்க் காட்சியை உண்டாக்குகிறது. ஒன்றின் குணங்கள் மற்றொன்றினுக்கு உரியனபோலத் தோன்றுகின்றன. இப் பொய்த் தோற்றம் 'அத்தியாசம்' எனத் தனிப் பெயரைப் பெறுகின்றது. இந்த அத்தியாசத்தால் உடலும் மனமும் கூடிய முழுச் சேர்க்கையும் ஆன்மாவைப் போல் ஒரு சித்துப் பொருளாகப் பாவனை செய்கிறது. இக்காரணத்தால் ஒரு மனிதன் உண்மையாகவே தனது தூல உடலோ மனமோ விகாரமடையும் போது, "நான் கிழவனானேன், நோயுற்றவனானேன், கவலையுறுகிறேன், ஆனந்தமாயிருக்கிறேன்" என்று சொல்கிறான்.

இந்த அத்தியாசம் நீங்குவது, ஒரு மனிதன் தனது ஆன்மாவை உள்ளவாறு அறியும் போது தான். ஜீவனின் அனாதியான சஞ்சாரம் ஒரு பெருமையுற்ற முடிவடைவதும் அப்போது தான். அச்சமயம் மாயையும் அதன் பொய்யான விளைவுகளாகிய நாம ரூபங்களும் முற்றும் மறைந்து விடும். எல்லா உபாதிகளும் தாமே நழுவி விடுகின்றன. பரம் பொருளை மறைத்தற்கும் அதற்கொரு நிறத்தை ஊட்டுதற்கும் எதுவும் இல்லை; சைதன்யத்தைப் பிரதி பலித்தற்கும், அதன் பிம்பத்தை ஏந்துவதற்கும் எதுவும் அப்போது இல்லை. எண்ணிறந்த கற்ப காலங்களாக, மாயையின் சக்தியால் தன்னை வரம்புக்குட்பட்ட அறிவுத் திறனும் வினைத் திறனும் உடைய பொருளாகக் கருதி வந்தது யாதோ, அது மிக நீண்ட காலத்திற்குப் பின் தன்னை அகண்ட சச்சிதானந்தக் கடலான பரப்பிரம்மமேயன்றி வேறல்ல என்று உணருகிறது. ஓர் ஆறு பற்பல இடங்கள் வழியாகச் சென்றபின் இறுதியாகக்

கடலைச் சார்ந்து, அதனோடு மருவித் தனது தனித்த இயல்பை இழப்பது போல, ஜீவனும் பற்பல உலகங்களிலே பலப்பல உடல்களோடு எண்ணிறந்த முறை பிறப்பதும் இறப்பது மாக அனாதி காலமாகப் பயணஞ் செய்த பின்னர் இறுதியா கத் தனக்குப் பரமமூலமான பொருளினை அடைந்து, அத னோடு இலயமாகி விடுகிறது. ஜீவனுடைய வாழ்வாகிய கனவு, இவ்வாறு அது தனது உண்மையான இயல்பை அறிந் ததும், முடிவடைகின்றது.

முழு பிரம்ம ஞானத்தால் இப்பேற்றை அடைய இய லும்படியான ஒரு நிலையிலே மனிதன் அமைக்கப் பட்டிருக் கிறான். சில மனிதர் இப்பிறவியிலேயே இம்முயற்சியில் வெற்றி பெற்று, 'ஜீவன் முக்த' ராக (உயிருள்ள போதே விடுபட்டவராக) ஆகின்றனர். சிலர் இப்பிறவியின் முடி விலே அதை யடைகின்றனர். (இது விதேக முக்தி). வேறு சிலர் இப்பிறவியிலே மிகவுயர்ந்த நிலையினை அடைந்து வரவரப் படிப்படியாக விடுபடுதல் என்னும் 'கிரம முக்தி' யெனும் நிலை வழியாக அதே பேற்றை இறந்தபின் எய்து கின்றனர். இறந்தபின் அவர்கள் பற்பல உலகங்கள் வழி யாகச் சென்று, இறுதியிலே பிரம்மலோகம் சார்ந்து, ஆங்கே கல்ப முடியுமளவும் வாழ்ந்து, அவ்வுலகிற்கு அதிதேவதை யான இரணிய கருப்பரோடு பின்னர் முக்தியடைகின்றனர்.

ஆசையால் உந்தப்பட்டு நல்வினைகளையோ தீயவினை களையோ இயற்றும் ஏனையோர் யாவரும் மேலுலகங்கட்கோ கீழுலகங்கட்கோ சிறிது காலம் சென்று, பின் இப் பூவுல கிற்கே மீளுகின்றனர். தமது வினைப்பயனை நுகர்தற் பொருட்டு அவர்கள் செடிகளாகவோ புழுக்களாகவோ தாழ்ந்த மிருகங்களாகவோ வாழும் அவசியத்திற்கு உட்பட லாம். அத்தகைய இழிந்த பிறவிகள் வாயிலாகத் தமது தீவினைகளின் பயனான துயரத்தை அனுபவித்த பின், அவர் கள் மீண்டும் மனிதப் பிறவியைப் பெறுகின்றனர். மனிதப் பிறவியில் மட்டுமே ஜீவனுக்குப் பிரம்ம ஞானம் பெற்று

முக்தியடைவதற் குரிய சந்தர்ப்பம் வாய்க்கின்றது. இக் காரணம் பற்றியே மனிதப் பிறவியைச் சாஸ்திரங்கள் மிக மிகப் புகழ்கின்றன ; ஜீவன் தன்னிடத்து அடங்கிக் கிடக் கும் தெய்வத் தன்மையை வெளிப்படுத்துவதற்கு ஏற்ற பெறற்கரிய பேருக அப்பிறவியை மதிக்கின்றன.

## 20

## கிரியைகளும் புராணமும்

இந்து மதத்திற்கு அடிப்படையான ஞான உண்மைகளை முந்திய அத்தியாயங்கள் நமக்கு அறிவிக்கின்றன. இவையே அம்மதத்தின் வைரமனைய உட்பகுதி எனப் படுவனவாம். மற்றவை அவ்வுண்மைகளை மக்களது அறிவில் நன்கு பதிய வைத்தற்கென அமைந்த வெறும் வெளிப் பகுதிகளாம். கிரியைகளும் புராணமும் அம்மாதிரியான வெளிப்பகுதிகளே.

நாம் முன்னமே கூறியுள்ளபடி, ஞான உண்மைகள் உணர்தற்கு மிக அரியவை. கூரிய புத்தியைக் கொண்டும் அவற்றின் உட்கருத்தைப் பற்றுதல் மிக்க சிரமந் தருவதா கும். மேலும், அவற்றை அறிவால் ஓர்தலொன்றே ஞான உலகில் ஒருவனை வெகுதூரம் புகவிடாது. சாஸ்திரங்களை மேற்கோள்களாக எடுத்துக் காட்டலோ, ஞான விஷயங் களைப் பற்றிச் சுலபமாகப் பேசுதலோ நாம் கருதும் முடி பன்று. ஞான வளர்ச்சியை எய்தவேண்டின் இவ்வுண்மை களை ஒருவன் அறிதல் மட்டும் போதாது ; அவற்றை நேரா கக் காணும்வரை அவன் தனது வாழ்வையும் ஒழுக்கத்தை யும் அடக்கி யாளுதலும் வேண்டும். அத்தகைய நேர் காட் சியே, மெய்யுணர்வே, அடையத் தகுந்த முடிவாகும். இது தூய நெஞ்சினுல் மட்டும் பெறற் குரியது. இது கைகூடுமுன் மனம் முற்றிலும் தூயதாகுமாறு கழுவப்படல் வேண்டும்.

அவ்வாறு மனதைத் தூயதாக்கும் போது தூய நெஞ்சிற் குரிய ஞான நோக்கு என்னும் வலிமையுற்ற

ஒரு திறன் மலர்கிறது. இத்திறனின் மூலமே ஞான உண்மைகள் நேரிலே உணரப்படுகின்றன. இறைவன் இயற்கை ஆன்மா இம்மூன்றையும்பற்றிய உண்மைகள் ஒரு தூயநெஞ்சிற்குரிய ஞான நோக்கின் முன்னே திடீரென ஒளிர்கின்றன. இயற்கைக்கு அதீதமானவை என்றோ, அசாதாரணம் என்றோ பெயரிடப் பெறும் எல்லா அனுபவங்களும் இத்திறனால் விளைவன. ஒவ்வொருவரிடத்தும் இந்த ஞான நோக்கு அமைந்திருக்கின்றது; அழுக்குற்ற மனத்திலே அது இருள் மூடிக் கிடக்கின்றது. மனம் தூயதாகும் வரை இத்திறன், பயன்படும் அளவிற்குத் தொழிற்படா திருப்பதற்குக் காரணமும் இதுவே. அது பிரகாசமடையும்போது அறிவைப் பெறுதற்கு அனைத்தினும் மேம்பட்ட ஒரு வாயிலாக உதவுகிறது. இந்திரியங்கட்கு அப்பாலும் (அதீந்திரியமாயும்) புத்திக்கு அப்பாலும் உள்ள மிக நுண்ணிய மிக உயர்ந்த உண்மைகள் இவ்வாயிலாகவே நமது உணர்விற்கு வருகின்றன.

இத்திறன் அந்த அளவிற்கு வளர்ச்சியடையும்போது தான் மனிதன் தனது முழு உயரமும் பெற்றவனாவான். அப்போதுதான் அவனை மனித இயல் பெற்றவனென்றும், அவனது காட்சியை இயல்பான காட்சியென்றும் உரைத்தல் வேண்டும். தூய நெஞ்சிற்குரிய ஞான நோக்குத்திறன் வாயிலாகப் பெற்ற மிக நுண்ணிய மிகவுயர்ந்த உண்மைகளைப்பற்றிய அறிவு, முழு வளர்ச்சி யெய்திய ஒரு மனிதனது சாதாரண இயல்பான அனுபவத்தையே ஆதாரமாகக் கொண்டுள்ளது. இத்திறன் வளரப் பெறாதவர் சாதாரண மனிதர்க்குக் கீழானவர் எனும் பெயர் பெறுதலே சரி. அறிவுள்ள மனிதனோடு ஒப்பிடும்போது நாகரிக வாசனையற்றவன் மனிதப் பிறவிக்குத் தாழ்ந்த ஒரு நிலைக்கு உரியவனாகிறான்; அதுபோன்றே, தூய ஞான நோக்குடைய மனிதனோடு ஒப்பிடும் போது பெரும் அறிவுள்ள மனிதனும் மனி

தப் பிறவிக்குத் தாழ்ந்த ஒரு நிலையில் இருப்பவனென்றே நன்குரைக்கலாம்.

எனினும், மிகவுயர்ந்த உண்மைகளை நேரிற் காண உதவும் இத்திறன் வளர்வது, மனம் தூய்மையடையும்போதே. மதத்தை அனுபவமாக்குவார்க்குரிய ஒரே காரியமாவது, மனம் தூயதாதற்கு உதவி புரிதலே. ஏனெனில் அப்போது மெய்ஞ்ஞானக் காட்சி தானே வரும். இதிலே தான் கிரியைகளும் புராணமும் பயன்படுவனவாம்.

**கிரியைகள்**

ஆதிமுதல் அந்தம் வரையில் இந்துமதக் கிரியைகள் மனதைத் தூய்மைப் படுத்துதற்கெனவே ஏற்படுத்தப் பட்டுள்ளன. அவற்றுக்கு வேறொரு நோக்கமும் இருப்பதாகத் தெரியவில்லை.

ஞான நலனைத் தாராத சில கிரியைகள் உள்ளன என்பது உண்மையே; அவற்றை மாயவித்தைக் குரியவை என்னும் வகுப்பிற் சேர்ப்பது முறையாகலாம். அவை அதர்வ வேதகால முதலே பழக்கத்தில் இருந்து வந்துள்ளன, தந்திர நூல்களும் பிற்காலத்தே அவற்றை விதித்துள்ளன. அக்கிரியைகள் ஒருவனது பகைவனை நசுக்குவதற்கோ, விரும்பிய பொருளொன்றைப் பெறுவதற்கோ, நோய்களைத் தீர்த்தற்கோ, கேடுகள் வராமல் தடுப்பதற்கோ உண்டாக்கப்பட்டுள்ளன. கோரப்படும் முடிவைச் சாஸ்திரங்கள் அனுமதிக்கும்வரை, பிரவிருத்தி மார்க்கத்திற் செல்லும் மக்களாற் பழகப்படும் இக்கிரியைகள் கேடு விளைப்பனவாகா. உதாரணமாக, பகைவன் சமூக நலத்திற்குக் கேடு விளைக்கக் காரணமாயிருப்பதுபற்றி, அந்நலன் கருதி அவனை அழித்தல் அவசியமாகும். விரும்பப்படும் பொருள் தகாத ஒன்றாக இல்லாதிருக்கலாம். அத்தகைய காரியங்களில் இம்மாயவித்தைகளைப் பழகுதலும் ஒருவனை ஞான நிலையில் தாழ்வுறச் செய்யமாட்டாது. ஆனால் அழுக்குற்ற பலமற்ற மனத்தார் இவற்றைத் தீய வழிகளிற் பயன்படுத்தலும் நேரக்கூடியதே. சுயநலமிக்க கேடுற்ற சில பயன்களைக் குறித்து

இக்கிரியைகளை இயற்றும் ஆசைக்கு அவர்கள் எளிதாக வசப்படலாம். ஞான நிலையில் தாழ்வடையும் ஆபத்து இத னிடத்து அடங்கிக் கிடக்கின்றது.

இத்தகைய கிரியைகளை ஒதுக்கிவிடுவோமாயின், மற்ற வையாவும் ஞான நலனை அடைதற்கு அனுகூலமானவையே யாம். அவை ஒருவனது மனத்தை அடக்கிப் பண்படுத்த உதவுகின்றன ; யாம் முன்னர்க் கூறியுள்ளபடியே இறைவ னது மெய்க்காட்சியைப் பெற இது தடுக்க வொண்ணாத ஒரு படியாகும். ஆனால் மனமாசை அறவே கழுவுதற்கு இன்ன வாறு கிரியைகள் துணையாவன என்பதை இனிக் காண் போம்.

எல்லாவித மன மாசுகட்கும் மூல காரணம், நம்மிடத் துள்ள சாரமான பகுதியாகிய தெய்வத்தன்மையை அறியா மையே—இதை முன்னொரு அத்தியாயத்திலே யாம் அறிந் துள்ளோம். இந்த அறியாமையைக் குறைக்கும் எதுவும் மனதைத் தூயதாக்க உதவும் என்பது உறுதி. இறைவ னைப் பற்றியும் நமது ஆன்மாவின் தெய்வத் தன்மையைப் பற்றியும் செய்யும் சிந்தனை அறியாமையை ஒழித்தற்குப் பயன்படுகின்றது ; ஆதலின் அது மனதை நன்கு தூய்மைப் படுத்த ஓர் ஏதுவாகின்றது. ஆயினும் யாதேனும் ஒரு கரு மத்தைப் பற்றிய சிந்தனை பல்லோரது திறமையை மிஞ்சிய ஒரு மிகக் கடினமான தொழிலேயாகும். ஆனால் அக்கருத் தைக் கிரியைகள் மூலமாகத் தூலமாக்கும்போது அனைவர்க் கும் அது போதிய அளவு எளிதாகும்.

இறைவனைக் குறித்தற்காகப் பிரதிமைகளையும் பிரதி கைகளையும் கையாளுதல் முற்கூறியதற்கு ஓர் உதாரணமா கும். பிரதிமையின் (திருவுருவத்தின்) முன்போ ஒரு பிரதி கையின் (குறியின்) முன்போ ஒருவன் வழிபாடு (பூஜை) செய்யும்போதெல்லாம், அவன் பகவானையே நினைத்துக் கொண்டிருக்கிறான் என்பதும், வேறொன்றைப் பற்றியல்ல

என்பதும் நிச்சயம். ஒருவன் தன்னுடைய நினைவுகளை இங்ஙனம் (இவ்வாறு) இறைவனை நோக்கித் திருப்பிவிடுதல் சித்த சுத்தியை (மனத் தூய்மையை)த் தருவதற்கு மிகவுயர்ந்த வழியாகும்; ஒரு தூலமான வடிவத்தின் மூலம் இறைவனின் இருப்பை உணர முயல்வது மிக எளிதாகின்றது. அகண்டமாயும் நிராகாரமாயும் (அருவமாயும்) உள்ள ஈசனைப்பற்றிய நினைவில் வெகுநேரம் மனதை நிலை நாட்டுதல் ஓர் அறிவாளிக்கும் மிகச் சிரமமான காரியமாகத்தான் வேண்டும்.

ஒரு திருவுருவத்திற்கு உயிரூட்டுதல் ஆகிய பிராணப் பிரதிஷ்டாக் கிரியையைப்பற்றி முன்னொரு அத்தியாயத்தில் குறிப்பிட்டுள்ளோம்; ஆன்மாவின் தெய்வத் தன்மையைப் பற்றிய கருத்தைப் படிப்படியாக நம் மனத்தோடு ஒன்றிக்கும்படி செய்யக் கிரியைகள் எவ்வாறு துணை செய்யும் என்பதை அது தெளிவாகக் காட்டுகிறது. வழிபடுவோன் (பக்தன்) தன் நெஞ்சிலுள்ள ஆன்மாவினின்றும் ஒரு குறிப்பிட்ட சோதி மயமான வடிவோடு இறைவன் வெளி வருவதாக நினைக்க வேண்டும்; தனது மூச்சோடு, அது தனக்கு வெளியே சென்று ஒரு மலர் மூலமாகத் திருவுருவத்திற்கு (விக்கிரத்திற்கு)க் கொண்டு போகப் படுவதாகவும் நினைக்க வேண்டும். அப்போது திருவுருவம் உயிர் பெற்றதாகக் கூறப்படும். இம்முறை அறிவாற்றல் மட்டும் மிக்கவர்க்கு ஒருவாறு குழந்தைத் தன்மையாகவே தோன்றலாம். ஆயினும் குழந்தைகட்குரிய ஒரு பயிற்சியைப் போன்று அறிவாளிகட்கும் மிக்க பயன் தருவ்தாகும்; எவ்வாறெனில் அன்னோரிற் பலர் தமது ஞான வளர்ச்சியைப் பற்றியவரை குழந்தைப் பருவத்தினரேயாவர். இம்முறையை மீண்டும் மீண்டும் பழகுவதனாலேதான் ஒருவன் தனது ஆன்மாவின் தெய்வத்தன்மையைப் பற்றிய உணர்ச்சியைப் படிப்படியாகப் பெறுபவனாவான்.

இயற்கையில் இறைவன் எங்கும் இருப்பதை (அந்தர் யாமியாய் உள்ள நிலையை)ப் பற்றிய எண்ணங்களும் கிரியைகளின் துணையால் மனத்தை நன்கு தூய்மைப் படுத்த

வல்லன வாகின்றன. அத்தகைய எண்ணங்களால் சிறிது நேரம் வழிபடுவோனது மனம் இந்த உலகத்தின் இழிய தன்மையைக் கடந்து உயர்ந்த நிலைக்குச் செல்கின்றது. இயற்கையிலுள்ள ஒவ்வொன்றும்—அவனுடைய சொந்த உடலும் மனமும் உள்பட— இறைவனை வழிபடுதற்கும் அவனோடு அளவளாவுதற்கும் வேண்டிய இன்றியமையாத முன்–உறுப்பாக (பூர்வாங்கமாக)த் தெய்வ மயமாக்கப்படுகிறது. ('தேவோ பூத்வா தேவம் யஜேத்'— இறைவனாகி இறையை வழிபடு).

இறைவன் தன்னை இயற்கையாக வெளிப்படுத்துகிறான். இது இந்துமதத்திற் போதிக்கப்படும் மிக முக்கியமான ஞான உண்மைகளுள் ஒன்று. ஒருவனது மனம் முற்றும் தூய தாகும் போது, அவன் இதை உணர்கிறான். அவன் இறைவனை எவ்விடத்தும் எப்பொருளிலும் காண்கிறான். ஆனால் அத்தகைய காட்சி கைகூடுமுன், அதைப் பற்றியும் அதிலடங்கிய கருத்துகளைப் பற்றியும் தீவிரமாகச் சிந்திப்பதின் மூலம் அவன் அந்த உண்மையை உள்ளத்தே தேய்த்துத் தேய்த்து உட்புகுத்துவான் போலப் பேருழைப்போடு அதை உணர முயலவேண்டும். அதைப்பற்றி அவன் நினைக்க நினைக்க, மேலும் மேலும் அவனது உள்ளம் அறியாமையையும் அதனால் விளையும் அழுக்குகளையும் விட்டு நீங்கும். இந்து சமயக் கிரியைகள் அம்மாதிரியான நினைவுகளை எளிதான இனிதான முறையிலே உறுதிப்படுதற்கு வேண்டிய சந்தர்ப்பங்களை ஏராளமாக அளிக்கின்றன.

இலக்கங்களையும் (கூட்டல் கழித்தல் முதலிய) சாதாரணக் கணக்கு முறைகளையும் பற்றிய பொதுக் கருத்துகளை ஒரு குழந்தையின் மனதிற் பதியும்படி அறிவுறுத்துதற்காக ஒரு சில மணிகளை உபயோகிக்கின்றனர்; அது போன்று, இறைவன் இயற்கையில் உறையும் தன்மையாகிய அந்தர் யாமித்துவம் எனும் அதி நுட்பமான கருத்தைப் பண்படாத

மனதிற்குட் புகுத்தும் பொருட்டுத் தூலப் பொருள்களை உபயோகித்தலும் பொருத்தமானதேயாகும்.

இதைச் செய்யும் முறையாவது, இயற்கைப் பொருள் களில் ஒன்றைப் பொறுக்கி, அதனைப் புண்ணியம் வாய்ந்த தாகக் கருதுதலே. ஒரு முழுமலைத் தொடரும்—உதாரண மாக, இமயமலையோ விந்தியமோ — புண்ணியஞ் செறிந்த தாகக் கருதப்படல் வேண்டும். கடல் இன்னொரு புண்ணியப் பொருள். அம்மாதிரியே, கங்கை யமுனை கோதாவரி சரஸ் வதி நருமதை சிந்து காவேரி போன்ற பல புண்ணிய முடை யனவே. நதிகளும் மலைகளும் அவற்றிற்கு அதிஷ்டான தேவதைகளின் உடல்களாவன ; அத் தேவதைகளை இந்துக் கள் வழிபடுகின்றனர். இத் தேவதைகள் மேம்பட்ட தெய் வாம்சம் பெற்றவர்.

நகரங்களும் ஊர்களும் — காசி, அல்லகாபாத், ஹரித் துவாரம், பிருந்தாவனம், அயோத்யை, துவாரகை, பூரி, உஜ்ஜயினி, காஞ்சி, இராமேஸ்வரம், கன்னியாகுமரி போன் றவை யாத்திரீகர் செல்வதற்குரிய புண்ணிய க்ஷேத்திரங்க ளாம் ( தூய தலங்களாம்). இவ்விடங்களில் உள்ள காற்றே மெய்ஞ் ஞானம் பெறத் துணை செய்யும். எங்கும் பரந்துள்ள ஈசன் இப்பிரதேசங்களில் மெல்லிய போர்வையால் மறைக் கப்பட்டிருப்பவன் போல் உள்ளான் ; ஆதலின் ஒரு சிறிதே நாட்டமுடையோரும் அங்கே இறைவனைக் காணும் நெறி நிற்பர். ஆங்கே சற்றேகுறைய வெளிப் படையாயுள்ள தெய்விகப் பிரசன்னத்தினால் (ஒரு சிறிதே மறைபட்டுள்ள தெய்வத்தின் இருப்பினால்) ஒவ்வொருவரும் ஞான ஊக்கச் செறிவைப் பெறுவார். இக்காரணம் பற்றியே இவ்விடங் களிலுள்ள தூளும் தூய்மை வாய்ந்ததெனக் கருதப்படுவ துண்டு.

இன்னும், சில மரங்களும் செடிகளும் புல்லும் வளமும் மலர்களும் இலைகளும் உலோகங்களும் கற்களும் பிறவும் தூயனவாக எண்ணப்படுகின்றன. இதுவே அனைத்தும் என்பதில்லை. பூஜை (வழிபாடு) நிகழும்போது, தேவி

துர்க்கையைத் தூய்மை வாய்ந்தனவாகக் கருதப்படும் பற்பல இடங்களினின்றும் கொணரும் நீரைக் கொண்டோ, தூய்மை வாய்ந்தனவாகக் கருதப்படும் பற்பல பொருள்களோடு கலந்த நீரைக் கொண்டோ அபிஷேகம் (நீராட்டம்) செய்ய வேண்டும். இவற்றிற்குள்ளெல்லாம் அடங்கிய கருத்து யாதெனின், உலகத்தில் எந்த மூலையிலுள்ள பொருளும் வழிபடுவோனது காட்சிக்குத் தென்படும் தூய்மை மண்டலத்திற்குள் இடம் பெறல்வேண்டும் என்பதே. உண்மையை உரைப்போமாயின், உலகத்தில் எதுவும் தூய்மையற்றதாகாது. பூமியும் சூரியனும் சந்திரனும் கிரகங்களும் நக்ஷத்திரங்களும் அவ்வவற்றிற்குள்ள அதிஷ்டான தேவதைகளின் (அந்தந்தப் பொருள்களை இருப்பிடமாகக் கொண்டுள்ள தெய்வங்களின்) தூல உடல்களாதலின், அவற்றைத் தூய பொருள்களாகக் கருத வேண்டுமெனச் சில கிரியைகள் வற்புறுத்துகின்றன. இயற்கையிலுள்ள ஒவ்வொன்றையும் தூய பொருளாகக் கருதக் கிரியைகள் நமக்குத் துணை புரிகின்றன என்னலே உண்மையாம். எங்கும் தூய்மை பரந்துள்ளது (தெய்வத் தன்மை மறைந்தொளிர்கின்றது) என்னும் இக்கருத்து ஒருவனது மனதைப் புனிதமாக்கி, மனத்திலுள்ள தீய சார்புகளையெல்லாம் வெளியேற்றி, இயற்கையில் இறைவன் எங்கணும் எழுந்தருளியிருக்கும் (அந்தர்யாமி) நிலையினை உணர்தற்கேற்ற தகுதியைப் படிப்படியாக வருவிக்கும் பான்மையதாகும்.

இது சம்பந்தமாக, இலிங்கம் என்னும் குறி (பிரதிமை) வாயிலாக இறைவனைச் சிவபெருமானாக வழிபடுதலைப்பற்றி ஒரு மொழி கூறல் பொருத்தமற்றதாகாது. தற்கால மனப்பான்மையர் சிலர், இலிங்க வழிபாடு நாகரிகமற்றவர்க்குள் வழங்கிவந்த, சனன உறுப்பை (ஆண்குறியை) வழிபடும் கிரியையின் மிச்சமேயென்று கொண்டு அதனை இழிவாக உரைப்பர். கிறிஸ்தவர்க்குள் வழங்கிவரும் 'தூய

விருந்துக் கிரியை' (இறைவனது உடலாகப் பாவித்துத் தூய்மையாக்கப்பட்ட சில பொருள்களைப் பிரசாதமாக உண்ணல்) மனிதனை மனிதன் உண்ணும் வழக்கத்தினை ஆதியாகக் கொண்டெழுந்ததாகலாம் என்பது போல, இதுவும் ஆரம்பத்தில் சனன உறுப்பின் வழிபாட்டைப்பற்றிய கிரியையாக இருந்திருக்கலாம். அதைச் சிறிதும் பொருட்படுத்த வேண்டியதில்லை. ஏனெனில், பழைய கிரியைக்கு வெகு தொலையிலுள்ள ஒன்றாக அது உருமாறி உயர்வடைந்துள்ளது. சனன உறுப்பைப்பற்றிய கருத்து முற்றிலும் அதனின்றும் விலகிவிட்டது. சிவபெருமான் வடிவமாயுள்ள இறைவனுக்குத் தூய அறிகுறியாகச் சிவலிங்கம் இப்போது உள்ளது; இலிங்கம் என்பதன் முக்கியமான பொருள் அறிகுறியென்பதே. அதன் வாயிலாக ஒருவன் இறைவனையே வழிபடுகிறான், இறைவனையே நினைக்கிறான்; வேறொன்றையும் அன்று. இறைவனைப்பற்றிய அத்தகைய தியானம் ஒருவனது உள்ளத்தைத் தூய்மைப்படுத்த உதவுகிறது என்பது உறுதி. இயற்கையில் இறைவன் அந்தர்யாமியாக எழுந்தருளியிருத்தலைப்பற்றிய நிச்சய புத்தியின் பலத்தைக் கொண்டு, துணிவுள்ள இந்துக்கள் ஞானநெறியில் வெகு தொலை முன்செல்லக்கூடும் என்பதை இது காட்டுகிறது. சனன உறுப்பென்னும் கருத்தை உண்மையாகக் கொண்டாலும், அதை அவர்கள் தெய்வ மயமாக்கி ஞான வளர்ச்சிக்குரிய ஒரு துணையாக மாற்றிவிட்டார்கள். [இன்னொரு விளக்கத்திற்கு, சுவாமி விவேகானந்தர் நூல்களின் முழுத் தொகுதி-4ம் தொகுதி பக்கம் 357–58ஐப் பார்க்கவும்.]

இறைவனைப்பற்றிய சிந்தனை, இறைவனது அந்தர்யாமி நிலை, ஆன்மாவின் தெய்வத்தன்மை—இம்மூன்றும் தவிர, வழிபடுவோனது சொந்த உடலும் மனமும், அவனைச் சுற்றியுள்ள ஒவ்வொன்றும் தூய்மை வாய்ந்தன என்ற கருத்துகளும், இந்துமதக் கிரியைகள் யாவற்றிலும் மனநூல் சம்பந்தமான ஆதாரம் ஆகின்றன. தூய்மையைப் பற்றிய

இத்தகைய கருத்துகள் தாற்காலிகமாக அழுக்குற்ற எண்ணங்களையும் தூண்டுதல்களையும் தடுத்து, மனதை இறைவனோடு அளவளாவும் நிலைக்குக் கொண்டு வருகின்றன. வழிபடுவோன் பூஜையை நேராகத் தொடங்குமுன் இந்த நிலையை ஏற்படுத்த வேண்டியதாகின்றது. ஆரம்ப முதல் செய்யப்படும் ஒவ்வொன்றும் மனதை அத்தகைய உயர்ந்த நிலைக்கு ஏற்றுதற்கெனப் பூர்வாங்கமாக விதிக்கப்பட்டுள்ள ஆத்ம சுத்தி முறையே யாகும்.

சாதாரண தாந்திரிக வழிபாடு சம்பந்தமான கிரியையிலிருந்து ஒரு சில உதாரணங்கள் இப்பொருளை விளக்கலாம். பூஜை செய்யப் புகுமுன் பக்தன் நீராட வேண்டும்—ஏதேனும் புனித நீரிலே நீராடல் நன்று; தனது உடலை முழுதும் தூயதாக்கவேண்டும்; பின்னர் அழுக்கற்ற நல்ல ஆடைகளை—இக்காரியத்திற்கென்றெ வேருகப் பலமுறையும் வைக்கப்பட்டுள்ள—ஆடைகளை அணிந்து கொள்ளவேண்டும். வழிபாடு செய்யும் இடம் தூய சம்பந்தம் பெற்றதாதல் வேண்டும்; அது ஒரு கோயிலுக்குள்ளோ, ஒரு புண்ணிய மரத்தின் அடியிலோ, ஒருவனது இல்லத்தைச் சார்ந்த பூஜையறையிலோ இருக்கலாம். எப்படியும் அந்த இடமும், அவ்வழிபாட்டிற்காகப் பயன்படுத்தும் எல்லாப் பொருள்களும் ஐயமறத் தூய்மையாக்கப்படவேண்டும். அவ்விடத்திற்குச் செல்லுமுன் அன்பன் தன் உள்ளத்தைத் தியானம் தோத்திரம் ஜெபம் வாயிலாக இறைவனிடம் திருப்புதல் வேண்டும்.

அவ்விடத்தின் எல்லைக்குட் புகுமுன், தன் உள்ளம் எல்லா மாசுகளும் நீங்கப் பெறவேண்டும் என்று அவன் பிரார்த்திக்க வேண்டும். பின் தனது பூஜையைக் காண வருமாறு சில தேவதைகளை அழைத்துவிட்டு, 'ஆசமனம்' (வல உள்ளங்கையில் மந்திர பூர்வகமாக மும்முறை நீரை எடுத்துக் குடித்தல்) என்பதால் அவன் தன்னைத் தூய்மையாக்கிக் கொள்ளவேண்டும். இது சம்பந்தமாகக் கூறப்படும் மந்தி

ரம் இனிமை வாய்ந்தது. அதன் உட்கருத்தாவது "விண்ணிற் பரவும் கண்களைப்போல் விஷ்ணுவின் பரமபதத்தை ரிஷிகள் இடையருது தரிசிப்பர்" என்பது. இம்மந்திரத்தின் நோக்கமாவது அறுதியான மெய்ப் பொருளாகிய பரப்பிரம் மத்தினிடத்து நம்பிக்கையை ஊட்டுதலே என்பது வெளிப் படை. ஆத்ம சுத்திக்கு இது பயன்தரக் கூடிய ஓர் உபாய மாகக் கருதப்படுகிறது.

பின்னர் தான் பூஜைக்கு உபயோகிக்கும் நீருக்குள்ளே ஏழு தூய நதிகட்குரிய எல்லா அதிதேவதைகளையும் வரவழைப்பதால் அதனைத் தூயதாக்குகிருன். இதன்பின் இந்நீரே தூய்மையளிக்கும் இயல்பைப் பெறுகின்றது. தக்க மந்திரங்களோடு இந்நீர் பூஜைக்குத் துணைப் பொருள்களான ஆசனம், மலர்களும் அவை அமைந்துள்ள கலங்களும், தூபத்தட்டு, விளக்கு, காணிக்கை முதலான, பூஜையோடு சம்பந்தம் பெறும் ஒவ்வொன்றினையும் புனிதப் படுத்துவதற்காகத் தெளிக்கப்படுகின்றது. தனது ஆசனத்திற்குக் கீழுள்ள தரையையும், 'பூமியின் அதிதேவதையே, மக்களை நீ தாங்குகின்றனை, நின்னை விஷ்ணு தாங்குகின்றனர், நீ என்னைத் தாங்கி இவ் ஆசனத்தைப் புனிதமாக்குக' என்னும் பொருளடங்கிய மந்திரத்தாற் புனிதப் படுத்துதல் வேண்டும். இத்தகைய அற்பப் பொருள்கள் வாயிலாகக் காட்சி எங்கும் பரந்துள்ள ஈசன்வரை விரிந்து செல்கின்றது; இவற்ருல் மனம் உயர்ந்த ஞான பூமிக்கு ஏற்றப்படுகிறது.

இதன் பின்னர் பூத சுத்தியென்னும் படியை ஒட்டிய தியானம் மிக இனியதாகின்றது. தூல வடிவங்கள் மூலமாக ஒருவனுடைய நினைவுகள் படிப்படியாகப் பிரபஞ்ச லயத்திற்கும், ஆன்மாவைப் பரப்பிரம்மத்தினிடம் ஒன்றச் செய்தற்கும், மீண்டும் அவற்றைத் தெய்விக வடிவோடு வெளிக்கொணர்தற்கும் செலுத்தப்படுகின்றன என்பதை அது காட்டுகிறது. இம்முறையைப் பின்பற்றும்போது, ஒருவன் பாவத்திற்கே நிலைக்களமாயுள்ள பாப புருஷனுயுள்ள

தன் உடலையும், தனது சூக்கும உடலையும் சேர்த்து உலர்த்து வதாகவும் பின் எரிப்பதாகவும், அதன் பின்னர் நெற்றிப் பிரதேசத்திலுள்ள மதியினின்று ஒழுகும் அமுதத்தின் துணையால் ஒரு புதிய தெய்விக சூக்கும உடலை உண்டாக்கு வதாகவும் நினைக்க வேண்டும். இத் தூலவடிவங்கள் வாயிலாக அன்பன் தனது உள்ளம் மாசறத் தூயதாகி விட்ட தாக நம்பும்படித் தூண்டப்படுகிறான்.

அந்நினைவுகள் உள்ளுறைப் பொருளனவாய், கிட்டத் தட்டக் கவித்துவ இயல்புடையனவாய் இருக்கலாம்; ஆயினும் அவற்றால் விளையும் பலனோ நேரிற் காணக்கூடியதாகும். நாம் தீவிரமாக எதை நினைக்கிறோமோ அதுவே யாகிறோம். நமது பலவீனத்தையும் தீமையையும் பற்றியே சிந்தித்து வரின், பலவீனமாயும் தீமையோடுமே நாம் இருப்போம். இதற்கு மாறாக, நாம் தூயரென்னும் நினைவையே வற் புறுத்தி வருவோமாயின், தூயராகவே ஆவோம். இது ஒரு வகையிலே தன்னைத்தான் வசியம் செய்யும் முறையேயாம். நாம் இயல்பாகவே தூயராயுள்ளோம். ஆதி அவித்தை காரணமாக நாம் நம்மைப் பாவிகளாகக் காணவும் அவ் வாறே ஒழுகவும் இயலுமாறு, நம்மையே மயக்கக் காட்சிக்கு வசியப்படுத்திக் கொண்டு விட்டோம். நினைவுகள் செல்லும் திசையை மாற்றுவதால் நாம் நம்மை அவ்வசியத்தினின்றும் விடுவித்துக் கொள்ளல் வேண்டும். இந்து வழிபாட்டு முறையோடு சம்பந்தப்பட்ட ஆத்ம சுத்திக்கான ஆரம்பக் கிரியைகள் அனைத்திலும் அடங்கியுள்ள கருத்து இதுவே. தூல உடலும், உண்மையிலே அதிலுள்ள ஒவ்வொரு புள்ளியும், நியாஸம் எனப்படும் முறையால் தெய்விகமாக்கப்படல் வேண்டும்.

இவையனைத்தும் முடிந்ததும், பக்தன் இறைவனைப் பிரதிமை மூலமாகவோ பிரதிகை (ஒரு குறி) மூலமாகவோ பூஜை செய்யத் தொடங்குகிறான். பூஜை உபசரிக்கும் முறையாகின்றது. தெய்வத்திற்கு நல்வரவு கூறுவர், ஓர் ஆசனம் இடுவர், நீராட்டி உடையளிப்பர், பிறகு மலரையும்

தூபத்தையும் இனிய உணவுகளையும் சமர்ப்பித்து மகிழ்விப்பர். இவ்வாறு ஆத்ம சுத்திக்கான ஆரம்ப முறைகளால் தன்னையே தெய்விகமாக்கிக் கொண்டும், உபசரணை முறைகளால் அத்தெய்வத்தை மனிதனுக்கியும், பக்தன் பூஜை வேளையிலே பகவானோடு புனிதமாக அளவளாவி, இயன்றவரை அவருக்கு அருகாமையிலே வாழ்ந்து வருகிறான்.

மேலும், இந்த உபசரணை முறை முழுவதும் மனோபாவனை முறையால் மீண்டும் நடைபெற வேண்டியிருக்கிறது. இது மானஸ பூஜை எனப் பெயர்பெறும். வழிபடுவோன் தனது உள்ளத்தைத் தூலமான சூழ்நிலையினின்றும் இழுத்து, இறைவனைப் பற்றிய தியானத்தில் ஆழ்ந்திருக்கச் செய்யவும், மனத்தால் வழிபடுதலைச் சார்ந்த மிக இனிய தூலக் கருத்துகள் மூலம் அதனை இயற்றவும் துணைபுரிகின்றது. வழிபடுவோனுடைய மனத்தைக் தூல உலகினின்றும் சூக்கும உலகிற்குச் செலுத்த முற்போக்கான ஒருபடி இது என்பது தெளிவாகும்.

பகவானை மனித நிலையில் உபசரித்த பின்பு, அவரது பெருமையை ஆரத்திரிக முறை (ஆரத்தி) வற்புறுத்துவதாகத் தோன்றுகிறது. இது குறிகள் வாயிலாக வணங்கும் முறையெனத் தெரிகிறது. இறைவனது திருவுருவத்தின் முன்பு தீபம் நீர் துணி மலர் சாமரம் என்பவற்றைச் சுழற்றுதலே இம்முறை. இப்பொருள்கள் முறையே தீ நீர் ஆகாசம் பூமி வாயு என்னும் பூதங்களைக் குறிப்பதாகத் தோன்றுகின்றன. துணி (வடமொழியில் அப்பொருள்படும் ‘அம்பரம்’ என்னும் வார்த்தைக்கு ‘ஆகாசம்’ என்பதும் பொருள்) எண்ணிறந்த துவாரங்களை யுடைமையின் ஆகாசத்தைக் குறிக்கின்றது; மணம் பூமியின் தனிப் பண்பாதலின், அதற்கு மலர் சிறந்த அறிகுறியாகும். உலகம் அதன் முதற்காரணமாய் பஞ்ச பூதங்களாற் குறிக்கப்படுதலின், குறியீட்டு முறையால் பிரபஞ்ச முழுமையும் பகவானை வழிபடும் வகையாக அவருக்கே சமர்ப்பிக்கப்படுகின்றது. பக

வானே மனிதனுக்கிய கருத்தினின்றும், அனைத்துலகங்கட்கும் அதீதமான அவரது நிலைக்குப் பக்தனது மனத்தை உயர்த்துதற் பொருட்டு, எங்கணும் பரந்துள்ள ஈசனை எவ்வளவு காம்பீரியமான வகையிலே வழிபடுகின்றனர் என்பதை இது விளக்குகின்றது.

ஹோமம் என்னும் செயலோடு பூஜை பொருத்தமாக முடிவு பெறுகின்றது, 'ஹோமம்' என்பது, அதற்கென வளர்க்கப்படும் தூய அக்னியில் ஆகுதி பண்ணுதலே; வேத கால வழிபாட்டு முறை மறையாது வாழ்தலை இது குறிப்பது வெளிப்படை. ஆயினும் பூஜை முடியும் சமயத்துச் செய்யப்படும் இக்கிரியை பொருள் பொதிந்த தொன்றேயாம். ஈசனைப்பற்றிப் பக்தன் கொள்ளும் கருத்து, அதுவரை தூலமாகவோ மனோமயமாகவோ இருந்த பிரதிமையால் சுமத்தப்பட்டிருந்த வடிவம் என்னும் வரையறையைத் தாண்டிச் செல்ல, இக்கிரியை துணைபுரிகின்றது. நெருப்பிற்கு அதிதேவதையான அக்கினியின் வாயிலாகப் பக்தன் சமர்ப்பிக்கும் பொருள்கள் பிரபஞ்சத்திற்கு அதிபதியான ஈசனிடம் செலுத்தப்படுகின்றன. அதற்கும் மேலாக, பிரபஞ்சத்தையும் அதனைப் படைத்த இறைவனுகிய சிவபெருமானேடு கூடத் தூய அக்கினியிலே ஆகுதியாகப் பக்தன் சமர்ப்பிக்க வேண்டும் என்றும் சில சமயம் எதிர்பார்க்கப்படுகின்றது. பக்தன் எல்லா உருவங்களையும் தாண்டிச் சென்று, தனது ஆன்மாவும் பரப்பிரம்மமும் ஒன்றே யென்பதை உணரும் பொருட்டு அவனுக்குத் துணை புரிவதையே குறியாகக் கொண்ட இக்கிரியையின் துணிவை என்னென்பது!

எனினும் இந்துமதக் கிரியைகள் ஓர் இனிமையான பயன்தரக்கூடிய ஞான சாதன முறையாலே மனதைத் தூய்மைப்படுத்தும் நோக்கங் கொண்டன என்பதைக் காட்டுதற்கு, முற்கூறிய உதாரணங்கள் போதியவாகும். இக்கிரியைகளைச் சிரத்தையோடும் விடா முயற்சியோடும் வேறு பயனை விழையாது பின்பற்றிவரக் கூடுமாயின், அவை

மனத்தை மேலும் தூய்மையாக்கி வருவது உறுதியேயாகும்; இறுதியில் அதன் பயனுக, உயர்ந்த பாரமார்த்திக உண்மைகளை நேரே காணுந் திறமையை அளிக்கும் தூய ஞானக் காட்சியெனும் சக்தி வெளிப்படலாகும்.

## புராணம்

புராணம் (இதிகாசங்களை உள்ளிட்ட பழங்கதைகள்), உபதேசங்கள் வாயிலாகவும் உயர்ந்தோர்களின் ஒழுக்கங்கள் வாயிலாகவும் மிக உயர்ந்த இலக்ஷிய வாழ்க்கையை எடுத்துக் காட்டும் ; அன்றியும் அதனைப் பின்பற்ற முயலும்படி ஊக்கத்தையும் ஊட்டும் :—இதுவே அதன் நோக்கமாகும். சரித்திர ஆதாரம் பெற்றோ பெருதோ எழுந்துள்ள பழங்கதைகளும் உவமைக் கதைகளும் பெரியாருடைய வரலாறுகளும் அதில் அடங்கியிருக்கும். இவைகளில் ஒரு சில உள்ளுறைப் பொருளையுடைய கதைகளாகும்; வேறு சில காவிய ரசம் நிறைந்த காட்சிகளின் வருணனைகளாகும்; இன்னும் சில மிகமிகப் பழமையான சில நிகழ்ச்சிகளை உரைப்பனவாம். இவை வாயிலாக இந்து மதத்தின் இலக்ஷியங்களும் மிக உயர்ந்த சூக்குமமான கருத்துகளும் பொது மக்களின் உள்ளத்தே விளங்கும்படிப் புகுத்தப்படுகின்றன. சூக்குமமான தத்துவங்களும் போதனைகளும் கதைகள் மூலமாகத் தூல வடிவம் பெறுவதோடு, மிக இனிமையுடையனவாயும் மனத்தில் எளிதே பதியக் கூடியனவாயும் ஆக்கப்படுகின்றன.

வேதத்தைச் சார்ந்த பிராம்மணங்கள் உண்டான பழங்கால முதலாக இத்தகைய சிறப்புமுறை கையாளப்பட்டு வந்துள்ளது. பிராம்மணங்களிலே இதிகாசங்களும் (பரம்பரைக் கதைகள்), புராணங்களும் (உலகத் தோற்றத்தைப் பற்றிய கதைகள்), காதைகளும் (காவிய சம்பந்தமான பாடல்கள்), நாராசம்ஸியும் (வீரர்களைப் புகழும் பாடல்கள்) உள்ளன. நாளடைவில் இத்துறையிலே தனிப்பட்ட

இலக்கியங்கள் தோன்றி வளர்ந்து பெருகி, இந்துக்களின் புராணங்களாக உருப்பெற்றன.

இந்த இலக்கியங்களின் பெரும்பகுதி வரலாற்றைக் கூறும் பாட்டாகவே அமைகிறது; இராமாயணமும் மஹா பாரதமும் இதிகாச வகையைச் சார்ந்தன. இக்காரணம் பற்றியே, இந்து மதத்தின் மிக உயர்ந்த சூக்குமமான கருத்துகளையும் இலக்ஷியங்களையும் நேரே பொது மக்களின் நெஞ்சிற்குள் புகட்டுவதற்கு இம்மாதிரி நூல்கள் மிகச் சிறந்த வாயில்களாகின்றன. வேதத்தைச் சார்ந்த பிராம் மணங்கள் உண்டான கால முதலாக இம்முறை பழக்கத்தில் இருந்து வந்துள்ளது. அந்நாள்களில் கதைப் பாடல்களைப் படித்தல் வைதிக கிரியைகளின் ஓர் அங்கமாக அமைந்தது. உதாரணமாக, அசுவமேத யாகத்திற்கு இம்மாதிரியான புராணபடனம் (புராணம் படித்தல்) அவசியமான பூர்வாங் கமாக (முன் நிகழ வேண்டிய காரியமாக இருந்தது. அரச சபையில் அத்தகைய பாக்களைப் படித்தலோ பாடலோ சூதர் கள் எனப்படும் ஒரு வகுப்பினர்க்கு உரியதாயிற்று; இன் னும் முனிவர்களும் ஒரு தனிமையான இடத்திற்கூடி, ஆக்கி யானங்கள் இதிகாசங்கள் புராணங்கள் ஆகிய நூல்களைப் படிக்கக் கேட்டலில் மழை காலம் முழுமையையும் கழிக்கலா யினர். அவ்வழக்கம் ஒரு வகையிலோ வேறு வகையிலோ இன்றுவரை நிலைத்து வந்துள்ளது. மத சம்பந்தமாகவோ ஸமூக சம்பந்தமாகவோ ஒரு காரியம் நிகழும் போதெல்லாம், இந்து புராணங்களிலிருந்து ஒரு பகுதியை நாடகமாக நடித் தலோ, 'கதைக்காரர்' ஒருவர் அதைக் கதையாகப் பிரசங்கம் பண்ணுதலோ பல முறையும் உடன் நிகழ்ந்து வந்துள்ளது. இவ்வாறாக நெடுங்காலமாக இந்து மதத்தின் உயர்ந்த கருத் துகளும் இலக்ஷியங்களும் மனதிற்பதியக்கூடிய கதைகள் வாயிலாகவும், ஆவேசத்தை யூட்டும் சரித்திர நிகழ்ச்சிகள் மூலமாகவும் இந்து ஸமூகத்தைச் சார்ந்த ஒவ்வொரு வகுப்பி னர்க்கும் புகட்டப்பட்டு வந்துள்ளன.

இந்துக்கள் அனைவர்க்கும் சமயக் கல்வியை ஊட்டுதற்காக (குறைந்தது) ஆறாயிர வருட காலமாக, முன்னொடு பின் முரணாது ஒழுங்காக, மஹத்தான முயற்சி இவ்வாறு நடைபெற்று வந்ததே மிக ஆச்சரியமான ஒரு நிகழ்ச்சி யல்லவா? மத சம்பந்தமான காரியங்களிலே இந்துக்களிடத்து எவ்வளவு வியக்கத்தக்க விடாமுயற்சியோடு கூடிய ஊக்கம் இருந்து வந்தது என்பதற்கு இதுவே ஒரு சான்றாகிறது. அந்த ஊக்கம் வீணாகவுமில்லை. இம்முறையினால் பல்லாயிர ஆண்டுகளாகப் பொதுமக்களின் உள்ளத்தில் இந்துமதக் கருத்துகளும் இலக்ஷியங்களும் நன்கு ஊறியிருக்கின்றன. உயர்ந்த சூக்குமமான கருத்துகள் அவர்கட்கு எட்டாதவையாகலாம் எனினும், சில உவமைகள் மூலமாகவும் சித்திரங்கள் மூலமாகவும் அவை ஒருவாறு உணரப்படுகின்றன; மதத்தைப் பின்பற்றும் முயற்சியில் சிரத்தையைக் கிளப்புவதற்கு அது போதியதாகின்றது. இம்மாதிரியாக சாஸ்திர அறிவால் விளக்கம் பெற்ற சிலர், இந்து ஸமூகத்திலே தாழ்ந்த படிகளில் இருப்பவராயினும், ஞான வாழ்க்கையின் மிக உயர்ந்த இலக்ஷியத்தை அடைவதில் ஆவேசமுடையராகப் பன்முறையும் காணப்பட்டனர். உண்மையாகவே, புராணம் பொது மக்களது மனத்தை ஞானமலையின் சிகரங்கட்கு உயர்த்துவதில் வலிமை வாய்ந்த ஒரு நெம்பு கோலைப் போல வேலை செய்கின்றது.

இனி இந்துமதப் புராணம் எத்தகையது என்பதையும், அது எவ்வாறு இம்மாதிரியான அற்புதங்களை நிகழ்த்துகிறது என்பதையும் கவனிப்போம். முதல் முதலாக, ஈசன் ஆன்மா இயற்கை எனும் மூன்று தத்துவங்களைப் பற்றிய சூக்குமமான இந்துமதக் கருத்துகளைத் தூலமான படக் காட்சிகள் வாயிலாக அது எடுத்துரைக்கின்றது. செய்திகளையும் போதனைகளையும் படங்கள் வாயிலாக அளிப்பது போலவே, கதைகள் வாயிலாகவும் வழங்கலாம். படமோ கதையோ நேரே உண்மையன்று எனினும், ஓர் உண்மையை

ஒருவனது மனதிற் பதித்தற்கு அது துணையாகின்றது. நிலப்படம் என்பது யாது? அது அதனுற் குறிக்கப்படும் தேசமன்று என்பது உறுதி; ஆயினும் அந்நிலத்தைப் பற்றி மிகுதியான அறிவைத் தரவல்லதாகின்றது. புராணக் கதைகளைப் பற்றிய உண்மையும் இதுவே. இவை உரைக்கப்படுகின்றபடியே உண்மையாக வேண்டும் என்பது கருத்தன்று; ஆயினும் அவை வாயிலாகச் சூக்குமமான தத்துவார்த்தங்களைப் பற்றிய கருத்தை ஒருவாறு ஒருவன் பெறலாம். மிகப் பழமையான வேதகாலந்தொட்டே, ஆக்கியானங்களை உள்ளபடியே உண்மையாகக் கொள்ளாமல் எவ்வாறு அவற்றுக்குப் பொருள் கொள்ளவேண்டும் என்பதுபற்றித் தனிப்பட்ட போதனைகளை அருளி வந்துள்ளனர்.

உதாரணமாக, படைப்பைப் பற்றிய கதையை எடுத்துக் கொள்வோம்; இந்தியாவிலுள்ள புராண இலக்கியங்களில் தவருது காணப்படும், மிகப் பிரியமான இக்கதையைக் கொண்டே முற்கூறிய பொருளை விளக்குவோம். பல கதைகளில் ஒன்றை (பாகவத புராணம 3–8ல் உள்ளதை) எடுத்துக் கொள்வோம். நான்கு கைகளையும் பீதக உடைகளையும் உடைய நீல வண்ணத்தராகிய நாராயண பகவான் எங்கும் பரந்துள்ள, ஆழங்காண முடியாத கடலிலே மிதந்து கொண்டிருக்கும் ஆயிரந்தலை நாகமாகிய அனந்தன் மீது அமைதியாகத் துயில் கொள்ளுகின்றனர். வரம்பற்ற கடலின் (ஏகார்ணவத்தின்) நீர் 'காரண சலிலம்' (காரண நீர்) எனப்படும். வேறென்றும் இல்லை. இது தான் பிரளயத்தின் படம். படைப்பிற்கு முன்பு நாராயணரது உந்தியிலிருந்து முளைக்கின்ற ஒரு கமலம் கடல் முழுவதையும் தனது ஜோதி வெள்ளத்தால் நிரப்புகிறது; இந்தத் தாமரையின் மீது நான்கு முகங்களும் நான்கு கைகளும் கொண்ட சிவந்த நிறமுடைய தெய்வமாகிய பிரம்மா தோன்றுகிருர். ஈசனது ஆணைக்கு இணங்கிப் பிரம்மதேவர் பழைய கல்பத்தைப்

பற்றித் தியானித்து, பின்னர் பிரபஞ்சத்தை அதற்கேற்பப் படைக்கத் தொடங்குகிறுர்.

வருணித்தற்கரிய ஓர் உண்மையைப் பற்றிய இச்சித்திரம் எவ்வளவு மேன்மையுற்றதாகிறது! ரிக்வேதத்திலுள்ள பிரளய நிலையைப் பற்றிய வருணனையோ அறிவைத் திகைக்கச் செய்கிறது. அதையும் பார்ப்போம். "அவ்வமயம் ஸத்தும் இல்லை, அஸத்தும் இல்லை, சுவர்க்கமும் இல்லை, பூவுலகமும் இல்லை... அப்போது மரணமும் இல்லை; அழியாப் பெருவாழ்வும் இல்லை; இரவுக்கும் பகலுக்கும் உள்ள வேறுபாடு யாதொன்றும் இல்லை. ஏகமான பொருள் தனது சக்தியோடு (சுவதா) மட்டும் பிராணன் இல்லாத போதும் மூச்சுவிட்டுக் கொண்டிருந்தது. படைப்புக்கு முன் ஈதனைத்தும் இருட் போர்வையால் மூடிய இருளாயிருந்தது, காரணத்தோடு ஒன்ருயிருந்தது. பிரளய காலத்து, எங்கும் பரந்ததும், ஆனுல் அற்பமானதும் ஆன அஞ்ஞானத்தால் மூடப்பட்டுக்கிடந்த பிரபஞ்சம் இறைவனது சங்கற்பத்தால் நாம வடிவங்கள் வாயிலாக மீண்டும் வெளிப்படலாயிற்று." (ரிக் வேதம்: 10–139–1 முதல் 3 வரை). 'காரணம்' என்பதைக் குறிப்பதற்காக வேத மந்திரத்தில் அமைந்துள்ள 'சலிலம்' எனும் மொழிக்கும் பதப் பொருள் 'நீர்' என்பது —இது கவனிக்கத் தக்கதே. இப் பகுதியை ஓர் ஐரோப்பிய பண்டிதர் "வெகு தூரம் வரை நுழைதற்கரிய பெரு வெள்ளம்" என மொழி பெயர்த்துள்ளார். ஆயினும் 'காரணத்'திற்குப் பதிலாக வேதமந்திரத்தில் 'சலிலம்' (தண்ணீர்) எனும் மொழியை உருவகமாகப் பயன்படுத்தியிருப்பதே, புராண வரலாற்றிலே 'காரண'த்தை எங்கும் பரந்த நீராகச் சித்திரித்துக் காட்டுதற்கு ஒரு குறிப்பாக உதவியது. ஏக பரம்பொருள் அதன் சக்தியாகிய 'சுவதா'வோடு சேர்ந்து நின்ற நிலையே, நாராயணர் தமது யோகமாயையோடு கூடிய நிலையாகத் தூல வடிவம் பெற்றுள்ளது.

புராண வரலாற்றினின்றும், பிரளயம் சிருஷ்டி இரண்டையும் பற்றி வேதங்கள் வெளியிடும் பின் வரும் உண்மைகள் ஒருவரது உள்ளத்தில் பதிக்கப் படுகின்றன; தமது மாயாசக்தியோடு கூடிய பகவான் மட்டுமே பிரளயத்திற்கு முன்பு இருந்தனர்; மற்றவை யாவும் எங்கும் பரந்துள்ள தண்ணீரால் குறிக்கப்படும் காரண நிலையில் ஒடுங்கிக் கிடந்தன; சிருஷ்டிக்கு முன் அவரது சங்கற்பத்தால் தமது மாயையின் வாயிலாகத் தம்மிடமிருந்தே பிரம்மாவின் (இரணிய கருப்பரின்) தோற்றமும் உண்டாயிற்று. புராண வரலாற்றிற் காணப்படும் சித்திரத்திற்கு ஒரு சிறிது பொருள் கூறுவோமாயின் பிரளயத்தையும் சிருஷ்டியையும் பற்றிய இவ்வேத உண்மைகள் வெளியாகும். சிறிதும் பண்படாத உள்ளங்கள் அடிப்படைக் கருத்தை அறியும் அளவு வரை செல்ல இயலாதன என்பது தெரிந்ததே; ஆயினும், அச்சித்திரத்தின் மூலம் அவர்கள் குறைந்ததாயினும் அவசியமான அளவிற்கு உண்மையை அறிவது உறுதி; (சக்தியாகிய) தூய பத்தினியோடு உறையும் பகவானே படைப்பிற்கு ஒரே மூலகாரணம் என்பதை அறிவதும் அற்பமான மதிப்புடையதாகுமோ? அவரே நிமித்த காரணமும் ஆவார்.

இவ்வாறு புராண வரலாற்றிலுள்ள சித்திர வடிவப் போதனைகளால், பகவான் இயற்கை ஆன்மா என்னும் முப்பொருள்களைப்பற்றி இந்து மதங்கூறும் அடிப்படை உண்மைகள் பொதுமக்களது உள்ளத்தில் நன்கு பதிக்கப்படுகின்றன.

மேலும், சரித்திரம் சம்பிரதாயம் கதை என்னும் மூன்றினின்றும் பொறுக்கியெடுக்கப்பட்ட எண்ணற்ற இலக்ஷியங்களை, புராணம் ஞான ஊக்கத்தை ஊட்டும் அளவிற்கு, இந்து ஜன ஸமூகத்திற்குப் புகட்டியுள்ளது. இந்தியாவிலுள்ள இந்து மதத்தாரின் பொது உள்ளத்திலே நூற்றுக் கணக்கான பெரியோர்களின் ஒழுக்க விழுப்பம் புகுத்தப் பட்டுள்ளது. உயர்ந்தோர் முதல் தாழ்ந்தோர் ஈறாக அனை

வரும் முயன்று பின்பற்றுதற்குரிய இந்துமத வாழ்க்கையின் மாதிரிச் சித்திரங்களாக அப்பெரியோர்கள் இன்றளவும் கருதப்பட்டு வருகின்றனர். உதாரணமாக: அரசன், வீரன், இல்லறத்தான், முனிவன், பக்தன், தந்தை, தாய், மனைவி, கணவன், புதல்வன், உடன்பிறந்தோன், வேலையாள்—இவர்களில் ஒவ்வொருவரது இலக்ஷியவாழ்விற்கும், இவைபோன்ற ஏனைய இலக்ஷிய வாழ்வு ஒவ்வொன்றுக்கும் புராணங்களிலே தொன்று தொட்டு வந்துள்ள ஒரு தேசுமிக்க சித்திரமேனும் காணப்படுகின்றது. ராமர், கிருஷ்ணர், அருச்சுனன், யுதிஷ்டிரர், பீஷ்மர், வசிஷ்டர், விதுரர், நளமன்னர், அரிச்சந்திரர், கர்ணர், காந்தாரி, சீதை, சாவித்திரி, இலக்குமணர், பரதர், அனுமார்—இவர்களை இன்றுவரை புகழ்ந்து வந்துள்ள பலப்பல இலக்ஷிய மக்கட்குள் வைத்தெண்ணலாம்; அந்த இலக்ஷியங்கள் இந்துவின் வாழ்வையும் ஒழுக்கத்தையும் சரியான வழியிலே வார்த்தற்கு இன்றியமையாதவற்றாத ஞானப் பேருக்க ஊற்றுகளாக இன்றளவும் ஒளிர்கின்றன.

இன்னும், கதைகளே ஞானச் சுரங்கங்களாயுள்ளன. ஒவ்வொன்றும் நெஞ்சிலே ஒரு முக்கிய படிப்பினையை எழுதிச் செல்கிறது. இலக்ஷியமாக விளங்கும் ஒரு இந்துவின் வாழ்க்கையிலும் ஒழுக்கத்திலும் யாதேனும் ஒரு பகுதியோடு நேரே தொடர்புடைய ஒரு விஷயத்தை விளக்கிக் காட்டுவது அதன் வழக்கம். படிப்பினை யாதேனும் ஒரு பாரமார்த்திக விதியைப் பற்றியதாகவோ, யாதாவது ஒரு சாதனை முறையைப் பற்றியதாகவோ, ஒரு தர்மத்தைப் பற்றியதாகவோ, ஒரு மனிதனது வாழ்க்கை நிலைக்கும் ஸமூகத்தில் அவனுக்குரிய அந்தஸ்திற்கும் தொடர்பிற்கும் ஏற்றவாறு அமையும் சிறப்பான கடமைகளைப் பற்றியதாகவோ இருக்கலாம்.

தருமம் (அறம்) இறுதியிலே வெல்வது திண்ணம்; பேராசை, காமம், பொறாமை, அகந்தை முதலிய தீய இனத்

தைச் சேர்ந்தன யாவும் நெடுநாள் எதிர்த்து நிற்க இயலாது, இறுதியில் வீழ்ந்து அழிவுறும்; இந்தப் பாரமார்த்திக விதியை—அறம் எங்குளதோ அங்கேயே வெற்றி என்பதை—இக்கதைகளிற் பலவும் நமது மனதிற் பதிய வைக்கின்றன. இப்படிப்பினையே, இந்துக்களின் ஒவ்வொரு புராணக் கதையும் ஒவ்வொரு வீர வரலாறும் பாடும் பல்லவியாகும்; இது இந்துவின் உள்ளத்திற்குள் ஆழத்திற் பதிந்து, அவ்வுள்ளம் வாழ்க்கையை நோக்கும் நிலை முழுவதிற்கும் அவ்வண்ணத்தை ஊட்டியுள்ளது. இதனால் இந்துவின் உள்ளம் விலங்கின் சக்தியை நம்புவதினும் அதிகமாக ஆன்ம சக்தியில் நம்பிக்கை கொள்ளும்படிப் பயிற்சி பெற்றுள்ளது. வீரனின் வலிமைக்கு அற வாழ்வும் அற ஒழுக்கமும் அரணாக வேண்டும்; அவன் அறத்தை நிலைநாட்டுதற்கெனவே எப்போதும் போர் புரியவேண்டும்; அவ்வாறு இல்லாதபோது, அவனிடம் அசாதாரணமான போர்த்திறமை இருப்பினும், அழிவே இவனுக்குரிய விதியாகும். அரக்கனது வலியும் தீய இச்சைகளும் வாய்ந்த அதி மனிதனான (மனித இயல்பை மிஞ்சியவனான) இராவணனது வீழ்ச்சியைக் கூறும் இராமாயணமும், தண்ணிய ஆசைகட்கு ஆட்பட்டு அவற்றை நிறைவேற்ற நினைத்த கௌரவர்கள், தொகையில் மிகுந்திருந்தும், சிறப்புற்ற தலைமை வாய்ந்திருந்தும் அழிந்தனர் என்பதைக் கூறும் மஹாபாரதமும் இதே படிப்பினையை இந்துக்களின் உள்ளத்தில் நன்கு புகுத்துகின்றன.

இன்னும், இவ்விரு இதிகாசங்களிலும் அவதார புருடரான இராமரும் கிருஷ்ணரும் முறையே எழுந்தருளியிருந்தமை, நிகழ்ச்சிகளனைத்திற்கும் ஒரு பாரமார்த்திக மதிப்பையும் ஊட்டியுள்ளது. ஓர் அவதார புருடரின் வாழ்க்கை வரலாற்றைப் பற்றிய தியானம் மிகப்பெரும் பயனைத்தரும் ஞான சாதனமாதலின், இராமாயணமும் பாரதமும் அம்மாதிரியான ஞான சாதனங்களைப் பழக ஏராள

மான வசதிகளையும், நல்ல ஊக்கத்தையும் அளிக்கின்றன. இந்தக் கதைகள் வாயிலாக இராமரும் கிருஷ்ணரும் நமது இல்லத்திற்கே வந்துள்ளவரைப்போல் தோன்றுகின்றனர்; இக்கதைகளின் எப்பகுதியையேனும் நாடகமாக நடிப்பதைக் காணும்போதெல்லாம் சிறப்பாக அவர்கள் நமது கண்ணெதிரே நிற்கின்றவராகின்றனர். அவர்களுடைய ஆடைகளின் விளிம்பைத் தொடும் பேற்றை யாம் பெறுகின்றோம். இவை வாயிலாக ஐயமின்றி நம் உள்ளங்கள் இறைவனை நோக்கி உயர்த்தப் படுகின்றன. இக்காரணத்தால் இவை அசாதாரணமான மதிப்புள்ள ஞானத் தூண்டுகோல்களாகின்றன. ஏனையவற்றோடு ஸ்ரீ கிருஷ்ண பகவானது வாழ்க்கை வரலாற்றின் இன்னொரு பகுதியை மனதிற் பதியுமாறு படம் வரைந்து காட்டும் நூலாகிய பாகவதமும் இந்துவின் மனத்தின் கண் அதேமாதிரியான பயனை வளர்க்கின்றது.

புராண கதைகளில் அமைந்துள்ள இன்னொரு மிக இனியதும் போதனையூட்டுவதுமான இயல்பாவது: அவை மூலம், கடமைகள் ஒன்றோடொன்று வெளிப் பார்வைக்கு முரணும் சந்தர்ப்பங்களில் ஏற்படும் (தரும) சங்கடத்தைத் தீர்க்க ஆச்சரியமான வழிகளும் காட்டப்படுகின்றன. இராமர் தமது மனைவிக்குச் செய்யவேண்டிய கடமையினும் தம் குடிகட்குச் செய்யவேண்டிய கடமை மிக்க மதிப்புடையதாகின்றது. பரதன் பேராசையும் பொறாமையும் பூண்ட தன் அன்னைக்குச் செய்யவேண்டிய கடமையை அறநெறியைப் பின்பற்றும் அவனது தமையனுக்குரிய கடமை விலக்கி விடுகிறது. விபீஷணன் தனது காமநோயாளனான தமையனுக்குச் செய்தற்குரிய கடமையை அறத்தின்வழி நிற்கும் அவர்களது தெய்விகப் பகைவர்க்குரிய கடமை நீக்கி விடுகிறது. கர்ணன் தனது மகனுக்குச் செய்யவேண்டிய கடமையைப் பசியொடு தன்னை அணுகிய விருந்தினனுக்குரிய அவனது கடமை வென்றுவிடுகின்றது. நூற்றுக் கணக்கான

இவ்வரலாறுகளின் வாயிலாக, சங்கடமான சந்தர்ப்பங்களில் இன்ன கடமையைத் தெரிந்து பற்ற வேண்டும் என்பதற்கு வாழ்க்கையில் வழிகாட்டியாக அமையும் பல உதாரணங்கள் நமக்குத் தரப்படுகின்றன. இச் சந்தர்ப்பங்கள் ஒவ்வொன்றிலும், உடலிச்சையும் குறுகிய சுயநலமும் நம்மிடம் வற்புறுத்திக் கேட்கும் பொருள்களைப் பொருட்படுத்தாது ஞான நெறியை நோக்கி உயரச் செல்லும் உன்னத இலக்ஷியத்தைப் பின்பற்றுதல் நமக்கு அறிவுறுத்தப் படுகின்றது. கடமைகள் முரண்படுங் காலத்து யாம் பின்பற்றுதற்குரிய நெறி இதுவேயெனத் தோன்றுகிறது.

இந்துக்களின் புராண இலக்கிய நூல்கள் எண்ணிறந்த கதைகள் வாயிலாக முக்கியமான நற்பண்புகளின் படங்களை ஒளிமிக்க வண்ணங்கள் தீட்டி விளக்குவதோடு, கதைப் போக்கைக் குறிக்கும் பகுதிகட்கிடையே தத்துவத்தையும் ஞான சாதனங்களையும் பற்றிய சிறப்பான ஒள்ளிய சம்பாஷணைகளையும் உடையனவாகும். தெள்ளிய நடையிலே நாடகப்பான்மையிலே அமைந்திருப்பது பற்றி இச்சம்பாஷணைகள் இனிமையும், எளிமையும், மனதிற் பதியும் இயல்பும் வாய்ந்துள்ளன. இந்துக்களிற் பெரும்பான்மையர் மதத்தையும் தத்துவத்தையும் பற்றிய போதனைகளை இவற்றின் மூலம் பெறுதற்குக் காரணம் இதுவே. இந்நாளைய இந்து சாஸ்திரங்களிற் பலரும் விரும்பிக் கற்கும் நூலாகிய கீதையும் சண்டியும் முறையே மஹாபாரதத்தும் மார்க்கண்டேய புராணத்தும் கதைப்போக்கின் இடையே நாடகப்பான்மையிலே கோக்கப்பட்டுள்ள அத்தகைய சம்பாஷணைகளேயாம்.

ஆக, புராணம் வேதங்களிலுள்ள மிக நுண்ணிய போதனைகளையும் கருத்துகளையும் படம் வரைந்து காட்டுவதாலும், மனதிற் பதியுமாறு ஒழுக்கத்தைச் சித்திரிப்பதினாலும், படிப்பினை மிகுந்த கதைகளையும் ஞானத்தைப் புகட்டும் சம்பாஷணைகளையும் உடைமையாலும், இந்துக்கள் பெறும்

வாழ்க்கைக் காட்சியை ஞான மய மாக்குதற்குப் பெருந் துணையாகின்றது.

21

# இந்துக்கள் காணும் வாழ்க்கைக் காட்சி

ஈசன், இயற்கை, ஆன்மா என்னும் மூன்று தத்துவங் களைப் பற்றியும் இந்து சமயம் கூறுவதெல்லாம் ரிக்வேத காலந்தொடங்கிச் சாஸ்திரங்கள் வாயிலாக நமக்கு வந்துள் ளன. அதன் பின், கழிந்த ஆயிரக்கணக்கான ஆண்டுகளில் அவற்றைப் பிற்கால சாஸ்திரங்கள் பெருக்கியும் விளக்கியும் வந்துள்ளன; நமது காலம் உள்பட ஒவ்வொரு காலத்தும் தோன்றிய ரிஷிகளின் அனுபூதிகளாலும் அவை மெய்ப்பிக் கப்பட்டுள்ளன. இந்து ரிஷிகள் கண்ட முடிபுகளிலே, வாழ்வையும் இருப்பையும் பற்றிய மாறவொண்ணாத நிலை யுற்ற சில உண்மைகள்—இயற்கையில் இறைவனது வியாப கமும் (அந்தர்யாமித்துவமும்), ஆன்மாவின் தெய்வத் தன் மையும் போன்றவை—வெளியாகின்றன. இவை இந்து மதத்தின் அடிப்படையுண்மைகள் எனப்படுகின்றன.

அத்தகைய நித்தியமான உண்மைகளின் மீது தான் (அவற்றை ஆதாரமாகக்கொண்டே) இந்துவின் வாழ்க்கை யெனும் முழுக் கட்டிடமும் அமைக்கப்பட்டுள்ளது. ஒருக் கால் இக்காரணத்தினுல் தான் போலும் இக்கட்டிடம் பலப் பல நூற்ருண்டுகளாக நிலைத்து வந்துள்ளது. படையெடுப் பும், அன்னிய ஜாதியர் பலரின் குடியேற்றமும், ஆதிக்க மும் கூட இந்துக்களின் வாழ்க்கைப் போக்கை வெளியில் தெரியும் அளவிற்கு ஒரு சிறிதும் மாற்றிவிடவில்லை. அஸ்ஸிரியர், பாபிலோனியர், எகிப்தியர், கிரேக்கர், உரோ மானியர் என்பவரைப் போன்று இக்காலத்திய இந்துக்கள் தம் பண்டைக் கால மூதாதையரினின்றும் வேறுபட்டு

உருத்தெரியாதபடி மாறி விடவில்லை. மிகப்பழமையான ரிக் வேதத்திலும் உள்ள மந்திரங்களை இன்றும் அவர்கள் ஓதி வருகின்றனர்; இன்றைக்கும் அவர்களுடைய ஒழுக்கத்தைப் பண்டைய காலத்திற்போன்று சாஸ்திரங்கள் ஒழுங்குபடுத்தி வருகின்றன.

சில தற்கால மனப்பான்மையுள்ள மக்கள் நம்மை நம்பும்படி வேண்டுவதுபோல, இந்துக்கள் தமது அறியாமையால் இடைக்காலப் போக்கைப் பேதமையோடு விடாது பற்றி வருகின்றனர் என்பதும், இதன் காரணமன்று. காரணத்தைக் கண்டுபிடிக்க வேறிடத்தை நாடல் வேண்டும். என்றைக்கும் அழியாத உண்மையை இந்துக்களால் கைவிட இயலாது என்பதே அக்காரணம். அத்தகைய உண்மைகளாகிய கற்பாறை போன்ற ஆதாரத்தின் மீதுதான் அவர்களது ஜனஸமூகம் கட்டப்பட்டுள்ளது. அம்மாதிரியான ஆதாரத்தினின்றும் வேரோடு பிடுங்கியெடுப்பதாயின் அந்தக் கட்டிடம் நொறுங்கி வீழ்ந்து மறைந்துவிடும். ஆனால் அது நடக்கப் போவதில்லை.

நூற்றாண்டுக் கணக்காகக் காலங் கழியவே, இந்துக்களின் வாழ்வு எனும் மேற்கட்டிடம் தேய்ந்து பழுதடையலாயிற்று என்பதில் ஐயமில்லை. ஆனால் அது இடிந்து விழு முன்பே, ஓர் அவதார புருடரோ ஆசாரியரோ தக்க காலத்தில் தோன்றி, அக்காலத்திய மாறிய நிலைமைகட்கு ஏற்றவாறு அதைப் பழுது பார்த்தும் புதிதாக அமைத்தும், அதற்குப் புதிதான ஆயுளைக் கொடுத்து வந்தனர். இவ்வாறே யுகக் கணக்காக நிகழ்ந்து வரலாயிற்று; அக்காலமெல்லாம் பாரமார்த்திக உண்மைகளென்னும் கற்பாறையை ஆதாரமாகக் கொண்டிருந்த தன்மை மாறாமலே இருந்து வந்தது. சுருதியே (வேதங்களே) மிக உயர்ந்த பிரமாணமெனக் கருதுதல் யுகக் கணக்காக நிலைபெற்று வந்துள்ளது. இருடியராற் கண்டுபிடிக்கப்பட்ட உலவா உண்மைகட்குக் களஞ்சியமான நிலைமையில் அது ஏனைய சாஸ்திரங்கள் அனைத்தையும்

தனது ஆட்சிக்குள் அவ்வளவு நீண்ட காலமும் அடக்கி வந்துள்ளது. ஸ்மிருதிகள் என்னும் அந்த ஏனைய சாஸ்திரங்களோ, இந்து ஜன ஸமூகத்தின் மாறுபடும் சூழ் நிலைகட்கு ஏற்றவாறு அப்போதைக்கப்போது பெருமாண்புற்ற ஞானியரால் மாற்றியமைக்கப்பட்டு வந்துள்ளன. ஆனாலும் சுருதியில் வெளியிடப்பட்டுள்ள இந்துமத அடிப்படையுண்மைகளினின்றும் விலகாது அவர்கள் அவற்றை மாற்றி வந்தனர்.

இந்துமதம் தோன்றிய நாள் முதலாகவே இம்மாதிரியான மாற்றம் நிகழ்ந்துகொண்டே இருந்துள்ளது. அடிப்படையுண்மைகள் சம்பந்தப்பட்டவரை மாறாத உறுதியும், புறத்தேயுள்ளவற்றை மாற்றியமைப்பதற்கு வேண்டிய வளைந்து கொடுக்குந் தன்மையும்—இவ்விரண்டையும் உபாயமாகக் கொண்டே இந்துக்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் வெற்றிகரமாக வாழ்ந்து வந்துள்ளனர்.

முற்கூறியபடியே, மனிதனது முக்கிய இயல்பாவது தெய்வத் தன்மையே என்னுங் கொள்கை இந்து மதத்தின் அடிப்படைக் கொள்கைகளில் ஒன்று. மனிதனது ஆன்மா பரம்பொருளிற்கு வேறன்று. ஆதலின், எல்லா விதத்தாலும் தெய்வத்தன்மையை அடையும் சக்தி அவனிடம் எப்போதும் உள்ளடங்கியிருக்கின்றது. அவன் எச்செயலைப் புரியினும், அது எவ்வளவு தண்ணியதாயினும், என்றென்றும் அவன் கெட்டழிந்துபோதல் இயலாது. பாவங்களாவன அறியாமையால் இயற்றப்படும் தவறுகளேயன்றி வேறல்ல. அத்தகைய பாவங்கட்காக அவன் இம்மையிலோ மறுமையிலோ துயருழக்க வேண்டியவனாவான் என்பதும் உண்மையே. ஆயினும், அம்மாதிரியான துன்பங்கட்கு உட்பட்டு வரவர அறிவு மிகுந்து, பல பிறப்பிடை இம்மாதிரி உழன்று, முடிவில் தன்னிடத்து அடங்கியுள்ள தெய்வத் தன்மையை முற்றும் வெளிப்படுத்துகிறான். ஒவ்வொருவரும் இந்த ஞானப்பேற்றை அடைய வேண்டியவரேயாவர்.

ஆதலால் பாவிகளைக் கதியற்றவரெனல் பொருந்தாது. அவர்கள் மீது அனுதாபங்காட்டி, அறியாமையினின்றும் அவர்களைக் கரையேற்ற உதவி புரிதல் வேண்டும்.

உண்மை யாதெனில், மனிதன் அகண்ட பரம்பொருளோடு, தான் ஒன்றுவதை உணராது, தனது தூல உடலிலும் தூல உலகிலும் பற்றுள்ளவனாயிருக்கும்வரை, அவன் பந்த நிலையில் இருந்துகொண்டேயிருப்பான். அவன் மனித வடிவத்திற் கிட்டத்தட்ட ஒரு விலங்காவான். ஆயினும் இந்துமதம் அவனை என்றென்றும் நாசமடைந்தவனாவான் என்பதில்லை. அவனை அது படிப்படியாக மேலேற்றி வந்து, அவனிடத்துள்ள விலங்குத் தன்மை முற்றும் மறைந்து, அதற்குப் பதிலாகத் தெய்வத்தன்மை திகழும்வரை உதவுகின்றது.

இச் சீர்சான்ற மாற்றத்தை விரைவில் நிகழுமாறு செய்வதே இந்துமதத்தின்படி மனித வாழ்க்கையின் நோக்கமாகும். ஏனைய ஒவ்வொன்றும் இந்த முடிவை யடைதற்கு ஓர் உபாயமாகவே கருதப்படுகின்றது. புலமையும் செல்வமும் மக்கட்பேறும், ஞான வாழ்க்கையில் முன்னேறுவதற்குத் துணை செய்யும் வகையில், முக்கியமாகாத மதிப்புடையவையே யாம். அவை முக்கியமான நோக்கத்தை நிறைவேற்ற உதவாதனவாயின், அற்பமேயாம். ஞான வாழ்க்கையை இடர்ப்படுத்தும் எதுவும் பூரண நிலையை நோக்கி ஒருவன் முன்னேறுவதைத் தடை செய்தற்கே ஏதுவாம்.

ஆயினும், மனிதன் உடற்பற்றுக்கு வசமாகி, ஐம்புலன்களால் அறியப்படும் பொருள்களில் நாட்டமுள்ளவனாகும் வரை, வாழ்க்கையில் நிகழ்ச்சிகள் மாறும்போதெல்லாம் அடிபட்டுத் திக்கற்றுத் திகைக்கும் ஓர் அற்பமான எளிய பிராணியாவான். அவன் தனது உண்மையான வடிவமான ஆத்மாவின் பெருமையை உணராதவன். அதன் நிழலையே தனது ஆன்மாவாக மயங்கித் தழுவுபவன். மனிதன் தன்னைத் தூல உடலோடும் இந்திரியங்களோடும் ஒன்றுபடுத்திக்

கொண்டு, இந்நிலையில் ஆசைகட்கு அடிமை பூண்டவனாகத் தோன்றுகிறான். சினம், பகைமை, காமம், அகந்தை என்பவற்றுக்கும், அனைத்திற்கும் மேலாகச் சுயநலனுக்கும் ஆட்பட்டவனாகி, அவன் தனது உண்மையான இயல்பைப் பாழ்படுத்திக் காட்டுகிறான். அவனது தெய்விக ஆன்மாவை அவனது கலங்கிய மனது மறைத்துவிடுகிறது. தான் என்று அவன் உரிமை பாராட்டும் பொருள் அவனது உண்மையான ஆன்ம இயல்பின் பண்படாத குறுகிய தாழ்ந்த நிலைகுலைந்த பிரதி பிம்பமேயாம்.

இதுதான் மனிதனது வெளித் தோற்றமாயுள்ள தாழ்ந்த அகங்கார இயல்பு; இதுவே ஆசைகள் செறியும் நிலையில் அவனைக் கட்டுறுத்தி வைத்து, இம்மையிலும் மறுமையிலும் தொடர்ந்துவரும் பல பிறப்புகள் வழியாகச் சுழலச் செய்கிறது. இதுவே மரத்தின் மீதே சுவையுள்ள பழங்களை அயின்றுவரும் பறவையாகும்; இதுவே இருளென வருணிக்கப்பட்டுள்ள பொருளாகும். [அத்தியாயம் 19-ஐப் பார்க்கவும்,] எனினும், தக்க ஞானசாதனப் பயிற்சியால் இப்பொய்த் தோற்றமாயுள்ள தாழ்ந்த அகங்காரம் நாளடைவில் மறைகிறது. மனிதனை ஐம்பொறிகளால் அறியப்படும் பொருள்களும் புலன்களும் விடாப்பிடியாகப் பற்றிக்கொண்டுள்ள பிடிப்பினின்றும் விடுவித்து, உள்ளே உலவாத சாந்தி குடிகொண்டிருக்கும் பிரதேசத்தில் அவனைப் பிரதிஷ்டை செய்கிறது.

ஞான சாதனத்தின் ஸாரமாவது, இந்தத் தாழ்ந்த இயல்பாகிய அகங்காரத்தை-அறியாமையின் அரணாகிய இதனை—தகர்த்தெறிந்து, இல்லாதொழிப்பதே யாகும். யாண்டும் மாறியும் புத்துருவங்கொண்டும் எழும் ஆசைகள் வடிவமான அதன் தேவதைகளைக் கடிதலாலே (விலக்குவதாலே) அக்காரியத்தை இயற்றல் வேண்டும். ஆதலால் ஆசைகளை விடுத்தலே (அவா வறுத்தலே) ஞான சாதனத்

தின் அடிப்படைத் தேவையாகும். அதுவே ஞான வாழ்விற்கு மூச்சாவது. அதன் வாயிலாக மட்டுமே அமர நிலையினை எய்தலாகும், மனிதனிடத்து அமர்ந்துள்ள தெய்வத் தன்மையை வெளிப்படுத்தக் கூடும். வேறுவழி யாதொன்றும் இல்லை. முழுத்துறவே இலக்ஷியம்; அதன் மூலமே மனிதன் இறைவனும் தானும் ஒன்ருவதை அறியமுடியும். இதை ஒரே நாளில் இயற்ற வொண்ணுதென்பதும், அனைவரும் ஒரே காலத்தில் இயற்ற வொண்ணுது என்பதும் உண்மையே. இதுவே இலக்ஷியம் என்பதில் ஐயமில்லை; ஆனல் இதனை ஒவ்வொருவனும், தான் நிற்கும் இடத்தினின்றே தொடங்கிப் படிப்படியாக அடைதல் வேண்டும். இந்திரியங்களையும் மனதையும் படிப்படியாகவே அடக்கி வரவேண்டும். இக்காரணம் பற்றியே பிரவர்த்தி மார்க்கம் ஆசைகளைப் பின்பற்றும் முறையையும் ஓர் எல்லைக்குள் அனுமதிக்கின்றது.

ஆனுலும், பூரண நிலையெனும் குறிக்கோளை (முடிவை) ஆசைகளை அறவே துறத்தல் என்னும் வழியொன்ருல்தான் அடையலாகும். உள்ளேயிருக்கும் தெய்விக ஆன்மா முற்றும் தன்னை வெளிப்படுத்தும்போது, ஒருவன் தனக்கு அகத்தும் புறத்தும் உள்ள இயற்கையைப் பூரணமாக அடக்கல் வேண்டும். இவ்வடக்கம் மன அடக்கத்தாலோ (இராஜ யோகம்), தத்துவ விசாரணையாலோ (ஞானயோகம்), வழிபாட்டினுலோ (பக்தியோகம்), கருமத்தாலோ (கரும யோகம்) இவற்றில் ஒன்றுக்கு மேற்பட்டவற்றை ஒன்ரு யிணைத்தோ பெறலாகும். இதுவே உண்மையாக மதத்தின் முழுமையும். இந்து தருமம், அதன் கோயில்கள் பிரதிமைகள் கிரியைகள் புராண கதைகள் என்பனவற்ருேடும், ஞானக் கருத்துகளில் உள்ள பலவகை வண்ணங்களோடும் தவருது சுட்டிக் காட்டிக் கொண்டிருப்பது இதனையே என்க.

ஆக, இந்துவிற்கு மதம் என்பது பேரளவிற்கு அனுபவ சம்பந்தமுற்ற ஒரு காரியமேயாம். அது அவனது வாழ்வு முழுவதையும் அடக்கியாள வேண்டும் என்பதே கருத்து. அது மனிதனது வாழ்வையும் ஒழுக்கத்தையும் ஒழுங்குபடுத்திவந்து, அவன் புறப்படும் இடத்திலிருந்து தெய்வத்தன்மையை நோக்கி இயன்றவரை முன்செல்லும் திறமையை அளிக்கவேண்டும். மதத்தை அனுபவத்திற்குக் கொண்டு வருவதற்காக ஏற்பட்ட பயிற்சித் திட்டங்கள் இக்காரணத்தால் அவனுக்கு இயல்பாயுள்ள தேவைகட்கு ஏற்றனவாய், அவனது ஞான முதிர்ச்சிக்குரிய நிலையினைச் சார்ந்தனவாய் அமைதல் கட்டாயம் ஆகும். இவை அவனது ருசிக்கும் திறமைக்கும் இயல்பிற்கும் ஒத்தவாறு இருத்தல் வேண்டும். ஒவ்வொருவனும் தனக்கு மிக நன்ருகப் பொருந்தும் திட்டத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும். இதுவே 'அதிகாரி வாதம்'—'அவனவனுக்கு அவனவனது திறமைக்கு ஏற்றவாறு'—என்னும் கொள்கை.

இது சம்பந்தமாக இந்து சாஸ்திரங்கள் பலரறியக் கூறும் இன்னெரு முக்கிய உண்மையாவது: ஒரு பிறவியில் அடையும் ஞான முன்னேற்றம் நஷ்டமாவதில்லையென்பது. ஒரு மனிதன் ஒரு பிறவியின் முடிவில் அடையும் நிலை மறு பிறவியின் ஆரம்பநிலையாகின்றது; முன்னரே அடைந்த ஒன்றை எதுவும் அழிக்க வொண்ணுது. தீய செயல்கள் துயரங்களை உண்டாக்கி, அவ்வாறு போக்கப்படுகின்றன; மேலும் சிறிது நேரம் அவை ஒருவனது பார்வையை மறைத்து, ஞான முன்னேற்றத்திற்குரிய தூண்டுதலை அடக்கி வைக்கும்; ஆனுலும் ஞான சாதனத்தால் எய்தப் பெற்ற ஒன்றை அவை நிலையாக அழிக்க முடியாதன. நன்மையும் தீமையும் இந்துமதப்படி ஒன்றையொன்று எதிர்த்து அழிப்பனவல்ல; ஒவ்வொன்றும் தனித்தனியே அததற்குரிய பலன்களைக் கொடுக்கும். ஆன்ம ஞானம் உதித்தபின் ஒருவன் அவ்விரண்டையும் தாண்டி அப்பாற் செல்கிருன்.

இயற்கையில் ஈசன் ஊடுருவியிருக்கும் தன்மை இந்து மதத்தினைச் சார்ந்த உட்பிரிவினர் அனைவராலும் ஒப்புக் கொள்ளப்படும் இன்னொரு முக்கியமான பாரமார்த்திக உண்மையாகும். இயற்கையின் மேற்புறத்திலே காணப் படும் பலவகைப்பட்ட மாற்றங்கட்கு அடியிலே ஒருமை கடவுள் வடிவமாயுள்ளது. முத்துமாலை யொன்றில் உள்ள முத்துக்களுக்கு ஊடே செல்லும் கயிறுபோல அவர் எல் லாப் பொருள்கட்கும் ஊடே செல்கிறார். ஈசரே இயற்கை யில் உள்ள எண்ணற்ற ஒழிவற்ற பொருள்களாகத் தம்மை வெளிப்படுத்துகிறார்; அவற்றை யெல்லாம் 'அந்தர்யாமி' வடிவிலே உண்ணின்று அடக்கியாண்டு வருதலால் அவர் இயற்கையிலுள்ள இணையற்ற கூட்டிசையை உண்டாக்கி வருகின்றனர்.

பலவற்றுள் ஒருமையே இயற்கையின் அடிப்படை விதி யென இந்துக்களால் கருதப்படுகின்றது. இயற்கையிலுள்ள கூட்டிசையை உண்டாக்கப் பலவாந்தன்மை ஒருமையெனும் இருபகுதிகளின் அவசியத்தையும் தனித் தனித் தொழிலையும் மதிக்க அவர்கள் கற்றுக் கொள்கின்றனர். பலவாந்தன்மை காரணமின்றித் தற்செயலாக நிகழ்ந்ததொன்றன்று. அதற்கு ஒரு கருத்தும் மதிப்பும் உண்டு. ஈசன் தன்னை வெளிப்படுத்துதற்காகக் கொள்ளும் நாட்டத்தினின்றும் அது உதிக்கின்றது. "ஒன்றாயுள்ள நான் பலவாகட்டும்" என்னும் ஈசனது எல்லாம் வல்ல சங்கற்பமே எண்ணிறந்த பலவகையான தோற்றங்களை உண்டாக்குவதன் மூலம் நிறைவேறுகின்றது. ஈசனது பிரகிருதி (அண்டத்திலுள்ள சக்தி) ஓய்வின்றிப் புதுப் புது வடிவங்களைத் தோற்றுவிக் கும் சக்தியை உள்ளடக்கிக் கொண்டிருக்கின்றது. இக்கார ணம் பற்றியே இயற்கையில் பலவாந்தன்மை யெனும் முத் திரை பொறிக்கப்பட்டுள்ளது. ஒரே மரத்திலும் எந்த இரண்டு இலைகளும் எல்லா விதத்திலும் ஒன்று போலிருப்ப தில்லை.

உண்மை யுரைக்கின், வெளிப்புறத்துள்ள வேற்று மையை அகத்தேயுள்ள ஈசனது ஒருமை சிருட்டித்தும்

அடக்கியாண்டும் வருவதனலன்ரே இயற்கையிலே அழகும் ஒழுங்கும் கூட்டிசையின் நலமும் குலவுகின்றன. அகத்தே யுள்ள ஒற்றுமையை உணர்வோரே வேறெவரையும்விட அதிகமாக இந்த அழகை அனுபவிப்பார். அத்தகையாரது நெஞ்சத்தினின்றுந்தான் அனைத்துயிர்மீதும் ஒக்கப்பாயும் அன்பும், அமைதியும் தூய்மையும் ஆர்ந்த ஆனந்தமும் பெருகி வழிந்து, உலக முழுதும் பரவி, அதனைப் பரலோக மாக மாற்றிவிடும்.

இயற்கையிலிருந்து ஒரு பாடம் கற்றுக்கொள்ளுமாறு நமக்கு இந்துமதம் போதிக்கின்றது. தனி வாழ்க்கையிலும் ஸமூக வாழ்க்கையிலும், நமது முயற்சியும் கவனமும் செல் லும் எல்லாத் துறைகளிலும் நேரும் எல்லா வித சங்கடங் களையும் தீர்த்தற்கு, வேற்றுமைக்குள் ஒற்றுமை-பலவற் றுள் ஒருமை—என்னும் இவ்வொழுங்கையே விடாது பற்று மாறு நமக்கு இந்துமதம் புத்திமதியை அருள்கிறது. இவை யெல்லாவற்றிலும், அடிப்படையாயுள்ள ஒற்றுமையை மற வாது இயன்றவரை எத்தனையோ வேற்றுமைகட்கு இடங் கொடுத்தல் நமக்கு ஒன்ருகும். இனிமையற்ற செயற்கைப் பொருள் போன்ற, அருவருப்பான ஒரே தன்மைக்குப் பதி லாக இவ்வண்ணம் இயற்கையிற் காணும் தெய்விக மாதி ரியை நாம் பின்பற்றி ஒழுக வேண்டும். பலவகைப்பட்ட பகுதிகள் ஒருங்கே இணைந்து ஒத்தமைதலே இயற்கையிற் காணும் தெய்விக நியதியாம், மாருத ஒரு படித்தான தன்மை யன்று.

ஒவ்வோர் ஆன்மாவும் உள்ளொடுங்கிய தெய்வத் தன்மை வாய்ந்தது. ஒரு மனிதனுக்கும் மற்ெருருவனுக்கும் உள்ள வேறுபாடு மேற்புறத்தே மட்டும் அமைந்து கிடப்ப தொன்ருகும். உள்ளுக்குள்ளே நிலையான யாண்டுமுள்ள தெய்விக ஒருமையே நிலவுகின்றது. இயற்கையிலே மேற் புறத்தே நாம் பிறக்கிரேம். அவ்வியற்கையின் அடியிலே மூழ்கி, பரமாத்மா என்னும் நடுப் பொருளையடைந்து நாம்

முக்தி பெற வேண்டும். இதுவே விளையாட்டு; இதை விளையாடி முடித்தல் வேண்டும், பரம்பொருளை அடைந்ததும் இவ்விளையாட்டு முடிந்துவிடும்.

ஆதலால், பிறமக்களோடு உறவாடும்போது ஒருமையைத் தழுவி நிற்கும் எதுவும் நமது ஞான முன்னேற்றத்திற்கு நலமுடையதாகும். தன்னயமற்ற அன்பு ஒருமையை உண்டுபண்ணுவது; ஆதலின் அது நமக்கு நன்றாகும். இக்காரணம் பற்றியே நமது சகோதர மக்கட்குத் தன்னலமற்ற பணியை இயற்றுதல் வாயிலாக அத்தகைய அன்பை வளர்த்தல் வேண்டும் என நாம் வேண்டப்படுகின்றோம். தெய்விக ஒருமையெனும் இலக்ஷியத்தை நோக்கிச் செல்ல அது உறுதியாகத் துணை செய்யும். அத்தகைய பணியால் நமது நெஞ்சுகளை விரியச் செய்து, உலக முழுவதிலும் நமது ஆன்மா பரந்துள்ளது என்னும் உணர்ச்சியெழும்வரை நாம் விரிவடைந்து கொண்டே செல்லவேண்டும். உண்மைகூறின், நமது நெஞ்சை விரியச் செய்தலொன்றே ஞான வாழ்க்கையிலுள்ள இன்னிசையாகும்.

இந்துக்கள் துறவாலும் தொண்டாலும் நமது நெஞ்சுகளை விரியச் செய்யுமாறு போதிக்கப்படுகிறார்கள். இதுவே அவர்களுடைய தருமம் (மதம்). இந்துவின் வாழ்க்கை முறைத் திட்டத்திலே தன்னயமற்ற தொண்டு எனும் இத்தருமமே தலைசிறந்த ஓர் அம்சமாம். அவர்களுடைய சமூக வாழ்வுக் கட்டிடத்திற்கு ஆதாரக் கல்லாய் அமைவதும் அதுவே. ஒருவன் தனது பண்படாத தாழ்ந்த இயல்பைத் தாண்டிச் செல்வதற்கு அது துணை செய்யுமாதலின், அனைவர்க்கும் சித்த சுத்தியை எய்துவதற்கு ஒரு வலிய சாதனமாக விதிக்கப்பட்டுள்ளது. அவனவனுடைய சுய தருமங்களை—விதிக்கப்பட்டுள்ள கடமைகளை—இயற்றுதல் வடிவமாக அத்தகைய தருமத்தைத் தொடர்ந்து பின்பற்றுதலே இந்துவின் வாழ்வு எனக் கருதப்படுகிறது.

மனிதர்கட்குள் ஒருவர்க்கொருவர் கொள்ளும் தொடர்பு, கடமைகள் வாயிலாக வெளியிடப்படுவதன்றி, உரிமைகள் வாயிலாகவன்று. உரிமைகளை வற்புறுத்துத லும், அதனல் விளையும் அதிகாரப் போட்டியும் உரிமைப் போட்டியும் பன்முறை காமத்தினின்றும் செருக்கினின்றும் தடிப்புற்ற தன்னயத்தினின்றும் எழுகின்றன. ஆதலால் மனிதனை ஞான நலங்குன்றச் செய்து இழிவாக்கும் ஆபத்து அதனிடத்து உண்டு. இக்காரணம் பற்றியே, உண்மையா கவே நீதியான ஒரு காரியத்திற்காக முன்னின்று எதிர்த்தலை இந்துக்கட்கு சாஸ்திரங்கள் நல்லதென எடுத்துக் காட்டி யிருப்பினும், அவர்கட்கு உரிமைகளைப்பற்றிய கவனத்தி லும் அதிகமாகக் கடமைகளைப் பற்றிய கவனம் வற்புறுத்தப் பட்டுள்ளது. எவ்வாறெனில், விதிக்கப்பட்டுள்ள கடமை களை இயற்றுதலால் தான் ஒருவன் தனது நெஞ்சை விரியச் செய்து, ஞான முன்னேற்றத்தை அடைகிருன். இக்கார ணத்தால் ஒவ்வொருவர்க்கும் ஏற்பட்டுள்ள இக்கடமைகள் அவரவருடைய தருமம் எனப்படும். ஆக, பெற்றோரும் அவர்களுடைய குழந்தைகளும், கணவனும் மனைவியும், அரச னும் குடிகளும், அவரவர்க்குரிய தனித்தனியான தருமங்கள் (கடமைகள்) மூலம் ஒருவர்க்கொருவர் தொடர்புடையவரா வார். இன்னும் ஒவ்வொருவர்க்கும் அவரது வாழ்க்கை நிலைக்கும் (ஆசிரமத்திற்கும்) ஸமூகத்தில் உள்ள பதவிக்கும் (வருணத்திற்கும்) ஏற்றவாறு அவரவரது ஸ்வதருமம் எனப் படும் கடமைகளின் தொகுதியும் உண்டு. இக்கடமைகளில் ஒவ்வொன்றின் படிக்கும் ஒருவன் தனது தாழ்ந்த இயல்பிற் குரிய தீவிரமான சுய நலத்தால் வற்புறுத்திப் பெற விரும் பும் தேவைகளைப் புறக்கணித்துப் பிறர்க்குப் பணி செய்ய வேண்டியதாகின்றது. இவ்வாறு துறவாலும் பணியாலும் ஒவ்வொரு இந்துவும் தனது நெஞ்சை விரியச் செய்து, ஒழுங் காகப் பூரணமென்னும் இலக்ஷியத்தை நோக்கி முன் செல்ல வேண்டும். எல்லா ஆசைகளையும் துறந்து, இறைவனுக்

குரிய வழிபாடாக மட்டும் கருதி ஒருவன் தனக்குரிய கடமை களை இயற்றி வரும்போது, அவன் இலக்ஷியத்தை விரைவாக அடைகின்றான். (ஒப்பிடுக: கீதை 18–46). இவ்வாறு, ஓர் இந்துவின் வாழ்வு முழுவதும் சற்றும் பண்படாத நிலையிலிருந்து தொடங்கி மிகவுயர்ந்த நிலைவரை துறவும் பணியும் படிப்படியாக ஓங்கி வரும்படி அமைக்கப்பட்ட ஒரு திட்டமாக முடிகிறது; இத்திட்டத்தைப் பின்பற்றுவதனால் பலவகைப்பட்ட பொருள்கட்கும் நடுவே அமர்ந்துள்ள தெய்விக ஒருமைக் காட்சியைப் பெறும் உயர்வை மெல்லமெல்ல எய்துகிறான்.

பகைமையும், பொறாமையும், தன்னயமும், ஒரு மனிதனுக்கும் இன்னொருவனுக்கும் 'இடையேயுள்ள வேற்றுமையை வற்புறுத்தி, பேதத்தையும் பிளவையும் விளைக்கும்; மற்றவையாவும் எதிர் கோடியிலே உள்ளன, வாழ்க்கையை ஒரு குறுகிய தன்னயமிக்க நிலையிலிருந்து நோக்குவதினால் உண்டாவன அவையனைத்தும்; அந்நிலை நெஞ்சம் சுருங்கியிருப்பதற்கு அறிகுறியாகின்றது. மனிதன் தனது மெய்யான தெய்விக இயல்பை அறியாமையால் தனது தண்ணிய இயல்பைப் பேதமையினால் மதித்தொழுகும்போது, அவனது நெஞ்சு அம்மாதிரியான சுருக்கத்தை அடைகிறது. இது அவனது ஞான வாழ்க்கைக்கு நஞ்சனையதாகின்றது; ஆதலால் எல்லா வழியாலும் ஒழிக்கத் தக்கதாகும். இக்காரணத்தால் காமமும் கோபமும் பேராசையும், மோகமும், மதமும், பொறாமையும் இந்துக்களால் பகைவர்களாகக் (ரிபு எனக்) கருதப்படுகின்றன.

வெவ்வேறு வகைப்பட்ட பல பொருள்கட்குள்ளே நித்தியமாயுள்ள ஒரு பரம்பொருளைக் காணுமாறு ஒருவன் ஓய்வின்றி, முரண்பாடின்றி முயன்றுவரல் வேண்டும். இக்கொள்கையே இந்துவின் வாழ்க்கையிலே கேட்கப்படும் தலைசிறந்த சுருதியாகும்; அவ்வாழ்க்கையின் உயிர்நிலையாகும். இந்த மனப்பான்மை ஒன்றாலேயே இந்துவின் பண்பாட்டுக்

குரிய தனிச் சிறப்புகளெல்லாம் அமையலாயின. பண்டைய இந்து ஜன ஸமூகத்திற்குள்ளே புத்துயிரை ஊட்டியது இது; நீண்டதூரம் கைகளை விரித்துநீட்டி, பல அன்னிய சாதியரையும் அவர்களுடைய கொள்கைகளையும் தழுவி உள்ளடக்கிக் கொண்டு வாழும் திறமையை ஸமூகத்திற்கு அளித்ததும் இதுவே. வாளையோ நெருப்பையோ துணைக் கொண்டு இந்துக்கள் தமது பண்பாட்டை என்றும் பரப்பிய வரல்லர். தூய்மையாலும் ஈசனைக் காணுவதாலும் பிறக் கும், எங்கும் பரந்த அன்பே அவர்களுடைய ஒரே ஆயுத மாயிற்று. பலவற்றுள்ளும் ஒருமையைக் காணும் இக் காட்சியின் திறனே, முதலில் இந்நாட்டுப் பழங்குடிகளையும், பின்னர் பாக்டிரிய கிரேக்கர்களையும் ஹூனர்களையும் சாகர் களையும், தென்கிழக்கு ஆசியாவைச் சார்ந்த வெகு தொலைவி லுள்ள நாடுகளின் பலவகை மக்களையும் பண்பாட்டில் மேம் பாடடையும்படிச் செய்து உயர்த்தியது; பின்னர்த் தம் மோடு ஒன்றுயிணைத்துக் கொண்டு தமது இனத்தை விரி வாக்கும் திறமையை அவர்கட்கு அளித்தது. உண்மை யுரைக்கின், இக்காட்சியாலே இந்துமதம் தனது நலமிக்க பண்பாட்டின் மாட்சியை ஆசியா முழுவதும் அனுபவத்தில் உணரும்படிச் செய்யும் திறமையைப் பெற்றது; ஒருகால் மேற்றிசை நாகரிகத்தின் பிறப்பிடமாகிய கிரேக்க நாடும் அதனை உணர்ந்திருத்தல் கூடும் என்றும் கூறலாகும்.

இந்துமதத்தின் ஆட்சி பரவிவந்த முறையை எளிதாக உணரலாகும். அனைத்திற்கும் அடிப்படையான ஒருமை யின் காட்சியால் பண்டைய இந்துக்கட்கு வியத்தகும் பரந்த பார்வையொன்று உண்டாகலாயிற்று; அதனல் அவர்கட் குப் பலவகைப்பட்ட இனங்களைச் சார்ந்த மக்களிடத்தும் அன்பு செலுத்தவும், அவர்களோடு அளவளாவவும், அவர் களுடைய வாழ்க்கையையும் நினைவுகளையும் உயர்த்தவும் திறன் விளைந்தது. அன்னியரை அழிக்கவோ, அவர்களு டைய பண்பாட்டுச் செல்வத்தைப் பாழ்படுத்தவோ கருது

தல் அவர்கட்கு இயலாத காரியமாயிற்று. மக்களில் ஒவ்வொரு சாதியும் பகவானாலே தோற்றுவிக்கப்பட்ட ஒரு வகுப்பன்றோ? அது ஒரு புனிதமான பொருளன்றோ? அதன் பண்பாட்டுக் காணியும், மனிதனின் பண்பாடு பல நூற்றாண்டுகளாக முதிர்ந்து வந்ததின் பயனாக உண்டாகிய ஒரு குறிப்பிட்ட தரத்தினை மட்டும் குறிக்கும் ஒரு வகை வளர்ச்சிநிலை தானே? அன்னியர்களில் ஒவ்வொரு வகுப்பினையும், அததற்குரிய பண்பாட்டுக் காணியையும், அது எத்துணைப் பண்படாத நிலைமையில் இருப்பினும் அதன் புனிதத் தன்மையையும் மதிப்பையும் சீர்தூக்கி யுணரும் ஞானமுடையரா யிருந்தனர் நம்மவர்.

இக்காரணம் பற்றியே இந்துக்கள் எல்லாவற்றையும் அவையவை நின்ற நிலையிலே அங்கிரித்து, மெதுவாகத் திண்டுதல் மாத்திரத்தால் அவற்றுக்கு மேல்நோக்கிச் செல்லும் இயல்பை அளிக்கலானார். பலவகைப்பட்ட இவ்வகுப்பினர்க்கும் இந்துமதத்தின் ஸாரத்தைமட்டும் ஊட்டி, அவர்கட்கும் இந்துமதத்தின் எல்லைக்குள் ஓர் இடத்தை அளித்து வந்தனர். அவர்களுடைய மத அனுஷ்டானங்களையும் ஸமூக வழக்கங்களையும் இந்துமதத்தின் அடிப்படைக் கொள்கைகட்கு ஏற்றவாறு ஒத்து அமையுமாறு செய்து, அவற்றை அவ்வண்ணமே இந்து மதத்திற்குட் புகுத்தி விட்டனர். இவ்விதமாகத்தான் வேறுபட்ட மத அனுஷ்டானங்களும் வாழ்வு முறைகளும் இந்துமதத்திற்குட் புகுந்தனவாக, நாளடைவில் அதனைக் கிட்டத்தட்ட எல்லா மதங்கட்கும் ஒரு சுருக்கம் போன்று அமையும்படி ஆக்கிற்று. அந்நாளில் இந்துமதத்திற்கு அன்னிய அம்சங்களை ஒன்றாய் இணைத்துத் தன்மய மாக்கிக்கொண்டு விரிவடையும் திறமை வாய்ந்திருந்தது. இதுவே உயிரோடு வாழ்ந்துவருவதற்கு அடையாளம் என்பது உறுதி. பலவற்றுள் ஒருமையைக் காணும் காட்சி இந்துமக்கட்கு மங்காதிருக்கும் வரை இந்து மதம் சுறுசுறுப்பாக வாழ்ந்து வந்ததும் உண்மையேயாம்.

இக்காட்சி மங்கிய போதெல்லாம், இந்துக்கள் மந்த நிலையில் மூழ்கினர்; அவர்களுடைய சுறுசுறுப்பான மதம் ஏறக்குறைய இறக்கும் தருவாயிலிருந்தது போலாயிற்று. அடிப்படையிலிருந்த தெய்விக ஒருமையை மறந்து இந்துக்கள் அத்தகைய ஞான வறட்சிக் காலங்களில் குறுகிய நெஞ்சும், மதவெறியும், கட்சி மனப்பான்மையும் உடையராய் தமது சொந்த ஸமூகத்தின் வகுப்புகளையும் உட்பிரிவுகளையும் வற்புறுத்தி, அன்னியர்களை எல்லாம் விலக்கலாயினர். அதிகாரப் போட்டியும் உரிமைப் போட்டியும் பின்தொடர, பகையும் தீங்கிழைக்கும் இயல்பும் தோன்றலாயின. ஞான முன்னேற்றத்திற்கு அடிப்படையான தேவைகளான துறவிலும், தொண்டிலும் இருந்த ஊற்றத்தைக் கைவிட்டு, அவர்கள் மதத்தின் வெளியாசாரங்களில் மட்டும் ஆழ்ந்தவர்கள் ஆனார்கள். இவ்வண்ணம் பண்டைய கருத்துகளின்றும் இலக்கியங்களினின்றும் மேலும் மேலும் வெகு தூரம் விலகி, அம்மாதிரியான காலங்களில் தங்களுடைய மேன்மையுள்ள விரிந்த மதத்தினைப் பாழ்படுத்தினர்.

அத்தகைய காலங்கள் நீடித்து நில்லாது போயினமை இந்தியாவின் பாக்கியமாயிற்று. அக்காலங்கட்குப்பின் ஞானம் பொங்கியெழுந்து பரவும் காலங்கள் வருவதுண்டு. இன்று அம்மாதிரியான நற்காலமொன்று நம் எதிரே நிற்கக் காண்கின்றோம். நம் பண்பாடு வடிந்துவந்த காலம் சற்று முன்புதான் கழியலாயிற்று; மீண்டும் ஞானப் பேரலையொன்று வெகுதொலையில் பொங்கியெழுந்து வந்து கொண்டிருக்கின்றது. மந்தமாயிருந்த காலம் கழிய, இப்போது இந்துக்கள் தமது மதத்தின் அடிப்படைக் கொள்கைகளின் அருமை பெருமைகளை மீண்டும் உணரத் தொடங்கிவிட்டனர். இயல்பாகவே இந்துமதம் தனது முன்னைய சுறுசுறுப்பான நிலையை அடைந்துவிட்டதற்குத் தெளிவான அடையாளங்களை வெளிக்காட்டத் தொடங்கிவிட்டது.

இந்நாளைய இந்துக்கள் உபநிடதங்களின் உயிரூட்டும் உபதேசங்களை மீண்டும் செவிசாய்த்துக் கேட்டு வருகின்றனர். பல நூற்றுண்டுகளாக நிகழ்ந்து வந்த சமயச் சண்டை சாதிச் சண்டைகளால் ஏற்பட்ட கூச்சலுக்கும் ஆரவாரத்திற்கும் மேலே உரத்த கனத்த குரலில், பண்டைய இருடியர் வாய்ப்பறையறைந்து கூறியுள்ள பின்வரும் உபதேசம் முழங்கிக் கொண்டிருக்கிறது: "இங்கிலையற்ற உலகிலுள்ள எதுவும் ஈசனலே வியாபிக்கப்பட்டுள்ளது (என்று தியானிக்கப்பட வேண்டும்). (தாழ்ந்த இயல்பைத்) துறந்து அவையனைத்தையும் அனுபவிப்பாயாக. பிறருடைய சொத்தில் இச்சை வையாதே" (ஈசா–உபநி-1). ஒரே ஈசன் எல்லாவற்றிலும், எல்லாவற்றின் வழியாக ஊடுருவிப் பரந்திருப்பதாகவும் காணப்படவேண்டும். இவ்வாருக இந்துக்கள், பலவற்றுள்ளும் ஒருமையைக் காணுதல் வாயிலாகத் தம்மைச் சூழ்ந்துள்ள வேற்றுமைகள் பலவற்றிலும் ஒற்றுமை நயத்தை நாடும் தமது பண்டைய உபதேசத்தைக் கடைப்பிடித்து வாழ்தற்குரிய திறனை மீண்டும் ஊட்டப் பெற்று வருகின்றனர். மனிதனது கவனத்தைக் கவரும் ஒவ்வொரு துறையிலும் தென்படும் வேற்றுமைகளின் பயனையும் நயத்தையும் பாராட்டும் அளவிற்கு அவர்கள் ஊக்கப்பட்டு வருகின்றனர்.

மதத்துறையில் உள்ள வேற்றுமை மனிதனது பண்பாட்டின் வளத்தைப் பெருக்குதற்கு ஏற்ற ஓர் ஏதுவாகவே கருதப்படுகின்றது; ஒரே சட்டை அனைவர்க்கும் பொருத்தமாக இருக்க இயலாதது போன்று, ஒரே சமயமும் அனைவர்க்கும் பொருந்துதல் ஒண்ணததாகும். ஒரு குடும்பத்திலே அதன் அங்கத்தினரான ஒவ்வொருவர்க்கும் அவரவரது தரத்திற்கு ஏற்றவாறு வெவ்வேறு உடைகளை அளிக்க வேண்டியிருத்தல்போல், மிகப் பெரிய மனிதக் குடும்பத்திலும் அதில் அடங்கிய பற்பல வகுப்பினர்க்கும் அவரவரது தனி ருசிகட்கும் திறமைகட்கும் தக்கவாறு

வெவ்வேறு சமயங்களை அமைத்தளித்தலும் வேண்டியதாகி கிறது. மக்களின் மனப் போக்குகளிலும் திறமைகளிலும் உள்ள வேறுபாடுகளை இயற்கையிலுள்ள, ஒழிக்கவொண்ணாத ஓர் உண்மையாக ஒப்புக் கொள்ளலும், அவற்றுக்குத் தக்கவாறு தனித்தனி ஏற்பாடுகளைச் செய்தலும் அவசியமேயாகின்றன. பற்பல சமயங்களை உண்டாக்கியிருப்பதும் இந்த அவசியத்தை உணர்ந்தேயாம். வேறுபட்ட பல சமயங்கள் உலகில் நிலவி வருவதில் அடங்கிய உட்கருத்தும் இதுவே. அவையொன்றோடொன்று மேன்மைபற்றிப் போராடுவதற்கு யாதொரு காரணமும் இல்லை. ஒவ்வொன்றும் பூரணநிலை யென்னும் முடிவை அடைதற்குரிய சரியான நெறியேயாம். ஒவ்வொன்றும் மனிதர்கட்குள் ஒரு குறிப்பிட்ட வகுப்பினர்க்குட் பயன்படுவதாகின்றது. மீண்டும் மீண்டும் இவ்வுண்மையை இந்துமத ஞானியரும் குரவரும் போதித்து வந்துள்ளனர். அதை மறந்து சிறிது காலங்கழித்த பின், இந்துக்கள் அதே உண்மையை ஸ்ரீ ராமகிருஷ்ணரது வாழ்க்கையாலும் உபதேசங்களாலும் மீண்டும் உணர்ந்து வருகின்றனர். ஒவ்வொரு வகுப்பினரும் தமக்குரிய சமய நெறியை விடாது பற்றிவர வேண்டும் என்பதையும், இதே சமயம் மற்ற சமயங்களையும் பணிவோடும் பக்தியோடும் நோக்கி தாம் சேர நினைக்கும் அதே முடிவான இடத்தை அடைதற்காகப் பண்டைய காலங்களிற் கண்டுபிடிக்கப்பட்டுள்ள பல திறப்பட்ட நெறிகளாக அவற்றைக் கருதவேண்டும் என்பதையும், உறுதியாக விரைந்து உணர்ந்து வருகின்றனர். இத்துறையிலும் பலவற்றுள் ஒருமையைக் காணும் காட்சி எல்லாவித சாதிச் சண்டை சமயச் சண்டைகட்கும் ஒரு முடிவை உண்டுபண்ணும் என்பது திண்ணம்.

ஸமூக வாழ்க்கைத் துறையிலும் அதே காட்சி அற்புதங்களை நிகழ்த்தும் திறமுடையதாகும். அது இந்து ஜன ஸமூகத்திற்கு மறுபடியும் இளமையை ஊட்டி, மனித வர்க்கத்தின் ஞான முன்னேற்றத்திற்காக நிலையான உதவியை அளிக்கும் திறனையும் நல்குவதாகும். அதிகாரத்திற்காகவும்

உரிமைக்காகவும் சிறுமைபற்றி நடைபெறும் போட்டி ஒழிக்கப்படல் வேண்டும். துறவையும் தொண்டினையும் இரு கண்களாகக் கொண்டு பொலிந்த மிகப் பழமை வாய்ந்த வாழ்க்கைத் திட்டத்தை மறுபடியும் உயிர்ப்பிக்க வேண்டும். கடமையைப் பற்றிய உணர்ச்சி பண்டுபோல உரிமையைப் பற்றிய உணர்ச்சியைவிடத் தலைசிறந்து நிற்றல் வேண்டும். ஸமூக வாழ்க்கையினுள்ளும், தனி மனிதர்கட்கும் வகுப்பினர்க்கும் உள்ள தொடர்புகளும் அக்கொள்கைக்கு இயைந்த முறையிலே திருத்தி யமைக்கப்படல் வேண்டும். ஒவ்வொரு மனிதனும், மகனாயினும் வேலைக்காரனாயினும், இறைவனின் அம்சமே யாவான்; அந்நிலையிலே அவன் தக்க மரியாதையோடு நடத்தப்படவேண்டும். ஜாதிகளிற் பல வகைகள் இருக்கலாம்; ஆயினும் அவற்றுக்குள்ளே எவ்விதப் பகையும் வஞ்சினமும் இருக்கக்கூடாது. ஒவ்வொரு வகுப்பும் புனிதமுடையதே. ஒவ்வொன்றுக்கும் அததற்குரிய இடமும் தொழிலும் உண்டு. இந்துக்களின் வாழ்க்கையெனும் இன்னிசையை உண்டுபண்ண ஒவ்வொன்றும் தன் தன் சுருதியை எழுப்பிக்கொண்டேயிருத்தல் அவசியம்; ஆதலின் தக்க மதிப்போடு ஒவ்வொன்றும் நடத்தப்பட வேண்டும். ஒன்றையும் தாழ்த்தி வைத்தல் தகாது. ஒவ்வொரு வகுப்பும் பண்பாட்டை உயர்த்துதற்கான வகையில் முயலத் தடையிலா வசதியைப் பெற்றிருக்க வேண்டும். தீண்டாமையைப் போன்றவை என்றைக்கும் கண்டித்து விலக்கப்பட வேண்டும். இந்நாளைய இந்துக்கள் தமது மதத்தின் அடிப்படைக் கொள்கைகளைக் கடைப்பிடித்து, இவ்வாறு தமது ஸமூகத்தைப் புதிய வகையில் திருத்தியமைக்க வேண்டிய அவசியத்தை மேலும் மேலும் நன்குணர்ந்து வருகின்றனர்.

இந்தத் தடவை இதோடு மட்டும் அவர்கள் திருப்தியடைந்துவிடாமல் இன்னும் முன் செல்லலாம். அங்ஙனம் நமது ஸமூகம் ஒழுங்காகத் திருத்தியமைக்கப்பட்டதன் பயனாகப் புத்துயிர் பெற்ற பின்னர், பலவற்றுள் ஒருமை

யைக் காணும் தமது காட்சியை அவர்கள் பரந்த நோக்கோடு தமது ஸமூகமெனும் கட்டுப்பாட்டுக்கும் அப்பால் செலுத்திப் பயனடைவார்கள் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது. தன்னலமற்ற பணி இயற்றல் எனும் நமது தருமம் இந்நிலவுலகில் எண்டிசைகளிலும் பரந்து விளங்கப் போகின்றது என்றும் தோன்றுகிறது. ஜாதிகளும் மனித இனங்களும் சமூகங்களும் இவைபோன்ற பிறவும் பலவாறு வேறுபட்டிருக்கலாம். மனிதர்களின் தொகுதிகளில் உள்ள அத்தகைய வேறுபாடுகள் முழுமனித வர்க்கத்தின் அழகையும் வளத்தையும் மிகச் செய்கின்றன. அவை ஒவ்வொன்றின் வாயிலாகவும் இறைவனே தன்னை வெளிப்படுத்தி வருகின்றனன். ஒவ்வொன்றும் இறைவனுற் படைக்கப்படும் ஒரு மாதிரியைக் குறிக்கின்றது, ஒவ்வொன்றும் புனிதமானது. ஒவ்வொன்றும் நிறைவேற்றுதற்குரிய பணியொன்று உள்ளது. மனித வளர்ச்சிக்காகப் பயன் பொதிந்த யாதேனும் ஒன்றை ஒவ்வொன்றும் அளித்தாக வேண்டும். எல்லா மத வேறுபாடுகட்குள்ளும் அடியிலே உறையும் தெய்விக ஒருமையென்னும் மூலாதாரமான கொள்கை—இந்து சாஸ்திரங்கள் போதித்துள்ள இக்கொள்கை — இனிப்புறக்கணிக்கப்படப் போவதில்லை.

எவரையும் பகைத்தலோ, துன்புறுத்தலோ, எவ்விதமாகவேனும் எவர்க்கும் தீங்கிழைத்தலோ தகாது. அனைவர்க்கும் அவரவர் செல்லும் வழிகளில் இடையூறு நேரும் போதெல்லாம் அவற்றை நீக்குதல் மூலம் இயன்றவரை நாம் உதவி புரிதல் வேண்டும். ஜாதி கொள்கை மனித இனம் நாடு என்னும் வேறுபாடின்றி, ஸமூக இயல் பொருளாதார இயல் அரசியல் ஞானம் எனும் துறைகளில் அனைவர்க்கும் தன்னலமற்ற பணிசெய்தலை நமது மதம் நம்மிடம் எதிர்பார்க்கின்றது. இதுவே நமது தருமம். நமது சொந்த ஸமூகத்தின் எல்லைக்குள் நமது பணியைச் சிறைப்படுத்தி

வையாது, உலகமெங்கும் அப்பணியைப் பரவச் செய்தல் வேண்டும். 'மிலேச்சர்' 'யவனர்' என்னும் மொழிகள் பகையையும் செருக்கையும் புலப்படுத்தும் அறிகுறிகளாதலின், அவை இந்து மதத்தின் உயர் நிலைக்கு ஒத்தவையல்ல. ஞானம் கேடடைந்து வந்த ஏதோ ஒரு காலத்து அவை உற்பத்தியாயிருத்தல் வேண்டும். அனைவரையும் பரம்பொருளிடத்தும் பரம்பொருளை அனைவரிடத்தும் காணுதலையே இலக்ஷியமாகக் கொண்டவர் இந்துக்கள்; அந்நிலைக்கு ஒரு சிறிதும் ஒவ்வாதசிறுமைக்கு அம்மொழிகள் எடுத்துக்காட்டாகின்றன. நெருங்கிய எதிர்காலத்தில் இந்துக்கள் அம்மொழிகளைக் கண்டித்து ஒழித்து, ஒவ்வொரு மனித உயிரையும் நாராயணனாகக் (இறைவனாகக்) கருத வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இந்துக்கள் தமது மிகத்தொன்மைவாய்ந்த உபநிடதங்களின் உன்னத உபதேச மொழியால் ஆவேசம் பெற்று, அனைவர்க்கும் தன்னயமற்ற பணி செய்வதன் மூலம், பாரிலுள்ள பல்வேறு மக்களினங்களையும் தமக்குள் அடங்கியிருக்கும் தெய்விக ஒருமையை உணரச் செய்யவும், அவ்வாறாக உலக முழுவதிலும் அதுவரை கண்டிராத ஓர் இணையற்ற ஒற்றுமை இன்னிசையை உண்டாக்கவும் திறமையுடையவராவர். ஒருகால் இப்பணியை இயற்றுவதற்காகவே இந்துக்கள் இன்றுவரை நிலவுலகில் வாழ்ந்துவருகின்றனரோ என்று எண்ணவும் இடமுண்டாகிறது.

———

# பொருளகராதி


## அ

அக்கினிபுராணம் - 19
அகஸ்தியர் - 2
அத்தியாசம் - 194 : அதன் முடிவு - 194
அத்துவிதம் : அதன்படி சிருஷ்டி - 165 மு. 170 வ; அதன்படி ஆன்மா - 182 மு. 184 வ
அதர்வவேதம் - 15, 198
அதிகாரவாதம் - 226
அந்தர்யாமித்வம் - 220, 226
அரிச்சந்திரன் - 216
அருச்சுனன் - 20, 104, 105, 106, 107, 118, 216
அவதாரம் - 85, 124 மு. 131 வ; தொகை - 128; பரிணும முறை - 129; அதன் தெய்வத் தன்மை - 129
அவித்தை - 73, 116; அதனுல் சிருஷ்டி - 166, 167, 193
அவியக்தம் - 151, 164, 179; அதன் சிருஷ்டி - 163 மு. 167 வ; அதன் சக்திகள் - 166; ஈசுவர உபாதி - 183
அன்பு - அதன் வலிமை - 80; அன்புநெறி - 81
அனுமான் - 89

## ஆ

ஆகமம் - 21, 22
ஆகாசம் : ஒலி மூலம் - 158; ஒலி பிறக்கும் முறை - 160, 161
ஆசனம் - 58
ஆசாரியர் - 130
ஆசை: காரணம் - 114
ஆத்மசுத்தி - 205, 206
ஆதி - 208
ஆரியர் உறைவிடம் - 1, 2
ஆரிய தருமம் - 1 (இந்து மதம்)
ஆரிய ஸமாஜம் - 4, 44
ஆரியாவர்த்தம் - 1
ஆன்மா: இயல்பு - 76; உடல்கள் - 179
ஆனந்தம் பலவகை - 36

## இ

இந்து - 1; பெயர் - 2; பண்பாட்டில் ஞான அடிப்படை - 2, 3, 9; மதத்திற்குக் கொள்ளும் பொருள் - 5 மு 12 வ; சாத்திரங்கள் - 13 மு. 22 வ; காணும் வாழ்க்கைக் காட்சி 220 மு. 239 வ.

இந்து சனஸமூகம்: அதன் அடிப்படை - 220; அழியாத காரணம் - 222

இந்து மதம்: பழமை - 1; பரவல் - 3, 4; கிளை மதங்கள் - 4; அடிப்படைப் போதனை - 12; பிரிவுகள் - 3, 44, 138, 139; மேற்றிசையில் - 6; மனிதனின் தெய்வத் தன்மையைப் போதித்தல் - 5 மு. 8 வ. குரு - 11 57; ஸகுணப் பிரம்மம் - 91, 94; 95; முக்கிய அம்சங்கள் - 124, 125; மதகுரவர் - 124 மு 131 வ; அவதாரம் - 127, 128; சாஸ்திரங்கள் -

131, 132; ஆத்மீய உண்மைகள் - 133 மு. 135 வ; கடவுள் - 133 மு. 143 வ; அதன்படி பரிணாமம் - 162, 165; கிரியைகள் - 196 மு. 209 வ; புராணம் - 196 மு. 259 வ; அடிப்படை இயல்புகள்-220 மு 237 வ; பலவற்றுள் ஒற்றுமை - 227 மு. 233 வ; விழிப்பும் பணியும்-234 மு. 239 வ.
இந்துஸ்தானம் - புனிதநாடு - 2, 3
இரகுநந்தனர் - 17
இரண்யகருப்பர் - 143 மு. 146 வ; 145, 189; சிருஷ்டி - 145 மு. 148 வ, 154 ; ஐவர்- 173, 175; ஈசர் - 178, 183, 195
இராதை - 90
இராமகிருஷ்ணர் - 54, 100, 128, 130, 140, 142, 236
இராமபிரசாதர் - 100
இராமர் - 85, 89, 128, 216, 217, 218
இராமாயணம் - 19, 211, 217
இராவணன் - 217
இராமானுஜாசார்யர் - 18, 22, 131
இராஜயோகம் - 57 மு 65 வ; விஞ்ஞானச் சார்புடையார்க்கு ஏற்றது - 57; அங்கங்கள் - 57 மு 65 வ; ஆபத்துக்கள் - 64 மு. 66வ; 225
இலக்குமணன் - 216
இலிங்க வழிபாடு - 203, 204
இஷ்ட நிஷ்டை - 89 மு. 92வ.
இஷ்டா பூர்த்தம் - 40

ஈ

ஈசுவரன் - 133 மு 143 வ; பிரபஞ்ச கர்த்தா - 136 ; பிரம்மனே - 137; நிலைகள் - 139 ; நிமித்த உபாதான காரணம் - 164; சமஷ்டி காரண உடல் - 191
ஈசுவர ஸம்ஹிதை - 22
ஈசோபநிடதம் - 6, 16, 136, 235

உ

உடல்கள் (தூலம், சூக்குமம் 24 மு. 26 வ; 75, 179, 180
உத்தரமீமாம்சை - (வேதாந்தம் பார்க்க)
உபநிடதம் - 15, 122, 234, 235
உபாசனை ; ஸகுணம் - 102 ; நிராகாரம் - 100, 103
உபாதிகள் - 183
உரிமை: கடமை - 230
உலகங்கள் : வகை - 174 ; அதிஷ்டான தேவதை-177
உவமைக்கதைகள்:குருடரும் யானையும் - 141; ஓந்தி-141
உறக்க நிலை (சுழுத்தி) - 145, 146

எ

எனது : இதன் தவறான பொருள் - 71, 72, 77

ஐ

ஐதரேய உபநிடதம் - 16, 164

ஒ

ஒலியுணர்ச்சி-158; தூல ஒலி- 159; நுண்ணிய ஒலி - 139

க

கடஉபநிடதம்-26, 54, 68, 74, 77. 135, 179, 181, 187

கடவுள் : அந்தர்யாமி-6, 226, 227; அவரிடம்பிரார்த்தனை-41; பக்தி - 80, 81; குறியில் வழிபடல் - 85 மு. 88 வ. ஸகுணம் - 91, 94, 95. 137, 138; ஸகுணக் கடவுள் வழிபாடு - 100 மு. 104 வ; கரும யோகத்தில்-118 மு. 121வ; அவதாரம் - 55, 127, 128 ; இயல்பு - 133 மு. 143 வ; சிருஷ்டி - 145, 149, பரிணமம் - 162; பிரம்மன் இரண்யகருப்பர், ஜீவர்-181 மு. 184 வ.

கணாதர் - 18
கர்ணன் - 216, 218
கருமநியதி - 26 மு. 29 வ
கருமம் : செய்யக் காரணம் - 112 ; உவகை - 192 ; அதனால் சித்தசுத்தி - 112; துறவிக்கும் இல்லறத்தார்க்கும் - 123
கருமயோகம் - 104 மு. 124 ; கீதையில் - 107 ; 107, 108, 111, 115 ; அதில் பல இச்சை - 112 ; எளிதன்று - 114 ; ஞான யோகத்தோடு இணைப்பு - 117 ; இல்லறத்திற்கு - 118 மு. 120 வ. அதன் விசித்திர முறை - 121; துறவிகட்கும் உரியது- 123
கல்கி - 128
கனவு நிலை - 148
காந்தாரி - 216
காணபத்யம் - 4, 44
கிரியை : நோக்கம் - 198 ; மாய வித்தைக் குரியவை - 198; பிராணப்பிரதிஷ்டை- 200 ; அந்தர்யாமியைப் பற்றியவை - 201, 202, 203, தாத்திரிக பூஜைக்கு - 205 மு. 209 வ.
கிருஷ்ணர் - 20, 24. 54, 56, 83, 85, 90, 104; 105, 106, 118, 123 128, 138, 216, 217. 218
கிறிஸ்து - 128
கீதை - 20, 23, 24, 25, 33, 34 45, 54, 70. 76, 83, 108, 109, 110, 113, 114, 117, 118, 122 ; கருமயோகம் - 104 ; யோகத்தைப் பற்றி ; 107, 108, 136, 138, 145, 181, 219, 230
குரு - 11, 88, 89
குலராஜதந்திர - 21
குலார்ணவதந்திர - 21
கேன உபநிடதம் - 16, 135
கோதமர் - 18
கௌஷிதகீ உபநிடதம் - 177

ச

சக்தி - (தேவி) வழிபாடு - 21; 94 மு 97 வ; பிரம்மனுடன்- 137
சங்கராசாரியார் - 18, 128, 131
சண்டி - 19, 128. 219
சம்யமம் - 62
சம்ஸாரம் - 22 மு. 29 வ.
சமநிலை - 110
சமயகுரவர் - 125
சமாதி - 61, 62, 63 ; நிர்விகற்ப - 77
சன்னியாசமும் கருமயோகமும் 113, 114, 122, 123
சாக்தர் - 4, 44, 139
சாங்கியம் - 18
சாந்தோக்ய உபநிடதம் - 12,

16, 31, 134, 164, 189, 190, 191, 193
சாவித்திரி - 216
சாஸ்திரம்: பொருள் - 131, 132, 133
சித்த சுத்தி - 113
சித்திகள் - 64, 65, 66
சிரவணம் - 70
சிருஷ்டி - 145; முறை - 148; பிரளயமும் - 153; அத்வைதப்படி - 166 மு. 170 வ; அதன் ரகசியம் - 171 மு. 173 வ
சீதை - 89, 130, 216
சுருதி (வேதம் - பார்க்கவும்.)
சுவாமி விவேகாநந்தரது நூல் தொகுதி - 163, 204
சுவேதாஸ்வதார உபநிடதம்- 16, 66, 87
சுழுத்தி - 75, 76, 145, 146, 189, 190, 191
சூத்திரர் - 45
சைதன்யர் - 128, 130
சைவர் - 4, 44, 139

ஞ

ஞானசாதனசாரம் - 224
ஞானயோகம்: அதன் பொருள் - 67; அதற்குரிய தகுதி - 69; அதன் மூன்று படிகள்: சிரவணம் - 70, மனனம் - 70; நிதித்யாசனம் - 27; கருமயோகத்தோடு இணைந்த நிலை - I17
ஞானாமிருதஸாரசங்கிரகம் - 22
ஞானியின் மேன்மை - 8, 9

த

தந்திரம்: சாஸ்திரங்கள் - 94; பெயர்கள் - 21; சாதனம் - 92, 93, 94; கிரியை - 96 - பொது இயல்புகள் - 94, 96, 97; மந்திரங்கள் - 97; சாதனங்களின் ஆபத்து - 100; பூஜை - 205 மு. 209 வ.
தந்திர ராஜதந்திரம் - 21
தயாநந்தசரஸ்வதி - 44
தருமம் - 5 மு. 12 வ; 125, 229, 230, 237, 238, 239; தருமசங்கடம் - 218
தன்மாத்திரை - 150, 151
தாரணை - 61
தியானம் - 61; நிராகாரம்-103
துளசிதாஸர் - 78
துறவு: அடைய ஒரே வழி - 224
தேவதைகள் 143
தேவலோகங்கள் - 36, 37, 38
தேவயக்ஞம் - 38, 43, 45, 50
தேவி - 95 (சக்தி - பார்க்க)
தொண்டு (இந்து மதத்தில்) - 229 மு. 231 வ.
தோராள தந்திரம் - 21
தைத்திரிய உபநிடதம் - 16, 37, 91. 102, 134. 136, 181
தைஜஸன் - 189, 192

ந

நாரதபாஞ்சராத்ர - 22
நான்: இதன் உண்மைப் பொருள் - 71; தவருன் பொருள் - 74
நிகமம் - 21
நிதித்தியாஸனம் - 77
நியமம் - 53
நியாயதரிசனம் - 18
நிர்க்குண உபாசனே - 137
நிர்விகற்பசமாதி - 77
நிராகார உபாசனே - 100, 103

நிருயக்ஞும் - 39
நிவிருத்தி மார்க்கம் - 35; 50 மு. 124 வ.

ப

பக்தியோகம்: உதாரணம் - 78; இருவகை பக்தி - 82; விதிக்கும் சாதனம் - 83, 84; கௌணிபத்தி - 88; தாந்திரிக பக்தி - 92 மு. 100 வ.; பக்தி பாவனே 90; கருமயோகத்தோடு இணைப்பு - 115, 118
பகவான் வடிவங்கள் - 84
பஞ்சீகரணம் - 152
பரதன் - 216, 218
பரபக்தி - 82, 91, 92
பரிணுமவாதம் - (இந்து மதப் படி) - 162, 165
பலவற்றுள் ஒற்றுமை: இது விதி-227, 228, 231, 233, 236,
பாகவதம் - 19, 128, 218
பாஞ்சராத்திர ஸம்ஹிதை-21
பாத்ம புராணம் - 19
பாதஞ்சல யோக சூத்திரம் - 18, 162
பாரதப் போர் - 104
பிதிர்யக்ஞும் - 38, 39, 50
பிதிர்லோகம் - 36, 177
பிரகிருதி - 109; உண்மைக் கருத்தா - 117, 163
பிரத்தியாஹாரம் - 59, 60, 61
பிரதிகை - 86, 102
பிரதிமை - 87, 103
பிரபஞ்சம்; இதன் தோற்றம்- 136; இதன் இருவகை-156
பிரபஞ்ச ஸார தந்திரம் - 21
பிரம்மம்-(ஈசன்)-77; ஸாகாரம், நிராகாரம் - 101, 102, 103, 109; நிர்க்குணம், ஸகுணம்- 133 மு. 143 வ.; படைப்புக்கு மூலம்-165 மு. 172 வ.
பிரம்ம சூத்திரம்-18, 69, 73
பிரம்மயாமள தந்திரம்- 21, 68
பிரம்மலோகம் - 36, 165
பிரம்மா - 145; படைப்பு - 148 மு. 152 வ.; 163, 165, 163மு. 177 வ; 213, 215; உடல், உயிர் - 149, 150
பிரம்மாண்டம்-144 மு.173 வ.
பிரளயம் - 145 மு. 148 வ. வகைகள் - 147; சிருஷ்டியோடு மாறி மாறிவரல்-183 கதைரூபவிளக்கம்-212,214
பிரவிருத்தி மார்க்கம் - 35, 36 மு. 50 வ. 52, 53 தந்திரத்தில் - 93; 64, 65, 66 225
பிரஹத்பிரம்மஸம்ஹிதை- 22
பிரஹதாரண்யக உபநிடதம்- 16, 68, 134, 136, 179, 181. 183, 188, 190, 191, 192
பிராக்ஞன் - 191, 192
பிராணப்பிரதிஷ்டை - 200
பிராணன் ஐந்துவகை - 150, 161, 180
பிராணுயாமம் - 58
பிராம்மணம் - 15, 210
பிராரப்தகருமம் - 28, 29
புத்தர் - 128
புத்தமதம் - 324
புத்தி - 74, 76; ஜீவாத்மா - 183 மு. 187 வ; 184, பிரதிபிம்பம் 185
புராணம் - 210, 211; படனம் - 211; பயன் - 212; அடங்கிய தத்துவங்கள் - 213, 214, இலக்ஷியங்கள்-216; ஞானச் சுரங்கங்கள் - 216; 217; அதன் சக்தி-212 மு. 215வ.

பூதங்கள் - 150 மு. 158 வ.; அவற்றின் குணங்கள் - 155
பூதசுத்தி - 206
பூதயக்ஞம் - 38, 40
பூர்வமீமாம்சை - 18, 35
பூரணநிலை வழிகள் - 225

ம

மகம்மது - 128
மதமும் (தருமமும்)-6 மு 12வ.; அதன் பொருள்-5,6, அதன் கீழான நிலை - 9. 10; அதன் இலக்கியம் - 11
மந்திரங்கள் - 88, 97
மறுபிறப்பு - 22 மு. 29 வரை
மனம் : சுத்தி - 32 மு. 35 வ; ஞானக்காட்சி - 196, 197; சுத்திக்காகக் கிரியைகள் - 198
மனனம் - 70 மு. 77 வ.
மனிதனது தெய்வத்தன்மை - 222, 223
மனு - 16
மஹாநிர்வாண தந்திரம் - 21
மஹாபாரதம்-19,211, 217,219
மஹாவீரர் - 216
மாண்டுக்ய உபநிடதம் 16
மானவதருமம் - 6, 7
மாயை - 101, 109, 118, 126, 166; அதனால் உலகம் - 167 மு. 170 வ.
மார்க்கண்டேய புராணம்-19, 128, 219
மீராபாய் - 90
முண்டக உபநிடதம் - 16, 49, 51, 53, 67, 68, 79, 136, 185, 189
முத்தி - 29 மு. 35 வ; இலக்ஷியம் - 31 ; வழி-31மு 35 வ ; 67; இருவகை - 195

ய

யக்ஞம் - 15, 38 மு. 40 வ, 43; பஞ்சயக்ஞம் - 38 மு. 42 வ.
யசோதை - 90
யந்திரம்-யந்திரி பாவனை-118
யமம் - 58
யாக்ஞவல்கியர் - 16
யாமுனாசாரியார் - 22
யான் எனது - 116
யோகம்-15;பெறும்வகையும்-56; கீதையில் இலக்ஷணம்-107, 108 (கருமயோகம், பக்தியோகம், இராஜயோகம், ஞானயோகம -பார்க்கவும்)
யோகசித்திகள் - 65

ர

ரிக்வேதம் - 24, 136, 140, 163, 171, 214, 220
ரிஷிகள் - 24, 125, 220, 221
ரிஷியக்ஞம் - 38, 39
ருத்ரயாமள தந்திரம் - 21

வ

வசிஷ்ட - 216
வர்ணாசிரமமுறை இலக்ஷியம்-40 மு. 42 வ; இருக்கிறபடியே 42 மு. 48 வ;இருக்கவேண்டிய முறைப்படி - 48 மு. 50 வரை.
வாமக்ஷேபர் - 100
வாயுபுராணம் - 19
வால்மீகி - 19
விக்கிரகஆராதனை(பிரதிமை பிரதிமை - பார்க்க)
விகாசமுறை - 162, 163; (பரிணாமம் - பார்க்க)
விச்வன் - 189, 192
விசிஷ்டாத்வைதம்: அதன்படி சிருஷ்டி - 165; அதன்படி ஜீவன் - 181, 182

விதுரர் - 216
விபீஷணர் - 218
வியாசர் - 18, 19
விராட்புருஷர் - 153, 178, 189
விஸ்வமங்களர் - 78
விவர்த்தம் - 165, 166
விவேகாநந்தசுவாமி: ஆரியரது உறைவிடம்பற்றி - 2; துறவைப் பற்றி - 54, 131
விழிப்புநிலை - 188, 189
விஷ்ணுப்பிரியை - 130
விஷ்ணுபுராணம் - 19
விஷ்ணுயாமள தந்திரம் - 21
வேதம்: பிரமாணமும் இயல்பும் - 13 மு. 16 வ; 132, 222; வழிபாடு - 15; மதத்திற்கு அடிப்படை - 109
வேதாந்தம் (உபநிடதம் பார்க்க) - 18
வேதாந்த ஸாரம் - 177
வைச்வானரன் - 189
வைசியர் - 45
வைசேஷிக - 13
வைணவர் - 4, 44, 85, 94, 139

ஸ

ஸ்காந்தம் - 19
ஸ்மிருதி-16, 17, 132, 133, 221
ஸத்வதஸம்ஹிதை - 22
ஸம்ஹிதை - 15
ஸௌரம் - 4, 44

க்ஷ

க்ஷத்திரியர் - 40

ஜ

ஜனகர் - 113, 122
ஜீவன்: இருப்பிடம் - 74; சிருஷ்டி - 154, 173 மு. 195 வ; அதன் பொருள் - 173; ஸம்ஸாரத்தில் - 174; கணக்கற்ற ஜீவர் - 175; ஜீவான்மா - 179 மு. 181 வ; அதுவும் பரமான்மாவும் வேறு - 181, ஒன்று - 182, 183; மூன்று நிலைகளில் அதன் வாழ்வு - 188, 189 190, 191; அதன் உடல்கள் - 189 மு. 192 வ; அதன் பிரமாணங்கள் - 192, 193; அதன் முத்தி - 194, 195
ஜீவன் முத்தர் - 195
ஜைமினி - 17
ஜைன மதம் - 3

ஹ

ஹோமம் - 209

---

## திருத்தங்கள்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 49 | 10 | மாண்டுக்ய | முண்டக |
| 51 | 18 | மாண்டு | முண்டக |
| 67 | 30 | மாண்டு | முண்டக |
| 68 | 2 | மாண்டு | முண்டக |
| 70 | 17 | மாண்டு | முண்டக |
| 135 | 9 | கட உபநி 1-2 | கேன உபநி 1-1-2 |

---

